# முகவுரை

''புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில'' என்ற இப்புத்தகத்திற்கு முகவுரை எழுதவேண்டும் என நான் கேட்டுக்கொள்ளப்பட்டபோது, அது என்னை பழைய நினைவுகளுக்கு கொண்டுசென்றது. 16 வயதில் ஏராளமான வியாதிகளை என்னுடைய சரீரத்தில் சுமந்து கொண்டு, மன சமாதானமற்று அலைந்த ஒரு வாலிபனாக இருந்த என்னை கர்த்தராகிய இயேசு தெய்வம் அதிசயமாக சுகப்படுத்தி, சொல்லிமுடியாத இரட்சிப்பின் சந்தோஷத்தை கட்டளையிட்டதை எண்ணி தேவனை உயர்த்துகிறேன்.

என்னுடைய மூத்த சகோதரர் எஸ். சுந்தரர்ராஜ் அவர்களின் மூலமாக நான் இந்த இரட்சிப்பை பெற்றேன். ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்து, அவருடன் இணைந்து இந்த தெய்வீக ஊழியத்தை செய்ய தேவன் தந்த கிருபைக்காக தேவனை துதிக்கிறேன். ஏறத்தாழ நாற்பத்தாறு வருடங்கள் தேவனின் அதிசயமான வழி நடத்துதலை எங்கள் ஊழியப்பாதையில் பிரத்தியட்சமாக ருசித்திருக்கிறோம். தேவன் மிகவும் நல்லவர், அதிசயமானவர், கைவிடாதவர், இன்றைக்கும் அவர் மீது விசுவாஸமுள்ள மக்களை நடத்துகிறவர் என்பதை தெள்ளந்தெளிவாக அறிந்திருக்கிறோம்.

நம் அருளநாதர் இயேசுவின் மூலம் பெற்ற இரட்சிப்பை உலக முழுவதும் பிரசித்தப்படுத்தவும், அவருடைய சரீரமான ''புதிய எருசலேம் சபையை'' எங்கும் ஸ்தாபிக்கவும், எங்களை தேவன் அதிசய விதமாய் வழிநடத்தி வந்தார். இந்த ஊழியத்தை சேர்ந்து செய்த வந்த நாட்களை நினைக்க நினைக்க நெஞ்சமெல்லாம் தேவஅன்பில் களிகூரும்.

இந்த ''ஊழிய நடபடிகள்'' புத்தகமாக வெளிவர வேண்டும் என்று விரும்பி பாஸ்டர். மரியஜோசப் அவர்கள் அனுமதி கேட்டபோது, பாஸ்டர் எஸ். சுந்தரர்ராஜ் அவர்கள் மகிழ்ச்சியோடு சம்மதம் தெரிவித்ததுமன்றி, இது சம்மந்தமான குறிப்புகளையும் தொகுத்து அனுப்பினார்கள். பாஸ்டர் மரியஜோசப் அவர்களும் இந்த புத்தகத்தை நிறைவு செய்யும் நிலையில் வந்துவிட்ட சமயம், என் சகோதரர் பாஸ்டர் எஸ். சுந்தரர்ராஜ் அவர்கள் தேவனால் அழைப்பு பெற்று, இப்பூவுலகம் விட்டு பரலோகம் சென்று விட்டார்கள். பரிசுத்த ஆராதனை செய்துக்கொண்டு இருக்கும்போதே தேவனின் அழைப்பு அவருக்கு வந்துவிட்டது. அவர் அடிக்கடி சொல்லுவது போல ''கடைசி மூச்சு இருக்கும் வரை கர்த்தருக்காக உழைக்கவேண்டும், தேவனை ஆராதிக்க வேண்டும்'' என்ற அவரின் ஆசையை தேவன் அவருக்கு நிறைவேற்றிக்கொடுத்தார். தேவனுக்கே மகிமை உண்டாவதாக!

அவர் என்னுடைய சகோதரர் மட்டுமல்ல. என்னுடைய ஆவிக்குரிய

தகப்பன். அவரோடு இணைந்து ஊழியம் செய்த நாட்களை பொற்காலங்களாக நினைக்கிறேன். அந்த நினைவலைகள் இந்த புத்தகத்தில் இடம் பெறுவதை பார்க்கிறேன். இப்புத்தகம் வெளியிடும் இச்சமயம் அவர் இல்லை என்றாலும், அவருடைய ஆத்தும பாரம், தேவ வைராக்கியம், தேவனின் மேலுள்ள விசுவாசம் இவைகள் இப்புத்தகத்தில் இழையோடுவதை மனதார உணர்கிறேன்.

இப்புத்தகத்தை படிக்கும்போது தேவனுடைய பிள்ளைகள் தேவனைக்குறித்த உணர்வடையும்படியாகவும், புதிய எருசலேம் சபையின் மேன்மையை அறிந்து கொள்ளும்படியாகவும், ஆத்தும பாரம் கொள்ளவும், தேவனுக்காக கடைசி மூச்சுவரை உழைக்கவும் இப்புத்தகம் தூண்ட வேண்டும் என்பதே என்னுடைய மன வாஞ்சையும் ஜெபமுமாகும்.

இப்புத்தகம் எங்களை அல்ல, மிகவும் அற்பமான எங்களையும் அழைத்து இரட்சித்து இதுவரை பயன்படுத்தி வருகிற நம்முடைய இரட்சகராகிய இயேசுவை மட்டுமே உயர்த்திக் காண்பிக்க வேண்டும் என்பதே என்னுடைய தீர்க்கமான ஆவலாகும்.

''புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில'' என்ற இப்புத்தகம் ஏராளமானவருடைய ஆவிக்குரிய வாஞ்சையை அதிகரிக்கவும், தேவனுக்காக கிரியை செய்ய முன்வரும்படி அவர்களைத் தூண்டி, அநேகரை தேவனுக்கு ஊழியம் செய்கிறவர்களாக மாற்றும் என்று விசுவாசிக்கிறேன்.

தேவனே அதை வாய்க்கச் செய்வாராக!

கிறிஸ்துவின் பணியில்

**பாஸ்டர் S. ஏசுதாஸன்**

புதிய எருசலேம் சபை

நாகர்கோவில்

# பதிப்புரை

தேவ ஜனங்களின் மத்தியில் ஒரு எழுப்புதலை உண்டு பண்ணவும், தேவனுடைய இராஜ்ஜியமாகிய அவருடைய சரீரமான திருச்சபையானது தீவிரமாக பரவவேண்டும் என்கிற நோக்கத்தோடு, ''புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில'' என்ற இந்த புத்தகத்தை தொகுத்து வழங்குவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

''புதிய எருசலேம் சபையின்'' மேன்மையை குறித்து, அதை எங்கும் ஸ்தாபிக்க எடுக்கப்பட்ட பிரயாசங்கள் மற்றும் இதே நோக்கத்தோடு உழைத்த பரிசுத்தவான்களின் ஊழிய அனுபவங்கள் குறித்து எல்லோரும், குறிப்பாக திருச்சபையார் அறிந்துகொள்ள வேண்டும் என்கிற 'தாகமே' இந்த புத்தகத்தை தொகுத்து வெளியிட தூண்டியது.

இதற்கான அனுமதியை கோரியபோது பாஸ்டர் எஸ். சுந்தரர்ராஜ் ஐயா அவர்கள் மகிழ்ச்சியோடு சம்மதம் கொடுத்தார்கள். மேலும் என்னை ஊக்கப்படுத்தி இதற்கு தேவையான முக்கிய தகவல்களை தொகுத்து அனுப்பினார்கள். இப்புத்தகம் முழுமை அடையும் வேளையில் அவர்கள் இவ்வுலகில் இல்லை. அவர்களின் மறைவு மிகுந்த கவலையளிப்பதாக இருந்தாலும் இந்த புத்தகத்தில் அவர்களின் கிரியைகளைக் காணுங்கால், மனம் இறைவனை பற்றும் அன்பில் லயித்து துக்கத்தை மறந்து ஆவியில் எழுப்புதலடையும் என்பது திண்ணமே.

பிற்பாடு பாஸ்டர் எஸ். ஏசுதாஸ் ஐயா, அவர்களிடம் இப்புத்தகத்திற்காக முகவுரை எழுதக் கேட்டுக்கொண்ட போது, மகிழ்ச்சியுடன் முன்வந்து சிறப்பான முகவுரையை எழுதிக் கொடுத்தார்கள். அவர்களுக்கு மனம்நிறைந்த நன்றி சொல்லுகிறோம்.

இப்புத்தகம் உருவாக உற்சாகப்படுத்திய ஊழியர்கள், பண உதவி செய்து தாங்கிய எனது நண்பரும் ஊழியருமாகிய பாஸ்டர். நெகேமியா (சென்னை), பாஸ்டர். ஆசீர் (இலண்டன்) பாஸ்டர். எலியா, ஜெபத்தினால் தாங்கிய சபையார் மற்றும் அனைவருக்கும் எங்களின் மனமார்ந்த நன்றி!

அநேகருடைய மனதை கர்த்தருக்காக எழும்பி பிரகாசிக்க இப்புத்தகம் தூண்ட வேண்டும் என்பதே எங்களது எதிர்பார்ப்பும் ஜெபமுமாகும். தேவன் தாமே இப்புத்தகத்தை அவருடைய நாம மகிமைக்காக எடுத்து பயன்படுத்தி பலனை பெருகப்பண்ணும்படியாக பரிசுத்த ஆவியானவரின் வல்லமையான கரங்களில் ஒப்புக்கொடுக்கிறோம்.

**புதிய எருசலேம் சபை**

பெங்களூர்.

# பொருளடக்கம்

சாட்சி 1

# நாஸ்திகன் ஆஸ்திகனான கதை

## பாஸ்டர் S. சுந்தர்ராஜ்

நான் திருநெல்வேலி மாவட்டத்தில் மகிழ்ச்சிபுரம் என்ற குக்கிராமத்தில் ஒரு கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்து வளர்ந்தேன். சிறுவயதில் ஆலயத்திற்குச் செல்வதும் பைபிள் படிப்பதும், குடும்ப ஜெபத்தில் கலந்து கொள்வதுமாயிருந்தேன். நான் வளர்ந்து பெரியவனான போது வேலை தேடி பம்பாய் நகரம் போய் அங்கொரு தொழிற்சாலையில் வேலை செய்து வந்தேன். அங்கே சில அரசியல் நண்பர்கள் மூலம் அரசியலில் ஈடுபட்டு ஒரு அரசியல்வாதியாக மாறிவிட்டேன். என்னுடைய ஓய்வு நேரங்களை அரசியலுக்காக பாடுபடுவதில் செலவழித்து தொழிலாளர் வர்க்கத்துக்காக உயிரை வேண்டுமானாலும் தியாகம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடு செயல்பட்டு வந்தேன். சில முக்கிய பதவிகளையும் வகித்து வந்தேன்.

இப்படி இருக்க என் பெற்றோர்கள் எனக்கு விவாகம் செய்து வைக்க விரும்பி கிராமத்திற்கு அழைத்தார்கள். அப்படியே, ஊருக்குச் சென்றேன். பெற்றோர்கள் விருப்பத்திற்கு மாறாக, நான் விரும்பியபடி விவாகத்தை (கிறிஸ்தவ கோயிலில் வைத்து முடிக்காமல்) என் கொள்கையை நிலைநாட்ட விரும்பி பதிவுத் திருமணம் செய்து கொண்டேன். என் மனைவியோ பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்ற ஒரு விசுவாசியாய், தேவபக்தியுடையவளாய் இருந்தாள்.

திருமணமாகி, நாங்கள் பம்பாய் நகரம் வந்தோம். எனக்குக் கட்சியில் பெரிய மரியாதையும் வரவேற்ப்பும் காத்திருந்தது. எனக்கு குடும்பத்தை விட கொள்கையே சிறந்ததாக காணப்பட்டது. மாலையில் பணி முடிந்து திரும்பியதும் கட்சி அலுவலகத்துக்கு சென்றால் இரவு 12 மணிக்குத்தான் வீடு திரும்புவேன். ஞாயிறு விடுமுறை நாட்கள் முழுவதையும் கட்சி அலுவலகத்திலேயே கழித்து விடுவேன்.

இப்படியிருக்க என் மனைவி, நான் இரவில் வரும் வரை எனக்காக கண்ணீரோடே ஜெபித்து கொண்டிருப்பாள். ஒவ்வொரு நாளும் நான் இரவில் வந்து கதவைத் தட்டும் போது கண்களைத் துடைத்துக் கொண்டுவந்து கதவைத் திறப்பாள். உள்ளே ஒரு விரித்தப் பாயையும் அதன்மேல் ஒரு பைபிளையும் நான் காணுவதுண்டு. ஒரு நாள் அவளிடம் கூறினேன். ‘‘நீ எனக்காக ஜெபம் செய்யாதே. உங்கள் ஆண்டவரால் என்னை அசைக்க

முடியாது நாங்கள் ஆண்டவரையே அசைக்கிறவர்கள். நீ இப்படி விழித்திருந்தால் வியாதிவரும், ஆகையால் நேரத்தோடே தூங்கிவிடு'' என்று புத்தி கூறினேன். ஆனாலும், அவள் தன்னுடைய ஜெபத்தை விடவில்லை. இப்படி சுமார் ஆறு மாதங்கள் கடந்து போயிற்று.

ஒருநாள் இரவில் நான் கட்சி அலுவலகத்திலிருந்து வந்து கதவைத் தட்டினேன். என்னுடைய மனைவி கதவை திறந்துவிட்டு : அவசர அவசரமாகப் பாத்திரங்களில் எனக்கு உணவை எடுத்து வைத்துவிட்டு, ''எனக்கு கொஞ்சம் உடம்பு சரியில்லை, நீங்கள் சாப்பிட்டுவிட்டு ரெஸ்ட் எடுத்துக் கொள்ளுங்கள். நான் கொஞ்சம் படுத்துக் கொள்கிறேன்'' என்று கூறிவிட்டு போய்ப்படுத்துக் கொண்டாள். நான் சிரித்துக் கொண்டு, ''இரவு முழுவதும் விழித்திருந்து ஆண்டவரை தேடினால் இப்படித்தான் காய்ச்சல்வரும்; சரி நாளைக்கு டாக்டரிடம் போகலாம்'' என்று கூறிக் கொண்டே கை கால்களை அலம்பிக் கொண்டு உணவு அருந்திவிட்டு ஒரு தினசரி பத்திரிக்கையை புரட்டிக் கொண்டிருந்தேன்.

இரவு சுமார் 12.30 மணியளவில் என் துணைவியிடமிருந்து, ''அத்தான் தண்ணீர், தண்ணீர்'' என்றொரு சத்தம் வந்தது. ஸ்டவ்வை பற்றவைத்து கொஞ்சம் தண்ணீரை சுடவைத்துக் கொண்டு போய் எழுப்பினேன். ஆனால், என் துணைவியிடமிருந்து, சத்தமில்லை. அசைத்துப் பார்த்தேன் அதிர்ச்சியடைந்தேன். என் மனைவி இறந்துபோயிருந்தாள். நாசியில் கை வைத்துப் பார்த்தேன். நான் பல முயற்சிகள் செய்தும் பலன் இல்லை. உயிர் அவளைவிட்டு பிரிந்து விட்டிருந்தது.

என் உள்ளம் எனக்குள்ளே கதறியது. இத்தனை சீக்கிரம் என் வாழ்வின் விளக்கு அணைந்துவிடும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. கடந்த ஆறு மாதங்களில் அவளுடைய பெற்றோருக்கு நான் ஒரு கடிதம் கூட எழுதினதில்லை. என் மனைவியின் விருப்பப்படி நான் ஒருநாள் கூட வீட்டை விட்டு வெளியே எங்கும் அழைத்துப் போனதும் கிடையாது.

பணம், பதவி, புகழ் இதுவே வாழ்க்கையில் மனிதன் அடைய வேண்டிய இலட்சியம் எனக்கருதினேன். இத்தனையும் இருந்தும் என் துணைவி என்னை விட்டு பிரியாதிருக்க எனக்கு பதவிகள் உதவி செய்யவில்லையே என்று கண்ணீர் விட்டேன்.

பொழுது விடிந்தால் என் தோழர்களுக்கு இந்த செய்தி தெரிய வரும். உடலை நல்லடக்கம் செய்து விடுவார்கள். ஆனால் நான் இனி தனிமையில் தான் வாழவேண்டுமோ! என்று ஏங்கிக் கொண்டிருக்கும் பொழுது என் உள்ளத்திலிருந்து ஒரு வார்த்தை என்னோடு பேசினது. ''மரித்த லாசருவை நான்கு நாளைக்குப் பின் இயேசு உயிரோடு எழுப்பினார்'' என்ற வார்த்தையே

அது. நான் சிறு வயதில் பைபிள் படித்திருந்ததினால் இதன் அர்த்தத்தை உணர்ந்தேன். இப்பொழுது எத்தனையோ லாசருக்கள் மரிக்கிறார்களே, அவர்களை யாரும் எழுப்பவில்லையே, இதெல்லாம் சும்மா யாரோ மக்களை ஏமாற்றுவதற்காக எழுதப்பட்டது என்று என்னுடைய உள்ளத்தில் கேட்ட வார்த்தைக்கு என்னுடைய மனதிலேயே பதில் கொடுத்தேன். ஐந்து நிமிடம் கழித்து மீண்டும் அதே வார்த்தை, ''மரித்துப் போன லாசருவை நான்கு நாளைக்குப் பின் இயேசு உயிரோடு எழுப்பினாரே'' என்று, கொஞ்சம்கூட உரத்த குரலில் உள்ளத்தில் கேட்டது. இன்றைக்கு எத்தனையோ லாசருக்கள் சாகிறார்களே ஒருவரும் உயிரோடே எழுப்பவில்லையே! இதெல்லாம் சும்மா என்று மீண்டும் என் மனதுக்குள்ளேயே மறுமொழி கொடுக்கிறேன்.

என் மனதிலே ஒருவிதமான மயான அமைதி ஏற்பட்டது. மீண்டும் சில வினாடிகள் கழித்து, உரத்த குரலில் என் உள்ளத்தில் பேசின அதே வார்த்தை என் வாயைத் திறந்து பேசவைத்தது. என்னை அறியாமல் என் வாயினாலே, ''மரித்துப் போன லாசருவை நான்கு நாளைக்குப் பின் இயேசு உயிரோடு எழுப்பினாரே'' என்று சத்தமிட்டுக் கூறி, நான் உட்கார்ந்திருந்த நாற்காலியோடு கீழே விழுந்தேன். என்னிலுள்ள பெலன் எல்லாம் அந்த சத்தத்தோடு வெளியே போய்விட்டது. போல் தெரிந்தது. நான் கீழாகவும் நாற்காலி என் மேலேயும் விழுந்து கிடந்தது.

இப்பொழுது, என் சிறுவயது முதல் இதுவரையிலும் செய்து வந்த எல்லா பாவங்களும் என் கண்முன்னே சினிமா போல ஓடிக்கொண்டிருக்கிறது. அநேக கிறிஸ்தவ வாலிபர்களை நான் நாஸ்திகர்களாக மாற்றி இருக்கிறேன். ஒரு கிறிஸ்தவ நண்பனிடம் கடவுள் கிடையாது. அதெல்லாம் ஏமாற்றுவேலை, ''செய்யும் தொழில்தான் தெய்வம்'' என்று கூறி அந்த வாலிபனிடம் பேசிக் கொண்டிருக்கும் காட்சியை நான் பார்த்ததும் என் ஆத்துமாவில் உணர்வும், தெளிவும் வந்தது. ஆண்டவரே! என்று கதறினேன்.

என் முழங்கால்கள் தானாகவே முடங்க ஆரம்பித்தது. ''லாசருவை கல்லறையிலிருந்து உயிரோடே எழுப்பின கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே! ஆண்டவரே! தாவீதின் குமாரனே எனக்கு இரங்கும் இந்த ஏழைப் பாவியின் மீறுதல்கள் யாவையும் மன்னியும். தேவன் ஒருவர் இல்லையென்று எத்தனையோ நண்பர்களிடம் கூறி அவர்களை நாத்திகர்களாக மாற்றியிருக்கிறேன். இந்த ஒரு தடவை என்னை மன்னித்து என் மனைவிக்கு உயிர்தாரும். இனி ஒரு போதும் நான் அரசியலுக்குச் செல்ல மாட்டேன். உம்முடைய பிள்ளையாக ஜீவிப்பேன்'' என்று விண்ணப்பம் பண்ணுவதும், படுக்கையில் கிடக்கும் துணைவியின் உயிரற்ற உடலை பார்ப்பதுமாக இருந்தேன்.

என்ன அதிசயம்! பரலோகத்தின் தேவன் இந்த ஏழையின் கூப்பிடுதலைக் கேட்டு எனக்கு இரங்கினார். அதிகாலை 5 மணியளவில் நான் விடாப்பிடியாக கர்த்தரை நோக்கி கெஞ்சிக் கொண்டிருக்கும் போது என் மனைவி உயிரடைந்தாள். படுக்கையிலிருந்து எழுந்தாள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக! நான் கண்ணீரோடு முழுங்காலில் நிற்பதைக் கண்டு ''ஏன் அழுகிறீர்கள்'' என்று என்னை விசாரித்தாள். நான் நடந்த சம்பவங்களை சொன்னேன்.

ஐந்து தினங்களுக்கு முன் நடந்தவைகள் மட்டும் தான் அவள் நினைவில் இருந்தது. இதற்கிடையில் ஒரு விதமான ஜன்னி மயக்கத்திலேயே இருந்திருக்கிறாள். நான் கவனிக்கவில்லை. இனி அரசியலுக்கு செல்ல மாட்டேன் என்று என் மனைவியிடம் கூறிவிட்டு, மறுநாளே கடிதம் மூலம் அரசியலிலிருந்தும், என்னுடைய எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் நான் விலகிக்கொண்டேன் என்று தெரிவித்தேன். மறுநாள் காலமே என் துணைவி தனக்கு அறிமுகமான பக்கத்து வீட்டு கிறிஸ்தவ பெண்களிடம் ''என் கணவர் மனந்திரும்பி விட்டார். ஆகையால் நீங்கள் போகும் ஆலயத்திற்கு எங்களையும் அழைத்துப்போங்கள்'' என்று சொல்லி வைத்திருக்கிறாள். மறுநாளே சி.எஸ்.ஐ. சபையைத் சேர்ந்த நண்பர் ஒருவர் மாலையில் வீட்டுக்கு வந்து ''சார்! நீங்கள் மனந்திரும்பிவிட்டீர்களாமே, எங்களோடு ஆலயத்துக்கு வாருங்கள்'' என்று கூப்பிட்டார். எனக்கு உள்ளத்திலே ஒருவித வெட்கமாகத் தோன்றினது. ஏனென்றால் ''அநேக ஆண்டுகளாக ஆலயம் செல்லாதவன் நான்''

ஒருநாள் என்னோடு கட்சியிலிருந்த நண்பர் ஒருவர் ஊரில் போய் திருமணம் முடித்துவிட்டு குடும்பமாய் பம்பாய் வந்தவர். நான் ஒரு ஞாயிற்றுக்கிழமை மனைவியோடு ஆலயம் செல்வதற்காக பஸ்ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தார். நான் தாராவியிலுள்ள என்னுடைய கட்சி அலுவலகத்திற்கு வந்து கொண்டிருந்தபொழுது, பஸ்ஸ்டாப்பில் இருவரையும் பார்த்து, ''என்ன தோழரே, நாட்டுக்காக ஜீவனையே கொடுப்பேன் என்றவர். கேவலம் மனைவியை கண்டதும் மதவாதியாக மாறிவிட்டீரே'' என்று கூறிவிட்டேன். அந்த நண்பனுக்கு மிகவும் துக்கமாகவும் வெட்கமாகவும் ஆகிவிட்டது என்பதை நான் உணர்ந்தேன்.

மறுநாள் கட்சி ஆபிசில் அவர் கட்சி தலைவரிடம், ''தோழர் சுந்தரராஜ் நான் மனைவியோடு ஆலயம் செல்வதற்காக பஸ்ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்த பொழுது என்னைக் கேவலமாகப் பேசி விட்டார் என்று புகார் செய்தார். தலைவர் ஒரு புன்முறுவலோடு, ''தோழர் சுந்தர்ராஜும் ஒரு கிறிஸ்தவர்தானே. அவர் திருமணத்திற்குப்பின் தேவாலயம் செல்வாரானால்

நீரும் அவரைப் பரியாசம் செய்யும்'' என்று கூறினார்.

நடந்த இவைகளை எல்லாம் நினைத்து ஆலயம் செல்ல சிறிது தயங்கினேன். பின்னர் அழைக்க வந்தவரிடம் ''ஆலயம் செல்லும் பொழுது கூப்பிடுங்கள்'' என்று சொல்லி அனுப்பினேன். அந்த வாரம் ஞாயிற்றுக்கிழமை வந்ததும், என்னுடைய துணைவி அதிகாலமே எழுந்திருந்து காலை டிபன், மத்தியானத்திற்கு ஆகாரம் எல்லாம் சமைத்து வைத்துவிட்டு குளித்துவிட்டு என்னை எழுப்பினாள். அவளுடைய முகத்திலிருந்த மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையே கிடையாது. பல மாதங்களாக ஜெபித்த ஜெபத்திற்குரிய பலனைப்பெற்றுக் கொண்டபடியால் அவளுடைய மகிழ்ச்சி பெரிதாக இருந்தது.

நானும் ஆயத்தமானேன். ஒரு குடும்பத்தினர்கள் எங்களை அழைத்துப் போக வந்தனர். பைபிள், பேக் (Bag) எல்லாம் துணைவியிடம் கொடுத்து அனுப்பி விட்டு என்னுடைய கையில் ஒரு நியூஸ் பேப்பரை எடுத்துக் கொண்டு வழக்கமாய் கட்சி ஆபீசுக்குப் போவது போல் நான் இவர்களுக்கு பின்னாலே போய் கொண்டிருந்தேன். முதல் வாரம் ஆலயம் சென்று வந்தோம். யாரும்கட்சிகாரர்கள் என்னைப் பார்க்கவில்லை.

பின்னர் இரண்டாவது வாரம் ஆலயத்துக்கு செல்லும்பொழுது, கட்சியிலுள்ள தோழர் ஒருவர் என்னைப் பார்த்துவிட்டார். என்ன தோழரே! எங்கே போறீங்க? போன வாரமும் இந்த இடத்திலே பார்த்தேன். கட்சி ஆபிசுக்கு வரவில்லையா?'' என்று கேட்டார். ''இல்லை தோழர், அவசரமாய் ஒரு ஆளைப் பார்க்கப் போகிறேன். மாலையில் ஆபிசுக்கு வருவதாக கூறுங்கள்'' என்று அவரிடம் ஒரு பொய்யும் கூறிவிட்டேன்.

அன்று மாலை சுமார் 7 மணி, குடும்ப ஜெபம் செய்தபின் துணைவி ஆகாரம் சமைத்துக் கொண்டிருந்தார்கள். நான் சிறிது களைப்பினால் கட்டிலில் படுத்திருந்தேன். என் தலைக்கு மேல் ஆகாயத்தில் ஒரு சத்தம். என் வீட்டுக்குள்ளேயே யாரோ பறந்து செல்வது போல் கேட்டது. என்ன சத்தம் தெரியுமா? ''ஆதலால் விபசாரமும், பாவமுமுள்ள இந்த சந்ததியில் என்னைக் குறித்தும், என் வார்த்தைகளைக் குறித்தும் எவன் வெட்கப்படுவானோ, அவனைக் குறித்து மனுஷகுமாரனும் தமது பிதாவின் மகிமை பொருந்தினவராய் பரிசுத்த தூதர்களோடுங்கூட வரும்போது வெட்கப்படுவார்'' (மாற். 8:38) என்ற சத்தமாகும்.

என்னுடைய இருதயம் புழுவாய் துடித்தது. ஒரு வகையான பயம், என் இருதயத்தை நிரப்பினது. ஒரு எச்சரிப்பின் சத்தத்தை என் ஆத்துமா கேட்டது. கட்டிலிலிருந்து எழுந்து துணைவியிடம் ''வீட்டிற்குள் யாரோ பேசுவது

போன்ற ஒரு சப்தம் உனக்கு கேட்டதா?'' என்று கேட்டேன். அப்படி ஒரு சப்தமும் நம்ம வீட்டிற்குள் கேட்கவில்லை'' என்றாள். நான் துணைவியிடம் நடந்தவைகளையும் நான் கண்டதையும், கேட்டதையும் அவளிடம் கூறவில்லை. முழங்காற்படியிட்டேன். ''ஆண்டவரே! என்னை நீர் மன்னித்து விடும். இந்த உலகத்தில் எவ்வளவோ கேவலமாய், அசுத்தமாய் வாழ்கிறவர்கள் வெட்கப்படாமல் வாழ்கிறார்கள். எனக்காக கல்வாரியில் ஜீவனைக் கொடுத்த ஆண்டவரை, மரித்துப் போன என் மனைவியை உயிரோடு எழுப்பித் தந்த ஆண்டவரை ஆராதிக்கச் செல்வதற்கு வெட்கத்தோடு போனேனே! எங்கே போகிறாய்? என்று கேட்ட நண்பனிடம் ஆலயத்துக்குப் போகிறேன் என்று சொல்லாமல் வெட்கப்பட்டு, வேறொரு ஜோலியாய் போகிறேன் என்று கூறிவிட்டேனே. இனி நான் வெட்கப்படமாட்டேன்'' என்று ஆண்டவரிடம் ஜெபம் பண்ணினேன். ஒப்புக்கொடுத்தேன்.

மறுவாரம் ஞாயிறு ஆராதனைக்கு செல்லும் பொழுது, எனது துணையின் பேக்குக்குள் வைத்திருந்த பைபிளைக் கையில் எடுத்துக் கொண்டேன். துணைவியை விட்டு சிறிது தூரமாக வந்து கொண்டிருந்த நான் இப்பொழுது துணைவியோடு ஒன்றாக சேர்ந்து ஆலயத்துக்கு சென்று வந்தோம்.

நாட்கள் சென்றது, கட்சி அலுவலகத்தில் என்னைப் பார்ப்பதற்கு யாரை அனுப்பலாம் என்று யோசித்து நான் திருமணமாகி வந்ததும் அடிக்கடி எங்களை குடும்பமாய் அழைத்து எங்களுக்கு விருந்து கொடுத்து அனுப்பிய தலைவர் குடும்பம் ஒன்றை ஒருநாள் ஞாயிறு காலை 8 மணிக்கு பம்பாயில் 'பாண்டுப் மங்கட்ராம் பெட்ரோல் பம்ப்' என்ற ஏரியாவிலுள்ள எங்கள் வீட்டிற்கு அனுப்பினார்கள். நான் கையில் பைபிளோடு வெளியே நின்றேன். என்னுடைய துணைவி வீட்டை பூட்டுகிறாள். வந்த சகோதரி, '' என்ன சிஸ்டர் எங்கேயோ புறப்பட்டு வீட்டீர்கள். நாங்கள் குடும்பமாய் உங்கள் வீட்டிற்கு வந்திருக்கிறோம்.'' என்றார்கள்.

தலைவர் என்னைப் பார்த்து புன்முறுவலாக சிரித்தார். நானும் பதிலுக்கு சிரித்துக்கொண்டேன்.''சிஸ்டர் நான் சமையல் செய்து வைத்திருக்கிறேன். நீங்கள் இருவரும் சாப்பிட்டுவிட்டு ரெஸ்ட் எடுங்கள் நாங்கள் ஆலயத்துக்குப் போய்விட்டு வருகிறோம்'' என்று என் துணைவி கூறினாள். ''என்ன சிஸ்டர்! ஆள் இல்லாத வீட்டிலே சாப்பாடு போட்டு சாப்பிடவா! நாங்கள் வந்தோம்? உங்களோடு சிறிது நேரம் பேசிவிட்டுப் போகலாமென்று வந்தோம். எங்களுக்காக இன்றைக்கு ஒருநாள் ஆலயத்துக்கு லீவு போடலாமே!'' என்று

சொன்னாள் அந்த சகோதரி. ''இல்லை அக்கா! நாங்கள் ஆலயத்துக்கு போகாமல் இருக்க மாட்டோம்'' என்று என் துணைவியார் சொன்னதும், இருவரும் வந்தவழியே புறப்பட்டு போய்விட்டார்கள். அன்று கண்ட எகிப்தியரை பின்பு ஒருபோதும் நான் காணவில்லை.

அதன்பின்பு பைபிளை ஒழுங்காகப் படித்து, ஆத்தும மீட்புக்கான இரகசியங்களை அறிந்து பாவ மன்னிப்புக்கென்று முழுகி ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்றுக் கொண்டு கர்த்தரின் அழைப்பின் பேரில் உலக வேலையையும் விட்டு விட்டு தேவனுக்கென்று புதிய எருசலேம் சபையாய் 1970ம் ஆண்டிலிருந்து தேவ ஊழியம் செய்து வருகிறோம். இறைவன் எங்களுக்குச் செய்த எல்லாவற்றையும் எழுதினால் ஏடு தாங்காது. அவ்வளவு அதிகமாய் இறைவன் எங்களை நேசித்து எங்களை வழிநடத்தி வருகிறார்.

''தேவாதி தேவனுக்கு மகிமை''. ''கர்த்தரைத் தேடுகிறவர்களுக்கோ ஒரு நன்மையும் குறைவுபடாது'' - சங். 34:10

''உம்முடைய வேதத்தை நேசிக்கிறவர்களுக்கு
மிகுந்த சமாதானமுண்டு'' சங் 119:165

**பாஸ்டர் S. சுந்தர்ராஜ்**
புதிய எருசலேம் சபை
நாகர்கோவில்

## சாட்சி 2

# நரகத்தைக் கண்டேன்

## பாஸ்டர் S. ஏசுதாஸன்

கர்த்தருக்குள் அருமையானவர்களே!

நான் ஒரு கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். என்னுடைய சிறுவயது முதல் பக்தியோடு ஆலயத்திற்கு சென்று ஆண்டவரை வணங்கி வந்தேன். ஆனால், என்னுடைய 16வது வயது முதல் என்னுடைய சரீரத்தில் அநேக வியாதிகள் உருவாயின. இந்த வியாதிதான் என்று நிச்சயமாய் சொல்ல முடியாத வியாதிகளால் நெருக்கப்பட்டேன். அதில் சிலவற்றை கூறுகிறேன். கேளுங்கள்.

சுவாச அடைப்பு, தலைபாரம், கண்பார்வை குறைவு, சரீர காந்தல், இருதய வலி, காது கேட்காத நிலை, காதுக்குள் எப்பொழுதும் ஒரே இரைச்சலாயிருக்கும். இது இரவு வேளைகளில் இன்னும் அதிகமாகி விடும். இதன் காரணத்தினால் பயம் அதிகமாகி இரவு வேளைகளில் எங்கும் போக முடியாது. வயிற்றுக் கோளாறும் உண்டு. இதில் பல நிலைகள் விவரிக்க முடியாது.

தொண்டைக்குள் ஆகாரம் இறங்க முடியாத அடைப்பு, கை கால் அசதி, ஞாபக சக்தியும் குறைந்து ஒரு பித்தனைப் போல் அலைந்தேன். மேலே குறிப்பிட்டவைகள் என்னில் காணப்பட்ட முக்கியமான வியாதிகளாகும். இன்னும் சில வியாதிகளும் உண்டு. பஸ்ஸில் இரண்டு மூன்று மைல் தூரத்திற்கு மேல் பிரயாணம் செய்ய முடியாது. வாந்தி பண்ணுவேன்.

என்னுடைய ஒவ்வொரு அவயவத்திலும் ஒவ்வொரு வியாதியாக கிரியை செய்வதை உணர்ந்தேன். என்னிடம் கேட்பவர்களிடம் நான் எந்த வியாதியை நிச்சயப்படுத்திக் கூற முடியுமென்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். வியாதியின் நிலை மாறி மாறி என்னில் கிரியை செய்த படியால், என்னிடம் கேட்பவர்களிடம் அவ்வப் பொழுது என்னில் காணும் வியாதியைக் கூறுவேன்.

என்நிலையை மற்றவர்கள் சரியாக புரிந்து கொள்ள முடியாத படியால் என்மீது தப்பான எண்ணங்கொண்டு, ஒரு நாளைக்கு ஒன்றைச் சொல்கிறானே, இவனுக்கு மூளைக் கோளாறு ஆகிவிட்டதுஎன்றும்; இவன் வேலை செய்ய மனம் இல்லாமல் இப்படி சொல்கிறான் என்றும் என் காது கேட்க பேச ஆரம்பித்துவிட்டார்கள். நாட்கள் உண்டோடின.

பிரியமானவர்களே!

வியாதியின் கொடுமையையும் மனிதர்களின் நிபச்சொல்லும் சேர்ந்து என்னை வேதனைப்படுத்தி படுக்கையில் ஆழ்த்திவிட்டது. இப்படி மனிதர்களால் கைவிடப்பட்டு தனிமையான நிலையில் படுக்கையில் இருந்து கொண்டு சிந்தித்தேன். இந்தப் பாரத்தைப் போக்கிக் கொள்ள ஏதாவது வழியுண்டா? என்று எண்ணினேன். ஆம்! மனிதர்களுக்கு நெருக்கடி வரும்போது கண்டு கொள்ளும் வழியே அது. அந்நேரத்தில் அது செம்மையாய் கூட தோன்றிற்று. ''மனிதனுக்கு செம்மையாகத் தோன்றுகிற வழிகளுமுண்டு அதன் முடிவோ மரண வழிகள்'' என்று வேதம் கூறுகிறது. (நீதி 16:25) ஆம்! நானும் தற்கொலை செய்யவே முடிவு செய்தேன். இந்நிலையில் வேறொரு சம்பவம் என் நினைவில் வந்தது.

என்னுடைய ஊர் சிறிய கிராமமாயினும் தேவனுடைய ஊழியர்கள் அடிக்கடி வருவதுண்டு. அவர்களிடம் நான் அன்பாய் நெருங்கி பழகுவதுண்டு. அப்பொழுது அவர்கள் என்னிடம் அடிக்கடி கூறுவார்கள். ''சகோதரனே! நீ எங்களோடு பழகுகிறது நல்லதுதான். மனிதனுடைய மரணத்துக்குப்பின் மனிதன் பிரவேசிக்க வேண்டிய இரண்டு இடங்கள் உண்டு. அதாவது மோட்சம், நரகம் என்பவைகளே. மோட்சத்தின் இன்பங்களைப் பற்றியும், நரகத்தின் துன்பங்களையும் பற்றிக் கூறுவதோடு மோட்சம் செல்ல வேண்டுமானால் நீர் இதுவரையும் செய்து வந்த பாவத்திற்கு பாவமன்னிப்பு பெற்றுக் கொள்ளவேண்டும்.

மனுஷருடைய பாவங்களை மன்னிப்பதற்காக கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இரத்தம் முழுவதையும் சிந்தியிருக்கிறார். ''இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவ ரோகங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்'' என்று பரிசுத்த வேதம் கூறுகிற படியால் உம்முடைய பாவம் மாத்திரமல்ல உம்முடைய சரீரத்தில் காணப்படும் ரோகமும் முற்றிலுமாய் மாறிப்போகும். இதற்கு, இயேசு கிறிஸ்துவின் இரத்தம் போதுமானதாய் இருக்கிறது.

இவ்விதமான இரட்சிப்பைப் பெற்றுக் கொள்ளாதோர் துன்பம் நிறைந்த நரக அக்கினியில் பங்கடைவார்கள். இந்த ஆக்கினை சில மாதத்திற்கோ, சில வருடங்களுக்கோ அல்ல சதாகாலமும் இவ்வாறு வாதிக்கப்படுவார்கள்'' என்றும் அவர்கள் கூறுவார்கள். நான் அவர்களிடம், ஐயா! நீங்கள் சொல்லுகிற அந்த இரண்டு இடங்களையும் உங்களில் யாராவது போய்ப்பார்த்து வந்தது உண்டா? அப்படி காணாத ஒன்றை நம்பும்படி கூறுவது நல்லதா? அவ்விதம் நீங்கள் காணாத ஒன்றை நான் எப்படி நம்புவது? என்று மறுப்புக் கூறி என் நாட்களை கழித்து வந்தேன்.

இந்நிலையில் என் வியாதியின் தொல்லை அதிகரித்தது. மரணபயம் என்னை ஆட்கொண்டது. சத்தமிட்டு அழுதேன். என்னுடைய பெற்றோர்கள் ஏராளமான மருத்துவர்களிடம் என்னைக் கொண்டு போய் சிகிச்சை செய்தார்கள். ஆனால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. காலையில் ஒரு வியாதியின் தன்மை என்னுடைய சரீரத்தில் இருக்கும். அதற்கான மருந்து வாங்க மருத்துவரிடம் போவேன். வழியில் இன்னொரு வியாதி என்னில் காணப்படும். மருத்துவரிடம் போனதும் எந்த வியாதிக்கு மருந்து கேட்பதென்று தெரியாது. எப்படியோ ஒரு வியாதியைச் சொல்லி மருந்து வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தால் வீட்டிற்கு வந்தபின் வேறொரு வியாதிக் காணப்படும். இவ்வாறு அநேக வைத்தியர்களால் வருத்தப்படுத்தப்பட்டு, வேலையும் வருவாயும் நஷ்டமாகி இறுதியாக என் பெற்றோர் என்னை நாகர்கோவிலுள்ள ''டாக்டர் மத்தியாஸ் ஆஸ்பத்திரிக்கு'' அழைத்து சென்றனர். அவர் என்னை நன்றாய் பரிசோதித்த பின் தொண்டையில் ஒரு ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொல்லி விட்டார். என் பெற்றோர்களும் சம்மதித்து விட்டனர்.

இப்பொழுது கொஞ்சம் ஊன்றி கவனியுங்கள். சில மணி நேரத்திற்குள் ஆபரேஷன் தியேட்டருக்குள் கொண்டு போகப்பட்டேன். ஆயுதங்களுடன் மருத்துவர்கள் என்னை அணுகினார்கள். எனக்கு மயக்கம் வந்தது. எனது தொண்டையும் அறுக்கப்பட்டிருக்கும் என உணர்ந்தேன். என்னுடைய நினைவு திரும்ப வருவதற்காக குறிக்கப்பட்டிருந்த நேரம் கடந்து போய்க் கொண்டிருக்கிறது. என்னுடையப் பெற்றோர்கள் கண்ணீர் வடித்து நிற்க, அறுவை சிகிச்சை செய்த டாக்டர்களெல்லாம் அயர்ந்து நிற்க என்னுடைய சரீரத்தை விட்டு, என்னுடைய ஆத்துமா பிரிந்து போவதை நான் உணர்ந்தேன். என்னுடைய சரீரமும், என் ஜீவனும் தனித்தனியாய் பிரிந்து நிற்பதை நான் காணமுடிந்தது. என் சரீரத்தை விட்டு என் ஆத்துமா இன்னொரு இடத்தை நோக்கிச் சென்றது.

இப்பொழுது, என்னுடைய சரீரம் இருந்த இடம் எனக்கு மறைக்கப்படுகிறது. அங்கு நடக்கும் சம்பவம் ஒன்றும் எனக்கு தெரியவில்லை. அடுத்து என்னுடைய ஆத்துமா அடையப் போகும் வேதனையை அங்கு காணமுடிகிறது. சரீரத்தில் இருக்கும் போது நான் அடைந்த வேதனையை விட இது பல மடங்கு அதிகம். இப்பொழுது என்னுடைய ஜீவன் (ஆத்துமா) ஒரு ஆழத்துவத்தில் இறங்குகிறது. ஆனால் அதற்கு மாம்சமில்லை. ஆவியாக இருக்கிறது.

## நரகத்தைக் கண்டேன்

இவ்வாறு என்னுடைய சரீரத்தை விட்டு பிரிந்த என்னுடைய ஆத்துமா நரகத்தின் கொடூர பாதாளத்தையும் அங்கே எரிந்து கொண்டிருக்கிற அக்கினியின் கொந்தளிப்பையும் காண்கிறது. சிறிது நேரத்தில் இக்கொடிய வேதனைக்குள் என்னுடைய ஆத்துமா சென்று தாங்க முடியாத வேதனையை அனுபவித்தது. அங்குள்ள வேதனையை வர்ணிக்க வார்த்தைகள் போதாது. ஐயோ! ஐயோ! என்னும் வார்த்தைகள் அத்தனையும் அடங்கியிருக்கிறது. அதை இப்பொழுது நினைத்தாலும் என் உடம்பு சிலிர்க்கிறது. இக்கொடிய வேதனைக்குள் அகப்பட்ட பின்னர், மனிதனின் பிரயாசம் வீண் என்றும், உலகில் உள்ள எல்லாம் மாயை என்றும் உணர்ந்தேன்.

கடந்த நாட்களில் தேவனுடைய ஊழியர்கள் சொன்ன மோட்சம், நரகம் என்ற இரு இடங்களும் உண்மை. அதில் ஒன்றை (நரகம்) அனுபவிக்கிறேன். அலறுகிறேன். என்ன செய்வது.... அலறுகிறேன். இப்பொழுது வேறு வழி தெரியாமல் ஆண்டவரை நோக்கி முறையிடுகிறேன். இந்த ஒரு முறை என்னை உயிர்ப்பியும் இனிமேல் உமக்குப் பிரியமாய் ஜீவிப்பேன். நான் கண்ட அனுபவித்த காரியங்களை அனேகருக்கு சாட்சியாக அறிவிப்பேன் என்று தேவனை நோக்கி என் ஆத்துமா அங்கலாய்த்தது. அந்த வேளையில் நான் சிறுவயது முதல் செய்து வந்த ஒவ்வொரு பாவத்தையும் என் கண் முன்னாக நிறுத்தி அவைகள் என்னுடைய காதினுள் யாரோ சொல்வது போல் ஒரே சத்தமாய்க் கேட்டேன்

இப்பொழுது என்னுடைய ஆத்துமா நரகத்திலிருந்து புறப்பட்டு தான் விட்டு வந்த சரீரத்தை நோக்கி வருகிறது. இப்பொழுது என்னுடைய சரீரம் ஆபரேஷன் தியேட்டரை விட்டு வெளியே ஒரு கயிற்றுக்கட்டிலில் கிடத்தி இருக்கிறது என் ஆத்துமா இறங்கி வந்து அந்த சரீரத்தோடு சேர்ந்தது. அவ்வேளையில் திடீரென்று என்னுடைய சரீரம் உயிரடைந்தது. நான் உயிரடைந்தேன். கண்விழித்துப் பார்த்தேன். என்னுடைய பெற்றோர்களும் உறவினர்களும் அழுது கொண்டிருக்கும் காட்சியைக் கண்டேன்.

அருமையானவர்களே! என்னுடைய ஜீவன் திரும்ப வந்தது. நான் உயிரடைந்தேன். என்னுடைய தொண்டையின் புண் ஆறுவதற்காக சில நாட்கள் மருத்துவமனையில் தங்கி பின்னர் வீட்டிற்கு வந்து சேர்ந்தேன். அறுவை சிகிச்சையால் என்னுடைய சரீரத்தில் கொஞ்சம் இருந்த இரத்தமும் தீர்ந்ததுபோலாயிற்று.

முன்னைவிட இப்பொழுது நிலைமை இன்னும் மோசம். அறுவை சிகிச்சையினாலும் என்னுடைய வியாதி குணமாகவில்லை. இப்பொழுது

பாவமும், ரோகமும் எனக்குள் இருப்பதை நான் காண்கிறேன். பாவம் எப்பொழுதும் என் கண் முன்பாக வந்து நிற்கிறது. நரகத்தில் நான் பட்ட கஷ்டத்தை நினைக்கும் பொழுது என் ஆத்துமா துடிக்கிறது. இப்பொழுது எனக்கிருந்த வியாதியின் தொல்லையை விட பாவத்தின் பாரம் என்னால் தாங்கமுடியவில்லை.

இதிலிருந்து எப்படியாவது விடுதலைப் பெற்று கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன், தேவனுடைய பிள்ளைகள் கூடி ஆராதிக்கும் இடங்களைத் தேடி ஓடினேன். பல மைல்கள் தூரம் கால் நடையாய் நடந்து செல்வதுண்டு. தேவனுடைய பிள்ளைகளோடு கூடி தேவனை ஆராதித்து வந்தேன். அந்நாட்களில் நான் சரி செய்ய வேண்டிய காரியங்களை ஆவியானவர் மூலம் உணர்த்தப்பட்டேன். களவு செய்தவைகளைத் திரும்ப கொடுக்கவும் சண்டை போட்டவர்களிடம் ஒப்புரவாகவும், இவ்வாறான சில காரியங்களை சரி செய்யவும் தேவன் கிருபை தந்தார்.

இதன்பின் என் ஆத்துமாவில் சிறிது சமாதானம் கிடைத்தது. நான் போய் வந்த கூட்டாய்மைகளில் (சபைகளில்) இந்த சிறு சமாதானத்தைப் பெற்றுக்கொள்ளும் ஆலோசனைத்தான் கிடைத்தது. இச்சிறு சமாதானமும் சில நாட்களில் என் உள்ளத்திலிருந்து மறைந்து போய் விட்டது. இப்பொழுது என் கண் முன் தோன்றிய பாவங்களும் ரோகங்களும் மலைபோல் என்முன்னே வந்து நான் இன்னமும் தேவ வசனத்தின்படி இரட்சிக்கப்படவில்லை என்பதை உணர்த்தின. இரட்சிக்கப்பட்டிருக்கிறேன் என்று சொல்லுகிற சிலருடைய சாட்சிகளைக் கேட்டிருக்கிறேன். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாய் விளக்கம் சொன்னார்கள். சிலர் ஒருநாள் ஒரு தரிசனம் கண்டேன் அது முதல் நான் இரட்சிக்கப்பட்டேன் என்றும், இன்னும் சிலர் நான் பிசாசு பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டேன் அதுவே எனது இரட்சிப்பு என்றும், இம்மைக்குரிய காரியங்களை தேவனிடம் கேட்டுப் பெற்றுக்கொண்டேன். ஆகையால் கர்த்தரால் இரட்சிக்கப்பட்டேன் என்றெல்லாம் கூறக் கேட்டிருக்கிறேன்.

நரகத்தின் அகோரத்தைக் கண்டு வந்த நான் எப்படியாகிலும் இரட்சிப்பைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்ற தாகத்தோடு அநேக நாட்கள் இரவு வேளைகளில் ஆகாரம் கூட புசிக்க மனமற்று, தனிஅறைக்குள் இருந்து கண்களை மூடிக்கொண்டு ஆண்டவரே! நான் பாவி, என்னை இரட்சியும் பாவ மன்னிப்பின் நிச்சயத்தை எனக்குத் தாரும்! என்று கதறினேன். அது மாத்திரமல்ல, ஏதாவது தரிசனம் கிடைக்கிறதா? வெளிச்சம் பிரகாசிக்காதா? ஏதாவது சத்தம் கேட்காதா? என்று, அநேக இரவுகள் காத்திருந்தும் ஒன்றும் தெரியவில்லை.

இப்படி ஆண்டுகள் கடந்தன. இந்நிலையில் எனக்குள் பாவத்தையும் பாவக்கிரியைகளையும் கண்டேன். எனக்கு ஒரு சந்தேகம் வர ஆரம்பித்தது. இத்தனை காலங்கள் காத்திருந்தும் இரட்சிப்பு கிடைக்கவில்லை இனி என்ன செய்வது என்று எனக்குள்ளே திகைப்பு ஏற்பட்டது. பின்னும் ஊழியர்களிடம் கடந்து போய் ''ஐயா! எனக்கு இன்னமும் இரட்சிப்பு கிடைக்கவில்லையே, பூரண சமாதானமும் இல்லையே என்ன செய்ய?'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் எனக்கு கொடுத்த ஆலோசனை; ''தம்பீ! ஆண்டவரை நோக்கி கண்ணீர் விட்டு ஜெபம் செய், உன்னை பாவி என்று ஒப்புக் கொள். இயேசு கிறிஸ்து உன் பாவத்திற்காக மரித்தார் என்று நம்பு, இவைகளை செய்த பின் இயேசு என் பாவங்களை மன்னித்துவிட்டார் என்று விசுவாசி. சந்தேகிக்காமல் விசுவாசி. இதுதான் இரட்சிப்பு'', என்று சொன்னார்கள்.

நான் அவர்களிடம் ''ஐயா! சில ஆண்டுகளாக நான் அவ்வாறு செய்து வருகிறேன். ஆனால்! என்னுடைய பாவ பாரம் நீங்கி என்னுடைய ஆத்துமா இரட்சிப்பை அடைந்ததை நான் உணர முடியவில்லையே இன்னமும் பாவபாரம் என்னை அழுத்துகிறதே!'' என்றேன். அவர்கள் எனக்கு அளித்த பதில், ''தம்பீ! உனக்கு விசுவாசமில்லை, நீ ஒரு அவிசுவாசி,'' என்று கூறி முடித்துவிட்டார்கள்.

நரகத்தில் கொடுமையை அனுபவித்த நான், இரட்சிப்பின் பாதையை சரியாக காண முடியாது இரவு வேளைகளில் காடுகளில் சென்று சத்தமிட்டு கதற ஆரம்பித்தேன். என் துக்கம் அதிகரித்தது. இரவு நேரங்களில் தூக்கமில்லை. நரகத்தின் பயம் ஒருபுறம். கண்ணீர் சிந்தாத நாட்கள் மிக குறைவு. என் விண்ணப்பம் முழுவதும், ஆண்டவரே! என்னுடைய பாவங்களை மன்னியும்! என்பதே.

ஓர் நாள் ஒரு ஊழியருக்கு என்னுடைய நிலையை எழுதி ஐயா, எனக்காக ஜெபித்து என் பாவம் மன்னிக்கப்படுமாவென்று ஆண்டவரிடம் ஜெபித்துக் கேட்டு எழுதுங்கள் என்று எழுதினேன். அவர் உன் பாவம் இரத்தாம்பர சிவப்பாயிருந்தாலும் அதைப் பஞ்சைப் போல் வெண்மையாக்குவேன் என்று சொன்ன இயேசு இரட்சகர் உன் பாவங்களை மன்னிப்பார். ஆகையினால், நீ நன்றாக ஜெபம் செய் கலங்காதே என்று எழுதினார். என்னுடைய ஆத்தும மீட்பின் வழியை யாரும் இன்னும் காட்டவில்லை.

இப்படி நான் அங்கலாய்த்துக் கொண்டிருக்கும் வேளையில் தேவன் என்னுடைய விண்ணப்பத்தின் சத்தத்தைக் கேட்டார். பம்பாய் நகரில் தேவனுடைய சபையாகிய புதிய எருசலேம் சபையில் என்னுடைய

தமையனார் ஒருவர் தேவ ஊழியம் செய்து வந்தார்கள். திடீரென்று தேவகட்டளைபடி, அவர்கள் தமிழ்நாட்டிற்கு வந்தார்கள் அவர்களிடமும் என்னுடைய ஆத்தும நிலையைக் கூறினேன். அவர்கள் தேவவசனத்தின்படி பாவ மன்னிப்பாகிய இரட்சிப்பை பெறும் வழியை எனக்குத் தெளிவாக காண்பித்தார்கள்.

## பாவமன்னிப்பு

''தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான்'' (நீதி 28:13) மனிதனைக் குறித்து தேவனுக்கு ஒருவரும் சொல்லவேண்டியதில்லை. அவருக்கு முன்பாக எல்லாம் வெளியரங்கமாக இருக்கிறது. மனிதன் எதைச்செய்தாலும் அவைகள் எல்லாவற்றையும் தேவன் அறிகிறார். (எபி.4:13) இப்படி இருப்பதால், தேவனுக்கு மறைவானது ஒன்றுமில்லை (நீதி 15:11) இப்படி இருக்க, மறைக்கிறான் என்றும், அறிக்கையிட வேண்டும் என்றும் சொல்லி இருக்கிறது. மறைப்பது எங்கே? அறிக்கையிடுவது எங்கே? என்றும் தெளிவுப்படுத்திக் கொடுத்தார்கள். தேவன் தம்முடைய அப்போஸ்தலருக்கு கட்டவும் கட்டவிழ்க்கவும் அதிகாரம் கொடுத்திருக்கிறார். (மத். 16:19:18:18) தேவன் தம்முடைய அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் கொடுத்திருக்கிறார் என்பதையும் அறிந்தேன். (யோ. 20:23)

உணர்த்தப்பட்ட பாவங்களை ஊழியர்களின் காது கேட்க அறிக்கையிட்டு அவர்கள் மூலம் தேவன் அளிக்கும் பாவ மன்னிப்பின் நிச்சயத்தையும் இனிமேல் பாவம் செய்யாதிருக்கத் தக்கதான ஆலோசனைகளையும் அதன் மூலமாய் பாவத்திலிருந்து மாத்திரமல்ல ரோகத்திலிருந்தும் விடுதலைப் பெற்றுக் கொள்ளலாம் என்று கூறினார்கள். இதுதேவ ஆலோசனை என்று கண்டு கொண்டேன்.

ஆனாலும், என்னுடைய அந்தரங்க பாவங்களை நான் மறைக்கவே எண்ணினேன். நான் அடைந்த வேதனை எனக்கே தெரியும். வேறு வழி இனி இல்லை என்பதை அறிந்து ஓர் நாள் என்னுடைய உள்ளத்தை திறந்து எனக்கு ஆலோசனை தந்த ஊழியரின் காது கேட்க என் பாவங்களை தேவ சமூகத்தில், முழுங்காலில் நின்று அறிக்கையிட்டேன். நான் ஒவ்வொரு பாவமாக அறிக்கை செய்ய, செய்ய, அப்பாவத்தால் உண்டான பாரம் என்னிலிருந்து அகன்று போவதை உணர்ந்தேன். இப்படியே எனக்கு உணர்ந்தப்பட்ட எல்லா பாவங்களையும் அறிக்கையிட்டு, பாவம் போக கழுவப்பட்டு முழுக்கு ஞானஸ்நானம் பெற்றேன். (அப். 22:16; 2:38) என் ஆத்துமாவில் மாபெரும் இளைப்பாறுதலைக் கண்டேன். பாவ மன்னிப்பின் நிச்சயத்தையும் பெற்றுக் கொண்டேன்.

என் வியாதிகள் முழுவதும் நீங்கின. என்ன சந்தோஷம்! இன்னும் அநேக காரியங்களில் நான் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்ற தேவ ஆலோசனையையும் அவ்வூழியர் மூலம் பெற்றேன். (லூக். 3:10-14) என்பாவம் தீர்ந்தது ஆத்துமாவில் வர்ணிக்க முடியாத சமாதானம் அடைந்தேன். இனிமேல் பாவம் செய்யாது ஜீவிக்கும் பெலனையும் (கிருபை) தேவனிடமிருந்து பெற்றுக்கொண்டேன். ரோமர் 6:10-18ல் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்த ஆவியின் வரத்தையும் வசனத்தின்படி பெற்றுக் கொண்டேன். (அப். 1:8; 2:4).

முன்னால் கண்களை மூடி ஜெபிக்கும் பொழுது, என் கண் முன்னே இருளைக் கண்டேன். இப்பொழுது கண்களை மூடி ஜெபிக்கும் பொழுதெல்லாம் தேவனுடைய மகிமையான ஒளியையும், அவருடைய சாயலையும் காணுகிறேன். முன்னால் நரகத்தின் கொடுமை என்னை பயமுறுத்திக் கொண்டிருந்தது. இப்பொழுது பரலோகத்தின் சந்தோஷத்தால் மகிழுகிறேன். என்னுடைய பெயர் ஜீவபுஸ்கத்தில் எழுதப்பட்டிருப்பதை அடிக்கடி காண்கிறேன்.

எனக்கும் தேவனுக்கும் இடையேயிருந்த தடுப்புச் சுவரான பாவம் அகன்று விட்டது. இப்பொழுது தேவனோடு உறவாடுகிறேன். அடிக்கடி பரலோகத்தின் மகிமையையும் காணுகிறேன். அனுபவிக்கிறேன்.பின் தேவனால் ஊழியத்திற்கு அழைக்கப்பட்டு, அதிகாரப்படுத்தப்பட்டு புதிய எருசலேம் சபையில் ஊழியக்காரனாக இப்பொழுது ஊழியம் செய்து வருகிறேன். தேவனுக்கே மகிமை.

நரகத்தைக் கண்டேன். மோட்சத்தைக் காணுகிறேன், தேவனோடு ஐக்கியமாயிருக்கிறேன். உறவாடுகிறேன்.

மோட்சம், நரகம் இல்லையென்று சொல்வோருக்கும் வேதபுத்தகத்தில் எழுதப்பட்டவைகள் பொய் என்று சொல்வோருக்கும் நான் சாட்சியாயிருக்கிறேன். ஆமென்.

கர்த்தருக்குள் அன்புள்ள

**பாஸ்டர் S. ஏசுதாஸன்**
புதிய எருசலேம் சபை
நாகர்கோவில்

### அத்தியாயம் 1

# இது என்னுடைய வீடு, இவர்களோடு சேர்ந்துக்கொள்

கிறிஸ்துவுக்குள் தேவனுடைய பிள்ளைகளை! கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் உங்களை வாழ்த்துகிறேன்.

களிமண்ணால் உருவாக்கப்பட்ட ஆதாமின் சந்ததியில் தோன்றிய என்னையும் பிதாவாகிய தேவன் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தினால் கழுவி ஜீவனுள்ள கல்லாக மாற்றினதற்காக தேவனை ஸ்தோத்தரிக்கிறேன். மனிதர்களால் தள்ளப்பட்டதாயினும் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டதும் விலையேறப்பெற்றதுமாயிருக்கிற மூலைக்கல்லாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோடும் அவருடைய அப்போஸ்தலர், தீர்க்கத்தரிசிகள் என்பவர்களின் அஸ்திபாரங்கள் மேலும் தேவன் ஜீவனுள்ள கற்களை இசைவாய் சேர்த்து ஆவியினாலே கட்டிவரும் திருச்சபையாம் ''புதிய எருசலேம் சபையிலே என்னையும் இணைத்தற்காக என் தேவாதி தேவனை நன்றியோடு ஸ்தோத்தரிக்கிறேன்.

பிரியமானவர்களே! தேவனுடைய திருச்சபையாம் புதிய எருசலேமின் தோற்றத்தையும், தேவன் தம்முடைய மகிமைக்காக நடப்பித்து வரும் அற்புத செயல்களையும் வாசகர்களுக்கு எழுதி அறிவிக்க வேண்டுமென்று பரிசுத்த ஆவியானவர் உணர்த்தியபடியால் ஆதிமுதல் நாங்கள் அறிந்ததும், எங்களைக் கொண்டு தேவன் நடப்பித்ததுமான காரியங்களை தொகுத்து எழுத முன் வந்துள்ளோம்.

தேவனுடைய சபை : அது தேவனுடைய வீடு என்று வேதம் கூறுகிறது. ''அந்த வீடு ஜீவனுள்ள தேவனுடைய சபையாய் சத்தியத்திற்கு தூணும் ஆதாரமுமாயிருக்கிறது'' 1தீமோ. 3:15. இந்த சபை தேவனால் அழைக்கப்பட்ட அப்போஸ்தலர் திரு. என். லாசர் அவர்களைக் கொண்டு தேவக்கட்டளைப்படி 8-8-1968ல் பம்பாய் பட்டணத்தில் தேவன் எழுப்பினார். பல ஆவிக்குரிய தலைவர்கள் சபை ஆரம்ப தினத்தன்று வந்திருந்தனர். சபைக்கு பெயர் வைக்க ஆலோசித்த போது தேவன் அப்போஸ்தலர் என். லாசர் அவர்களுக்கு ஏற்கனவே வெளிப்படுத்தி கட்டளையிட்டிருந்த ''புதிய எருசலேம் சபை'' என்ற நாமகரணமே சூட்டப்பட்டது. எல்லோரும் தேவனை மகிமைப்படுத்தினார்கள். வாழ்த்தினார்கள்.

புதிய எருசலேம் சபை ஜெபக்கூட்டமாயல்ல, சொஸைட்டியாக அல்ல, அசெம்பிளியாக அல்ல, மிஷனரி ஸ்தாபனமாக அல்ல, குரூப்பாகவுமல்ல,

ஆரம்பமே தேவ கட்டளைப்படி சபையாய், சபையாக எழுப்பப்பட்டது. அல்லேலூயா!

இதை, எழுதுகிற அடிமை அந்த நாட்களில் கர்த்தரால் சந்திக்கப் பட்டிருந்தேன்.

பம்பாய் பட்டணத்திலே நான் ஒரு கம்யூனிஸ்ட்டாக வாழ்ந்து வந்தேன். என்னை சிருஷ்டித்த தேவன் ஒரு நாள் இரவு 12.30 மணிக்கு என்னைச் சந்தித்தார். வேத புஸ்தகத்திலுள்ள ஒரு வசனத்தை நம்ப வைத்து அதற்குரிய பலனை அன்றைய தினமே பெற்றுக் கொள்ளச் செய்தார். அன்றிலிருந்து இறைவனுடைய வார்த்தைகளடங்கிய வேதபுஸ்தகத்தை நான் இரவும் பகலும் வாசிக்க ஆரம்பித்தேன். இந்த வேதபுஸ்தகத்திலுள்ள ஒவ்வொரு வசனத்தையும் நாம் விசுவாசித்து தேவனிடத்தில் அதற்குரிய பலனை அடைந்து கொண்டோம். இனி நாம் இந்த வேதபுஸ்தகம் முழுமையையும் நன்றாய்ப் படித்து இதிலுள்ள எல்லாவிதமான தேவனுடைய வார்த்தைகளையும் விசுவாசித்து அதற்குரிய எல்லாவிதமான ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொள்ள வேண்டும் என்கிற பேராவல் என் உள்ளத்தை நிரப்பிற்று.

தாவீது பக்தனைப் போல உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படி என் கண்களை திறந்தருளும் (சங். 119:18) என்று விண்ணப்பம் செய்து கொண்டே வேத வாக்கியங்களை வாசித்து அதை ஆராய்ந்து பார்க்க தேவன் உதவி செய்தார். வேதாகமத்திலுள்ள பழைய ஏற்பாட்டை நான் வாசிக்கும் போது தேவன் தமக்காக தெரிந்து கொண்ட ஒரு ஜாதி (ஒரு சமுதாயம்) அல்லது தம்முடைய பிள்ளைகள் இந்த உலகத்தில் எப்படி தூய்மையாக நேர்மையாக வாழ வேண்டும் என்பதை அவர்களுக்கு எழுதிக் கொடுத்த பிரமாணங்களையும் கட்டளைகளையும் நான் பார்த்த பொழுது தேவனைப் பற்றிய பயம், பக்தி, என் உள்ளத்தில் ஆட்கொண்டது. அந்த மக்கள் தேவனுடைய கட்டளையின்படி நடக்கும்பொழுது அவர்கள் மத்தியில் தேவன் நடப்பித்த அற்புத செயல்களையும், தேவனுடைய கட்டளையைப் பெற்ற ஜனம் தவறு செய்யும் பொழுது, தேவனே அவர்களை தண்டிக்கிறதையும் பார்த்த பொழுது தேவன் நீதியுள்ளவர், அவரைத் தொழுது கொள்ளுகிறவர்கள் நீதியாக வாழ வேண்டும் என்கிற சத்தியத்தை அறிந்து கொண்டேன்.

இதன்பின்பு, புதிய ஏற்பாட்டு சத்தியங்களை வாசிக்க ஆரம்பித்தேன். அதில் என்னை அதிகமாக உணர்த்திய வசனம், ‘‘ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தை காணமாட்டான் என்று

மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கிறேன்.'' (யோவான் 3:3) என்பதாகும்.

''கர்த்தருடைய வேதம் தேனிலும் தேன் கூட்டிலிருந்து ஒழுகும் தெளி தேனிலும் மதுரமுள்ளதுமாய் இருக்கிறது'' (சங். 19:10) என்ற வேதவாக்கியத்திற்கேற்ப வேதபுத்தகம் எனக்கு ரொம்ப இனிமையாக மாறிவிட்டது. இரவு வேலை முடித்து வந்ததும், இரவில் நீண்ட நேரம் பைபிள் படித்துக் கொண்டே இருப்பேன். அதிசீக்கிரமாக ஆதியாகமத்திலிருந்து ஆரம்பித்து பழைய ஏற்பாட்டை படித்து முடித்து : புதிய ஏற்பாட்டில் யோவான் சுவிசேஷம் 3-ம் அதிகாரத்தை ஒரு நாள் இரவு படித்துக் கொண்டிருக்கும் பொழுது 3-ம் வசனத்தை நான் மெதுவாக படித்தேன். ''ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தைக் காணமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்கு சொல்கிறேன்'' என்ற வசனத்தை வாசித்ததும் இது நமக்காக எழுதப்பட்டது போல காணப்படுகிறதே நாம் இன்னும் மறுபடியும் பிறக்கவில்லையே! இதற்கு நாம் என்ன செய்வது? என்று எண்ணிக் கொண்டு குனிந்து பைபிளைப் படித்துக் கொண்டிருந்த நான், கொஞ்சம் தலையை தூக்கி பார்த்தேன். எனக்கு முன்பாக ஒரு கரம் எனக்கு நேராக நீட்டப்பட்டு ''மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தை காணமாட்டாய் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கிறேன்'' என்று ஒரு சத்தம் உண்டானதோடு, நீட்டப்பட்ட அந்த கையினுடைய ஆள்காட்டி விரல் என்னை சுட்டிக் காட்டி கொண்டிருந்தது. சில வினாடிகள் அழுதுக்கொண்டே இருந்தேன். எப்படியும் இதற்கு விளக்கம் கிடைக்கும் என்று என்னை தேற்றிக் கொண்டு யோவான் 3-ம் அதிகாரத்தை தொடர்ந்து வாசித்தேன். 5ம் வசனத்தில் இயேசு பிரதியுத்திரமாக ''ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கிறேன்'' என்ற வார்த்தையை வாசித்ததும் என்னுள்ளத்தில் ஓர் பெரிய ஆறுதல் உண்டானது.

வள்ளுவரின் குறள்பாவிலுள்ள

''பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார்

இறை வனடி சேராதார்''

என்ற பாடலும் ஞாபகத்துக்கு வந்தது. மனிதர்கள் ஒவ்வொருவரும் பிறவியிலேயே பாவிகள். இப்படிப் பாவியாய்ப் பிறந்த மனிதன் இந்த உலகத்திலேயே தெய்வத்தின் பிள்ளையாக மாறவேண்டும். இதையே 'மறுபடிப்பிறப்பு' என்று வேதம் கூறுகிறது. மற்றமதக் கர்த்தாக்களும் மனிதன்

பிறவிலேயே பாவி என்று கூறுகிறார்கள். அது அவன் முன் ஜென்மத்தில் செய்த பாவத்தின் பலன் என்று கூறுகிறார்கள். ஆனாலும், அவன் மறுபடியும் பிறக்க, தேவனுடைய பிள்ளையாக மாற அவர்கள் வழி காட்டவில்லை. ஆனால், கர்த்தருடைய வேதம் கூறுகிறது. ஒருவன் ஜலத்தினாலும் ஆவியானாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான். (யோவான் 3:5) என்று

இந்த வசனங்களின்படி நானும் ஞானஸ்நானம் பெற்று பரிசுத்தாவின் அபிஷேகமும் பெற்று தேவனுடைய பிள்ளையாக மாற வேண்டும் என்கிற பேராவல் என்னுடைய உள்ளத்தை நிரப்பினது. ஞானஸ்நானம் : எப்படி? எப்பொழுது? யாரிடத்தில்? எதற்காக? எடுக்க வேண்டும் என்பதற்கான விளக்கங்கள் வேதபுத்தகத்திலிருந்து வாசித்து அறிந்து கொண்டேன். விசவாசமுள்ளவர்களாகி ஞானஸ்நானம் பெறவேண்டும் (மாற். 16:16).

தண்ணீரில் முழ்கி ஞானஸ்நானம் பெற வேண்டும் (எபே. 5:26 தீத் 3:5) மனந்திரும்பினவன் பெறவேண்டும். (அப். 2:38).

தேவனால் அனுப்பப்பட்ட தேவனுடைய ஊழியரிடம் பெறவேண்டும். (யோவான் 1:6)

பாவமன்னிப்புக்காக பாவம்போகக் கழுவப்பட (அப். 2:38, அப். 22:16) ஞானஸ்நானம் பெறவேண்டும் என்கிற தேவவாக்கியங்களை அறிந்து கொண்டபின் எனக்கு அறிகமுகமான ஒரு குருவானவரிடம் மேற்கண்ட சத்தியத்தின்படி நானும் ஞானஸ்நானம் பெற்று ஒரு தேவனுடைய பிள்ளையாக மெய்கிறிஸ்தவனாய் மாறவேண்டும் என்கிற விருப்பத்தை அவரிடம் கூறினேன். ''தம்பி இது பெந்தெகோஸ்து உபதேசம், நமக்கு இது எல்லாம் வேண்டாம்'' என்று கூறிவிட்டார். நான் வீட்டில்போய் இரவு முழுவதும் சிந்தித்தேன். 'பெந்தெகோஸ்துக்காரர்கள்' என்று ஒரு கூட்டத்தார் இருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் தான் இந்த வேதபுத்தகத்தில் எழுதியிருப்பதுபோல் ஜீவிக்கிறார்கள், என்று தெரிகிறது. அப்படிப்பட்ட மக்கள் யாரையாவது நாம் பார்த்து அவர்களோடு சேர்ந்து தேவனை ஆராதிக்க வேண்டும் என்று என்னுடைய மனதிலே தீர்மானம் செய்தேன்.

இன்னொரு நாள் அந்த குருவானவரிடம் ஐயா, வேதத்தைப்படிக்கும் பொழுது அவர்களெல்லார் மேலும் பரிசுத்த ஆவியானவர் வந்து இறங்கினார். அவர்கள் அந்நிய பாஷைகளைப் பேசினார்கள். தீர்க்க தரிசனம் சொன்னார்கள் என்றும், பரிசுத்த ஆவி பெறாதிருந்த மக்களின் தலையின் மேல் தேவனுடைய ஊழியர்கள் கைவைத்து ஜெபித்த பொழுது அவர்களெல்லாரும் பரிசுத்தாவியை பெற்றுக் கொண்டார்கள் என்றும், வேதத்தில்

எழுதியிருக்கிறதே, இதன் விளக்கம் என்னவென்று கேட்டேன். ''தம்பி நீ வேதத்தை நன்றாகப்படிகிறாய் என்று அறிகிறேன். பரிசுத்த ஆவி என்று ஒன்று உண்டு. தேவனிடம் கேட்கிறவர்களுக்கு அதைக் கொடுக்கிறார். ஆனால், எனக்குக் கிடைக்கவில்லை. நீ அவரிடம் கேட்டுப் பெற்றுக் கொள்'' என்று கூறினார்.

நான் விரும்புகிற தேவ ஆசீர்வாதத்தை யாரிடம் போய் பெற்றுக் கொள்வது (2தீமோ 2:22) தேவனால் அனுப்பப்பட்டவர்களை, தேவனுடைய பிள்ளைகளை காண வேண்டும். அப்படிப்பட்ட மக்களை எனக்குக் காட்டும் ஆண்டவரே! என்று அனுதினமும், ஆண்டவரிடம் வேண்டுதல் செய்தேன்.

ஒருநாள் இரவு வேலை முடித்து வந்து சுமார் 12 மணியளவில் நான் ஜெபித்துக் கொண்டிருந்தபொழுது, ஒரு பலத்த கரம் என்னுடைய வலது கையைப்பிடித்து என்னை ஆகாயத்தில் கொண்டு போனது. என் தேவனுடைய பலத்த கரம் என்னைன் பிடித்திருக்கிறது என்கிற எண்ணத்தினால் என் உள்ளத்தில் பெருமகிழ்ச்சி உண்டானது. பம்பாய் பட்டணத்தை மூன்று முறை சுற்றிக் காண்பித்தார்.

இந்த மூன்று முறையும் சுற்றிவரும் போது ஒரே ஒரு அடையாளம் மட்டும் என் கண்ணில்பட்டு மறைந்து கொண்டிருந்தது. பம்பாயில் சந்தாகுருஷ் விமான நிலையத்தின் அருகேயுள்ள உயர்ந்த மலையில் உச்சியில் உள்ள ஒரு சிவப்பு விளக்கே அது. மூன்றாவது முறை சுற்றிவரும் போது அந்த சிவப்பு விளக்குக்கு நேராக என்னைக்கீழே கொண்டுவந்தார். விமான நிலையத்தில் ஏராளமான விமானங்கள் நிற்கிறது. என்னை அதற்கு மேலாக ஆண்டவர் கொண்டு வருகிறார். நானும் இரண்டு கைகளையும் விரித்து ஒரு குட்டிவிமானம் போலத் தரையை நோக்கி வேகமாய் இறங்கி வந்து, விமான ஓடு தளங்களுக்கு வெளியே வரவும், சிறிது தூரத்திலிருந்து இரண்டு பரிசுத்தவான்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் வெள்ளையங்கி தரித்திருந்தார்கள், இருவர் கையிலும் வேதபுத்தகம் இருந்தது. ஆனால்! இருவருடைய கழுத்துக்குக் கீழ் மட்டுமே சரியாக தெரிந்தது. என்னைப் பிடித்து ஆகாயத்தில் தூக்கி வந்த ஆகாயத்திலிருந்து ''போ'' என்கிற ஒரு பலத்த சத்தமும் உண்டானது, நான் விழித்துக் கொண்டேன்.

நான் எதிர்பார்த்திருந்த தேவமனிதர்களை ஆவியில் சந்தித்து விட்டோம் இனி அவர்களை நேரில் காணும் பாக்கியத்தையும் கர்த்தர் தருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த நாட்களில் தான் ''புதிய எருசலேம் சபை பம்பாயில்'' ஸ்தாபிக்கப்பட்டுள்ளதாக அறிந்தேன்.

என்னுடைய வீட்டுக்கு பக்கத்திலிருந்த சகோதரர் ஒருவர் திருச்சபையின்

அப்போஸ்தலரைப் பற்றியும் அவர்கள் மூலம் எழுப்பப்பட்ட புதிய எருசலேம் சபையை பற்றியும் சில காரியங்களைக் கூறினார். அவரிடம் அப்போஸ்தலர் அவர்களுடைய முகவரியை வாங்கி ஒரு கடிதம் எழுதினேன். அப்போஸ்தலர் அவர்களும் அவர்களுடைய உதவி ஊழியர் ஒருவரும் நான் அனுப்பிய கடிதத்துடன் நான் வசிக்கும் வீட்டிற்கு வந்தார்கள். நான் தரிசனத்தில் பார்த்த அதே உருவங்களை நேரில் கண்டதும் எனக்கு ரொம்ப ஆச்சரியமாய் இருந்தது. அவர்களிடம் ஆராதனை நடக்கும் இடத்தினுடைய விலாசத்தை வாங்கிக் கொண்டு நானும் என்னுடன் சேர்ந்த சில வாலிபர்களும் புதிய எருசலேம் சபைக்கு ஆராதிக்க வந்தோம்.

எனக்கு கிடைத்த தரிசனத்தை என்னுடன் சேர்ந்த நண்பர்களிடம் ஏற்கனவே கூறியிருக்கிறேன். நாம் இப்பொழுது ஆராதிக்கிற இந்த இடத்தை விட்டு எனக்கு தரிசனமாய் காண்பித்த கர்த்தருடைய மனிதர்களோடு நான சேர்ந்து கொள்வேன் என்று கூறி இருந்தேன்.

அங்கு ஆராதனையில் இருக்கும்பொழுது, ‘‘இது என்னுடைய வீடு நீ, இங்கே இவர்களோடு சேர்ந்து கொள்’’ என்று ஆவியானவர் கூறினார். மறுவாரம் ஏற்கனவே நான் போய்வந்த சபையிலிருந்து என்னுடன் பல சகோதரர்கள் என்னுடனேயே வந்துவிட்டபடியால் எனக்கு ஒரு விசாரணை காத்திருந்தது. நான் அந்த சபையில் ஒரு டீக்கனாக்கப்பட்டிருந்தேன். வருகிற ஞாயிறு ஆராதனை முடிந்ததும், நிர்வாகக்குழுவின் அவசர கூட்டம் நடக்கும் நிர்வாகிகள் யாவரும் கலந்து கொள்ளவேண்டும், என்று மினிட்ஸ் புக்கில் எழுதி நிர்வாகிகளுடைய வீடுகளில் சென்று கையொப்பம் வாங்கினார்கள். நானும் மினிட்ஸ் புக்கில் கையொப்பமிட்டு கொடுத்தேன். ‘‘உனக்காகதான் இந்த கூட்டம், கலங்காதே தைரியமாக வெளியேறு’’ என்று உள்ளத்தில் ஆண்டவர் உணர்த்தினார். என்னுடைய நண்பர்களிடமும் விபரங்களை கூறினேன். சனிக்கிழமை இரவு எனக்கு தூக்கம் வரவில்லை. அந்த ஆலய கமிட்டியில் சாராயம் காய்ச்சுகிற ஆட்கள் கேஷியராக உண்டு. தாதாக்கள் பலர் உண்டு. எனக்கு ஒரு பயம். வேறு சபைக்கு ஆட்களை ஏன் கூட்டிக் கொண்டு போனாய்? என்று என்னை மிரட்டுவார்களே என்று பயந்து, ஆண்டவரே! நாளை ஆராதனை முடிந்ததும், நான் ராஜினாமா லெட்டரைக் கொடுத்துவிட்டு வரவேண்டும். அந்த லெட்டரை நான் எழுதுவதற்கான காரணம் ஒன்றை எனக்கு சொல்லித் தரவேண்டும், என்று ஆண்டவரிடம் வேண்டினேன்.

அதிகாலையில் கர்த்தர் எனக்கு ஒரு வேத வாக்கியத்தை உணர்த்தி கொடுத்தார். அன்று நமது ஆண்டவர் அப்போஸ்தலனாகிய பேதுருவை

பார்த்து ''நீ குணப்பட்ட பின்பு உன் சகோதரரை ஸ்திரப்படுத்து என்றார்.'' (லூக்கா 22:32) என்ற வேதவாக்கியத்தை கடிதத்ததில் எழுதி, முற்றிலும் குணப்படாத நான் தேவனுடைய சபையை விசாரிக்கும் நிர்வாக குழுவில் இருக்கக்கூடாது என்று கர்த்தர் இந்த வசனத்தைக் கொண்டு பேசினார். ஆகையால், இன்று முதல் இந்த திருச்சபையின் நிர்வாகக் குழு அங்கத்தினர் பொறுப்பிலிருந்து ராஜினாமா செய்து விடுகிறேன் என்று எழுதி பையில் அந்த கடிதத்தை வைத்திருந்தேன். இரண்டு செயலாளர்கள் இந்த சபையில் உண்டு. ஒருவர் என் அருகாமையிலே அமர்ந்திருப்பார். ஆராதனை முடிந்ததும் செயலரிடம் ராஜினாமா கடிதத்தை கொடுத்துவிட்டு ''அவசரவேலை இருக்கிறது. வருகிறேன்'' என்று விடைப்பெற்றுக் கொண்டு நண்பர்களிடமும் விபரங்களைச் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்துவிட்டேன். வீட்டுக்கும் தேடி வருவார்கள் என்றும் உணர்த்தப்பட்டேன்.

பின்னர் நிர்வாகிகளெல்லாரும் அமர்ந்து ''எதற்காக இந்த அவசர கூட்டம்?'' என்று ஒருவர் கேட்க, உடனே மற்ற செயலாளர், ''சகோ. சுந்தர்ராஜைக் கூப்பிடுங்கள் அவர் வந்ததும் கூட்டத்தை ஆரம்பிக்கலாம்,'' என்று கூறி இருக்கிறார். என்னிடத்தில் கடிதம் பெற்ற செயலாளர், ''அவசரவேலை இருப்பதாகவும் கூட்டத்தில் கலந்து கொள்ள முடியாதென்றும், கடிதம் கொடுத்துவிட்டு போயிருக்கிறார்'' என்று கூறி, கடிதத்தைக் காட்டி இருக்கிறார். கடிதமோ இராஜினாமா கடிதம். ''ஏன்? அவர் இராஜினாமா செய்தார்?'' என்று ஒவ்வொருவரும் கேட்க, சரி அந்த சகோதரரைப் பார்த்துவிட்டு வந்து அடுத்தவாரம் கூட்டத்தை வைத்துக் கொள்ளலாம். என்று என்னைத் தேடி என்னுடைய வீட்டிற்கு சில நிர்வாகிகள் வந்தார்கள். என்ன சகோதரனே! நீங்கள் குணப்படவில்லை என்று எழுதினால் என்ன அர்த்தம். நம்முடைய சபையில் குணப்பட்டவர்கள் என்று யார் இருக்கிறார்கள்?'' என்று கேட்டார்கள் எனக்கு கர்த்தர் சொன்னதை சொல்லிவிட்டேன்! அதற்கு மேலாய் தயவு செய்து காரணம் கேட்காதீர்கள் என்றதும் ஆராதனைக்காவது வருவீர்களா? என்று கேட்டார்கள் கர்த்தர் அனுப்பினால் வருவேன் என்று கூறிவிட்டேன்.

பின்னர் புதிய எருசேலம் சபைக்கு நானும் பலநண்பர்களுமாக வந்து சேர்ந்து கொண்டோம். அப்போஸ்தலர் மூலமாய் நான் மறுஜென்ம முழுக்கு ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெற்று நான் தேவனுடைய பிள்ளையானேன். ''பிழைத்திருக்கிறவர்கள் இனித்தங்களுக்கென்று பிழைத்திராமல் தங்களுக்காக மரித்து எழுந்தவருக்கென்று பிழைத்திருக்க வேண்டும்'' (2கொரி 5:15) என்கிற சத்தியத்தின்படி வாழ்க்கையை அமைத்துக் கொண்டேன்.

### அத்தியாயம் 2

# உன்னை அனுப்புவது நானல்லவா?

கர்த்தர் தம்முடைய சேவைக்காக அழைத்தார். என்னை அவரிடம் ஒப்படைத்தேன். அப்போஸ்தலர் (மேய்ப்பர்) மூலம் கர்த்தருடைய சேவைக்கென்று அதிகாரப் படுத்தப்பட்டேன். அந்நேரத்திலே தேவன் தந்த காட்சி ''ஒரு பெரிய புத்தகம் திறந்திருக்கிறது. அதன் அருகே ஒரு தீவெட்டியும் எரிந்து கொண்டிருந்தது. திறந்த புத்தகத்தின் இடதுபக்கத்தில் ''நீதி'' என்றும் வலப்பக்கத்தில் ''நியாயங்கள்'' என்றும் பெரிய எழுத்தில் எழுதியிருந்தது. அப்பொழுது ஆவியானவர் பேசினார். ''என்மகனே என்னுடைய நீதி, நியாயங்களை உலகிற்கு வெளிப்படுத்தும் படியாக உன்னை இன்று என்னுடைய ஊழியக்காரனாக்கியுள்ளேன்'' என்று பேசினார்.

இவ்விதமாய் கர்த்தர் பேசி பெலப்படுத்தின போதிலும், தமிழ்நாட்டுக்கு ஊழியத்துக்கு வர எனக்கு மனமில்லாதிருந்தது காரணம், இங்கு ஏராளமான ஆவிக்குரிய சபைகள் இருக்கிறது. ஆவிக்குரிய பெரிய தலைவர்கள் இருக்கிறார்கள். இவர்களெல்லாம் பெரிய வேத பண்டிதர்கள் நான் ஒரு சிறுபையன் வேதத்தை இன்னமும் சரியாக கற்றுக் கொள்ளவில்லை, என்று பல காரணங்களை எண்ணி பம்பாயிலேயே வேலைப்பார்த்துக் கொண்டு சபையோடு சேர்ந்து ஊழியம் செய்யலாம், என்று எண்ணினேன்.

ஒருநாள் பகலில் மில்லில் வேலை, பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என் பக்கத்தில் வந்து நின்று 'சுந்தரர்ராஜ்' என்று என் பெயரைச் சொல்லி கூப்பிட்டார். யார் கூப்பிடுவது? என்று நான் நிமிர்ந்து பார்த்தேன். எனக்காக கல்வாரியில் ஜீவனைக் கொடுத்த ஆண்டவர் தங்க மயமான தோற்றத்தில் நின்று கொண்டிருந்தார். ''உன்னிடத்தில் இருக்கிற வேத புத்தகத்தை கையில் எடு'' என்றார். சமயம் கிடைக்கும்பொழுது வாசிப்பதற்காகப் 'புதிய ஏற்பாடு' ஒன்றை என்னுடைய மெஷினில் வைத்திருந்தேன். வேத புத்தகத்தை எடுத்ததும் ''லூக்கா : 24ம் அதிகாரம் 47ம் 48-ம் வசனங்களை வாசித்துப்பார்'' என்று அருமை ஆண்டவர் கூறினார். ''அன்றியும் மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும்'' எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியது. நீங்கள் இவைகளுக்குச் சாட்சிகளாய் இருக்கிறீர்கள் என்று நான் வசனத்தை வாசித்து முடித்தேன். ''இந்த வேலைக்காக உன்னை அனுப்புகிறேன்'' என்று கூறிவிட்டு ஆண்டவர் மறைந்து விட்டார். என்னுடைய உள்ளம் என் நேசருக்காக எனக்குள்ளே பொங்கியது. எத்தனையோ பட்டதாரிகள், பணக்காரர்கள், அறிவாளிகள்

இருக்கின்ற பொழுது உலகத்தை எல்லாம் உண்டாக்கின தேவன், சர்வலோகத்தின் பாவங்களையும் சுமந்து தீர்த்த தேவ ஆட்டுக்குட்டி, இந்த உலகத்தை ஆளுகை செய்யவிருக்கும் இராஜாதி இராஜா, அற்பமும் குப்பையுமாகிய இந்த ஏழைச் சிறுவனைத் தேடி வந்தாரே என்று எண்ணி என் ஆண்டவரை மகிமைப்படுத்தினேன். அன்று வேலை முடிந்து மாலை வீடு வந்ததும் நடந்தவைகளை என் துணைவியிடம் பகிர்ந்து கொண்டேன். இரவு தனி ஜெபத்தில் மீண்டும் ஆண்டவர் ஒரு வேத புத்தகத்தோடு என் அருகில் வந்து நின்றார். ''என் உள்ளம் தேவ அன்பால் பொங்கி வழிந்தது''.

ஆண்டவர் பேசினார்! ''நீ பார்க்கிற பெரியவர்கள் உருவத்தில் பெரியவர்கள், உள்ளத்தில் அப்படி அல்ல. அவர்கள் என்னுடைய விருப்பத்தின்படி ஊழியம் செய்யவில்லை. தாங்கள் விருப்பத்தின்படியும் தங்களை பின்பற்றுகிற மக்களுடைய விருப்பத்தின்படியும் ஊழியம் செய்கிறார்கள். அவர்கள் என்னுடைய மகிமையைத் தேடாமல், மனிதர்களால் வரும் மகிமையைத் தேடுகிறார்கள். அவர்கள் தங்களுடைய குடும்பத்துக்காக ஊழியம் செய்கிறார்கள். ஆகையால், நீ என்னுடைய ஊழியத்தைச் செய்ய வேண்டும். நான் இந்த உலகத்தில் ஊழியம் செய்த பொழுது ''பிதாவானவர் செய்யக் குமாரன் காண்கிறது எதுவோ, அதையேயன்றி வேறொன்றையும் தாமாய் செய்யமாட்டார். அவர் (பிதா) எவைகளைச் செய்கிறாரோ, அவைகளைக் குமாரனும் அந்தப்படியே செய்கிறார் (யோ. 5:19) என்று எழுதி இருக்கிறபடியே நான் செய்தேன். நீயும் அப்படியே நடந்து கொள். நான் சொல்லுவதைச் செய்யவேண்டும். செய்யும்படி நான் காண்பிப்பதைச் செய்ய வேண்டும்'' என்று அருமை ஆண்டவர் கூறினார்.

மேலும் ஒரு காரியத்தை ஆண்டவரிடம் கேட்டேன். நான் கடனாளியாயிருந்தேன். 3000 ரூபாய் கடனாளியாயிருந்தேன். இதற்கு மாதம் 300ரூபாய் வட்டிக் கட்ட வேண்டும். எனக்கு, மாத சம்பளம் அப்போது 350 ரூபாய் தான். மீதமுள்ள 50 ரூபாயை வைத்துதான். என்னுடைய இரண்டு பிள்ளைகளுடன் குடும்பம் நடத்தினேன். வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க எந்த வழியும் இல்லை. ''துன்மார்க்கன் கடன் வாங்கிச் செலுத்தாமல் போகிறான்.'' (சங். 37:21) என்று உம்முடைய வேதம் கூறுகிறதே. நான் கடனை வைத்துக்கொண்டு எப்படி ஊழியத்திற்கு போவதென்று ஆண்டவரிடம் கூறினேன். அதற்கு ஆண்டவர், ''இந்த கம்பெனியிலிருந்து உனக்கு வரவேண்டிய எல்லா உரிமைகளையும் வாங்கி தந்து, உன் கடன்களையெல்லாம் தீர்த்தப் பிறகே உன்னை ஊருக்கு அனுப்புவேன்'' என்று ஆண்டவர் கூறினார்.

சில மாதங்கள் கழிந்தபின்பு ''அடுத்த மாதம் 19ம் தேதி ஊருக்கு

புறப்பட வேண்டுமென்று'' தேவன் ஒரு நாளையுங்குறித்து விட்டார். மறுநாள் காலையில் கம்பெனிக்குச் சென்று ஒரு மாதம் சம்பளத்தோடுள்ள லீவு (பிரிவிலேஜ் லீவு) வேண்டும். ஊருக்குப் போகிறேன் என்று ஒரு மனுவை எழுதி கம்பெனி மானேஜரிடம் கொடுத்தேன். அவரும் விடுமுறை தரலாம் என்று கூறி, என்னுடைய மனுவை வாங்கி வைத்துக் கொண்டார். பல நாட்களாக நிர்வாகத்திற்கும் தொழிலாளர்களுக்கும் ஏற்பட்ட சில பிரச்சனைகளினால் மறுநாள் கம்பெனியில் வேலை நிறுத்தம் ஏற்பட்டுவிட்டது. தொழிலாளர்களெல்லாரும் கம்பெனிக்கு வெளியே ஷிஃப்ட் வாரியாக தங்கியிருந்து கோஷங்களை எழுப்பி வருகிறார்கள். எனக்கு ஊருக்கு செல்வதற்கு பத்து தினங்களுக்கு முன் ரயிலில் டிக்கெட் முன் பதிவு செய்யவேண்டும். கையில் காசு இல்லை என்பது யாருக்கும் தெரியாது. நான் கடனாளியாய் இருக்கிறேன் என்று சபையில் யாருக்கும் தெரியாது என் மூலமாக சில வாலிபர்கள் ஏசுவை ஏற்றுக்கொண்டு சபைக்கு வருகிறார்கள். அவர்கள் என் மூலமாய் இடறி விடக்கூடாது என்பதற்காக யாரிடமும் நான் சொல்லவில்லை. ரயில்வேயில் வேலைப்பார்க்கும் ஊழியர் மாற்க்கு என்பவரிடம் டிக்கெட் எடுக்கவேண்டுமென்று கூறியிருந்தேன். அவரும் எடுத்து தருவதாக கூறினார்.

கம்பெனி திறப்பதற்கு எந்த வாய்ப்பும் இல்லை. எனது நண்பர் ஒருவர், நான் இரட்சிப்படுவதற்கு முன்பு அவருடன் ஒரே வீட்டில் தங்கி இருந்திருக்கிறேன். என்னால் பல நன்மைகளைப் பெற்றவர், நான் இரட்சிக்கப்பட்டது, அதோடு ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்திருப்பதெல்லாம் அவருக்குப் பிடிக்காது. எப்படியும் கடனாகக் கொஞ்சம் ரூபாய் வாங்கி ரயில் டிக்கெட் எடுத்துக்கொள்வோம். கம்பெனி திறந்ததும் பணத்தைத் திரும்ப கொடுத்து, விடலாமென எண்ணி அவருடைய வீட்டிற்குச் சென்றேன். இந்த விஷயமாய் ஒரு வார்த்தையும் பேசாதபடி ஆவியானவர் என் வாயை அடைத்துப் போட்டார். நாளை காலையில் டிக்கெட் எடுக்க காசு கொடுக்க வேண்டும். வீட்டில் வந்து ஜெபித்தேன். ''ஆண்டவரே! இந்த காரியத்தில் நான் என்ன செய்ய நீர் சித்தமாயிருக்கிறீர்?'' என்று கேட்ட பொழுது, ''உன்னை ஊருக்கு அனுப்புவது நானல்லவா! என்னுடைய ஊழியத்திற்காக நான் உன்னை அனுப்புகிறேன். டிக்கெட் வாங்க நான் காசு தருவேன். காசு வந்து கொண்டிருக்கிறது அது உன் வீடு தேடிவரும். நீ இதற்காக யாருடைய வீட்டையும் தேடிப் போக வேண்டாமென்று'' தேவன் கூறினார்.

''வீடு தேடி பணம் வரும்'' என்று ஆண்டவர் கூறினார், யார் நமக்கு பணம் அனுப்பி தருவார்கள். நமது வீட்டிலிருந்து பணம் வராது. நாம் வேலையை விட்டு விட்டு வீட்டுக்குச் செல்வது வீட்டார் யாருக்கும்

பிடிக்கவில்லை. பின்னே எங்கிருந்து பணம் வரும்? என்று எண்ணிக் கொண்டு இரவு ஜெபத்திற்கு கடந்து போனேன். ''உன்னை அனுப்புவது நானல்லவா?'' என்று ஆண்டவர் மீண்டும் கூறினார்.

இரவு முழுவதும் விழித்திருந்து ஜெபித்தேன். மறுநாள் காலை 5 மணிக்கு துணைவியோடு சேர்ந்து குடும்பமாக ஜெபம் பண்ணும்போது ''பணம் வந்து கொண்டிருக்கிறது'' என்று ஆவியானவர் கூறினார். காலை 5.30 மணிக்கு மீண்டும் ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தேன். கதவைத் தட்டுகிற சப்தம் கேட்டது. ஓடிப்போய் கதவைத் திறந்தேன். சபை விசுவாசி ஒருவர் வாசலில் நின்றுக்கொண்டிருந்தார். ''என்ன பிரதர் அதிகாலையில் வந்திருக்கிறீர்களே என்ன விஷயம்'' என்று கேட்டேன். அவர் உள்ளே வந்து உட்கார்ந்து பிரதர் ''நேற்று என்னுடைய கம்பெனியில் ஒரு போனஸ் எங்களுக்கு கிடைத்தது. இரவில் வீட்டுக்கு வந்ததும் உங்களிடம் இந்த பணத்தை கொடுக்கும்படி ஆவியானவர் பேசிக்கொண்டே இருந்தார். இரவில் நீங்கள் கம்பெனியில் இருக்கிறீர்களோ! அல்லது வீட்டில் இருக்கிறீர்களோ! என்று தெரியவில்லையாகையால் அதிகாலையில் ஓடி வந்தேன்'' என்றார் எனக்கு. ''எல்லா பணமும் தேவையில்லை, இரண்டு டிக்கெட்டுக்கு மாத்திரம் பணம் தேவை, கம்பெனியில் பணம் வந்ததும் தந்துவிடுவேன்'' என்று கூறிவிட்டு அவரிடம் பணத்தை வாங்கினேன். என் தேவன் சொன்ன வார்த்தைகளை நினைக்கும் பொழுது ஆண்டவருக்கு எப்படி நன்றி செலுத்தவேண்டுமென்று தெரியவில்லை. ''பணம் வந்து கொண்டேயிருக்கிறது'' என்று ஆண்டவர் சொன்ன வார்த்தைகளை, பணம் கொண்டு வந்த சகோதரரிடமும் கூறினேன்.

''வடக்கைப் பார்த்து வைத்திராதே என்றும் தெற்கைப் பார்த்து கொடு'' என்றும் சொல்லுகிற தேவன், இந்த சிறுவர்களுடைய வாழ்க்கையிலும் அதிசயங்களை நடப்பிக்கிறாரே, அவருக்கே மகிமை உண்டாகட்டும்! என்று இறைவனை புகழ்ந்தேன்.

காலை 8 மணிக்கு சரியாக ஊழியர் மாற்க்கு வந்தார். டிக்கெட் எடுக்க பணத்தை அவரிடம் கொடுத்தேன். மாலையில் டிக்கெட்டை கொண்டு வந்து தந்துவிட்டுப் போனார். அடுத்த ஞாயிறு ஆராதனையில் குடும்பமாக ஆலயத்தில் சாட்சி கூறினோம். ஆராதனை முடிந்ததும் சபை நடுவே எங்கள் மீண்டும் ஊழியத்திற்காக அப்போஸ்தலர் அவர்கள் ஜெபித்து ஆசீர்வதித்தார்கள். 'கம்பெனி ஸ்ட்ரைக்' என்பது சபைக்குத் தெரியும். அதற்காகவும் ஜெபித்தார்கள்.

வீடு வந்து சேர்ந்தோம். சரியான துணிமணிகள் இல்லை, குழந்தைகளுக்கும் நல்ல வஸ்திரங்கள் இல்லை. ஊருக்கு போகும்போது

ஏதாவது வாங்கி செல்லவும் வசதியும் இல்லை. என் துணைவியும் அதற்காக கவலைப்படவில்லை. ‘‘கர்த்தர் பார்த்துக் கொள்வார்’’ என்று ஆபிரகாம் சொன்ன வார்த்தைகளையே இருவரும் சொல்லிக் கொண்டோம்.

வியாழக்கிழமை காலையில் நாங்கள் ஊருக்குப் புறப்படவேண்டும். புதன் காலையில் கம்பெனி கேட்டில் ஒரு பெரிய போர்டு ஒன்று தொங்கியது. அதில் ‘‘இந்திய தொழில் சட்டத்தின்படி இந்த கம்பெனியில் வேலைபார்க்கும் எல்லா தொழிலாளர்களுக்கும் எல்லா சலுகைகளும் கொடுத்துவிட்டு, இன்றுடன் இந்த கம்பெனி நிரந்தரமாக மூடப்படுகிறது’’ என்று எழுதியிருந்தது. அந்தச் செய்தியை பார்த்ததும் தொழிலாளர்கள் எல்லோரும் ஆடிப்பாடினார்கள். என்னுடைய உள்ளத்தில் என் தேவன் சொன்ன வார்த்தைகளில் ஒன்று கூட தரையில் விழுந்து போகாதபடி நிறைவேற்றுகிறாரே! என்று எண்ணி தேவனை மகிமைப்படுத்தினேன்.

அங்கிருந்து வீட்டுக்கு வந்து துணைவியிடம் தேவன் செய்திருக்கிற அற்புதச் செயல்களைக் கூறிவிட்டு, ‘‘மாலையில் கம்பெனியில் பணம் கிடைக்கும் தேவையான பொருட்களை வாங்கி வருகிறேன்’’ என்று கூறினேன். ‘‘கடன்காரர்களிடம் வாங்கிய கடனைக் கொடுத்துவிட்டு ஜாமான் வாங்கி வாருங்கள்’’ என்று துணைவியும் கூறினாள்.

டிக்கெட்டுக்கு பணம் தந்த சகோதரரையும் கம்பெனிக்கு வரச்சொன்னேன். ‘‘மாலையில் ஐயாவும் விசுவாசிகளும் வழி அனுப்ப வருவார்கள். கம்பெனியில் பணம் கிடைக்கப் போகிறது என்ற செய்தியைக் கூறு’’ என்று சொல்லிவிட்டு கம்பெனிக்கு வந்தேன்.

தொழிலாளர்கள் எல்லோரும் கூடி ஒருவருக்கொருவர் பேசிக் கொள்கிறார்கள். இவ்வளவு சீக்கிரமாய் நமக்கு எப்படி இவ்வளவு பணம் கிடைக்கிறது. நாம் கோர்ட்டில் கேஸ் ஒன்றும் போடவில்லையே என்று பேசிக்கொள்கிறார்கள். கோவாவைச் சேர்ந்த ஆர்.சி. கிறிஸ்டியன் ஒருவர் பிட்டர் (Fitter) வேலை செய்கிறார். அவர் சொன்னார் இந்த பணம் உங்களுடைய பிரயாசத்தினால் கிடைக்கவில்லை. நம்முடைய கம்பெனியில் ஒரு மனிதன் கடவுளே! கடவுளே! எங்களுக்காக நன்மை செய்யும் என்று ஜெபம் பண்ணுகிறான். அவருடைய ஜெபத்தை கேட்டு, கடவுள் இந்த காரியங்களை செய்தார்’’ என்று கூறினார். இதைக் கேட்ட பலர் என்னை நோக்கிப் பார்த்து, ‘‘மாஸ்டர் சொல்வது தான் சரி’’ என்று கூறினார்கள். இதற்குள்ளாக, எல்லோரும் பே சிலீப் (சம்பள ரசீது) வாங்க வரிசையில் நின்றார்கள். எனக்கு முன் வரிசையில் நின்றவர் என்னை திரும்ப பார்த்து, ‘‘பிரதர்! உங்கள் வாழ்க்கையில் நடப்பவைகள் எல்லாருக்கும் ஓர் வியப்பாக இருக்கிறது’’ என்றார். ‘‘என்ன விஷயம்?’’ என்று கேட்டேன்.

நாளைக்கு ஊருக்குப் போக 10 தினங்களுக்கு முன்பே டிக்கெட் வாங்கி வைத்திருக்கிறீர்கள். இன்றைக்கு உங்கள் தேவைகள் சந்திக்கப்படுகிறதே! இது பெரிய ஆச்சரியம்! என்று எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள்'' என்றார். ''இது ஆண்டவருடைய பெரிய கிருபை! இப்படி நடக்கும் என்று என் ஆண்டவர் முன்கூட்டியே எனக்கு சொல்லி இருந்தார். அது இப்பொழுது நடக்கிறது'' என்றேன். ''மீண்டும் கம்பெனி வேலை துவங்கினால் நீங்கள் வருவீர்களா? என்று கேட்டார். ''இல்லை. நான் ஆண்டவருக்கு ஊழியம் செய்யப்போகிறேன்'' என்றதும் ஆச்சரியப்பட்டார். இவரும் கடவுள் இல்லை என்று சொல்லுகிற ஒரு நாஸ்திகவாதி.

பின்னர் பே சிலீப் (சம்பள ரசீது) வாங்கி கொண்டு மானேஜரிடம் கொண்டுபோய் கொடுத்தேன். சிலீப்பை வாங்கிப் பார்த்த மனேஜர் ஆச்சரியப்பட்டார். ''ராஜு! உனக்கு 10 வருடம் ஆகிவிட்டதா? நீ நேற்று வந்த ஆள்போல இருக்கிறாயே?'' என்று கேட்டார். ''எனக்கு 10 வருடம் ஆவதற்காகத்தான் இந்த கம்பெனி இது வரையிலும் ஓடினது என்பது தெரியுமா?'' என்று நான் கூறினேன். ''ஆமா! ராஜு! ஒரு மாதத்திற்கு முன்பிலிருந்து கம்பெனியை மூடவேண்டும் என்று நிர்வாகம் முயற்சித்தது. இப்பொழுதுதான் அதற்கான நேரம் வந்தது'' என்று கூறினார். ''சரி, மீண்டும் கம்பெனியை ஆரம்பிப்போம், நீ கட்டாயம் வரவேண்டும்'' என்று கூறினார். ''நான் வரமாட்டேன், என் ஆண்டவருக்கு சேவைச் செய்யப் போகிறேன்'' என்று கூறிக்கொண்டே பணத்தை பெற்றுக்கொண்டேன்.

எனக்கு 10 வருடம் ஆகி ஒருநாள் ஆனதும் கம்பெனி மூடிவிட்டது. பத்து வருடம் வேலை பார்த்தால் 'கிராஜுவிட்டி பணம்' என்று சொல்லக்கூடிய ஒரு சலுகை கிடைக்கும். ஒருநாள் குறைந்தாலும் சர்வீஸ் பணம் கிடைக்காது. கடன்காரர்களைக் கூப்பிட்டு கடனை கொடுத்தேன்'' நீ ஊருக்குப் போய்விட்டு வந்து பின்னாலே கொடுத்தால் போதும்'' என்றனர். அவர்களுக்கு வட்டிமேல் தான் ஆசை. நான் இனி வேலைக்கு வரமாட்டேன் கடன்களை வாங்கிக்கொள்ளுங்கள் என்று கொடுத்துவிட்டு, டிக்கெட்டுக்கு பணம் தந்த சகோதரருக்கும் பணத்தை கொடுத்துவிட்டு கொஞ்சம் பொருட்களை வாங்கிக்கொண்டு வீடுவந்து சேர்ந்தேன். அப்போஸ்தலரிடம் காரியங்களைக் கூறினேன். எல்லாரும் எங்களோடு தேவனை மகிமைப்படுத்தி ஒரு ஆசீர்வாத கூட்டம் நடத்தி எங்களை ஆசீர்வதித்து சில பொருட்கள் உதவிகளை எல்லாம் தந்து எங்களை வழி அனுப்பி விட்டு சென்றார்கள்.

1970ல் உலக வேலையை விட்டுவிட்டு பம்பாய் பட்டணத்திலிருந்து தமிழ்நாட்டிற்கு குடும்பாய் வந்து சேர்ந்தேன்.

அத்தியாயம் 3

# மண்ணெண்ணெய் இல்லாமல் ஸ்டவ் எரிந்தது

இவ்விதமாய் கர்த்தருடைய சேவைக்கு அழைக்கப்பட்டு அப்போஸ்தலர் அவர்களால் அதிகாரப்படுத்தப்பட்டு, கர்த்தருடைய ஆவியானவரால் அனுப்பப் படுவதற்கு முன்பு வாழ்க்கையில் நடந்த சில அனுபவங்களையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

ஒருநாள் இரவில் நாங்கள் வழக்கம்போல் செய்துவரும் குடும்ப ஜெபத்தை முடித்துவிட்டு நான் தனி ஜெபத்துக்காக கடந்து போனேன். கண்களை மூடி பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரிக்க ஆரம்பித்ததும் எனக்கருகாமையில் வெள்ளாடை தரித்து தலையில் பொற்கீரிடம் தரித்த மிகவும் அழகான ஒருவர் நின்று கொண்டிருந்தார். யாரோ ஒரு பரிசுத்தவான் நிற்கிறார் என்று நான் எண்ணினேன் என் எண்ணத்தை அவர் அறிந்தவர் போல, ''நான் யார் தெரியுமா?'' என்று கேட்டார். ''எனக்குத் தெரியாது'' என்று என் உள்ளத்திலேயே பதில் சொன்னேன். அவர் தம்முடைய இரண்டு சிறகுகளையும் இலேசாக விரித்துக்காண்பித்து விட்டு சுருக்கிக்கொண்டார். அப்பொழுது இவர் ஒரு 'தேவதூதன்' என்பதை தெரிந்துகொண்டேன்.

அவர் பேச ஆரம்பித்தார் ''நான் தேவனுடைய சமூகத்தில் நிற்கிற காபிரியேல் தூதன், உனக்குச் சில காரியங்கள் சொல்வதற்காகத் தேவனால் அனுப்பப்பட்டு வந்தேன். ''சொல்வதைக் கவனமாய் கேள்'' என்று என்னுடன் அவர் சொன்ன அந்த வார்த்தைகளை கேட்டதும் என் உள்ளம் உடைந்து உருகினது. தேவ அன்பு என் உள்ளத்தை நிரப்பினது. இந்த சிறுவனாகிய எனக்குச் செய்திகூற பரலோகத்தின் தேவன் தம்முடைய பரிசுத்த தூதனை அனுப்பியிருக்கிறாரே! என்பதை எண்ணி சில நிமிட நேரம் கர்த்தருடைய ஆவிக்குள்ளாகி கர்த்தரை மகிமைப்படுத்தினேன். இவையெல்லாம் அவருடைய சபையினிமித்தமே என்பதைப் பின்னால் உணரலானேன்.

தூதன் தொடர்ந்து சொன்னது, இன்னமும் நாற்பது நாளுக்குள்ளாக சாத்தான் உன்னை வஞ்சிப்பதற்கு திட்டமிட்டுள்ளான். ஏதேனில் ஆதாமை வஞ்சித்து தோட்டத்தை விட்டு வெளியேற்றினது போல் உன்னையும் திருச்சபையை விட்டு வெளியேற்ற, தேவனுடைய ஐக்கியத்தை விட்டுப் பிரிக்க சாத்தான் திட்டமிட்டுள்ளான். கவனமாயிருந்து காத்துக் கொள் ஆனாலும் கர்த்தர் உனக்குப் பாதுகாவலாய் இருக்கிறார் பயப்படாதே'' என்று கூறிவிட்டுக் கடந்து போனார். காரியம் இப்படி இருக்கிறது என்பதை மேய்ப்பரிடத்திலும், சபை நடுவிலும் அறிவித்தேன். எல்லாரும் எனக்காக ஊக்கமாய் ஜெபித்தார்கள். அன்றிலிருந்து நாற்பது நாட்கள் மிகவும் கவனமாக

இருந்தேன். ஒன்றன்பின் ஒன்றாக பத்து வகையான சோதனைகளை சாத்தான் நடத்தினான். ஆனாலும்! என் அன்புள்ள ஆண்டவர், என்னைத் தம்முடைய சேவைக்கென்று அழைத்தவர், சாத்தானை ஜெயிப்பதற்கான பெலன் தந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

நான் என் ஆண்டவருக்குத் தொண்டு செய்ய என்னை முற்றிலுமாக ஒப்படைத்து விட்டேன். ஆனாலும், என்னுடைய பெற்றோர்கள், என் உடன் பிறப்புகளாகிய தம்பிமார்கள். தங்கை மார்களுக்கு, என்னுடைய உதவி மிகவும் அவசியமாயிருந்தது. இப்படியிருக்க நான் என் ஆண்டவரிடம், என்னுடைய குடும்ப பாரத்தை வைத்து விண்ணப்பம் பண்ணினேன். ''ஆண்டவரே! நான் உம்முடைய சேவையை செய்யப் புறப்படுகிறேன். ஆனால்! என்னுடைய குடும்பம் என்னுடைய கரத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறதே!'' என்று கேட்டேன். ''நீ என்னுடைய சேவையை செய். நான் உன்னுடைய குடும்பத்தை ஆதரிப்பேன்'' என சர்வ வல்லமையுள்ள ஆண்டவர் கூறினார். ஆம்.

ஆண்டுகள் பல கடந்துவிட்டது. அதிசமானவர் அதிசமாய் என் குடும்பத்தையும் ஊழியத்தையும் இன்றுவரை தாங்கி வருகிறார்.

அவருக்கு துதி செலுத்த ஆயிரம் நாவிருந்தாலும் போதாது.

கர்த்தருடைய சேவைக்கென்று அழைக்கப்பட்ட கர்த்தருடைய பிள்ளையே! உன்னுடைய இல்லாமையை, இயலாமையைக் குறித்து கவலைப்படாதே. நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை. உன்னை கைவிடுவதுமில்லை என்று அவர் சொல்லியிருக்கிறார். ''நாம் வேண்டிக் கொள்கிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய்.... நமக்குச் செய்ய அவர் வல்லவராயிருக்கிறார். (எபே. 3:20)

நான் என்னுடைய உலக வேலைகளை விட்டு விட்டு ஊழியத்துக்கு புறப்படுவதற்கு முன் நான் வேலைப்பார்த்து வந்த மில்லில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து விட்டார்கள். இதனால் வருமானம் குறைந்து உலகப்பிரகாரமாய் சிறிது கஷ்டங்கள் ஏற்பட்டது. ஆனாலும், கர்த்தருக்குள் நாங்கள் மகிழ்ச்சியாகவே காணப்பட்டோம். (ஆப. 3:17,18)

இப்படிப்பட்ட ஒரு மாதத்தின் இறுதியில், காசில்லாத நேரம் வழக்கமாக சாமான் வாங்கி கடையிலும் சுற்றுப்புறத்திலும் மண்ணெண்ணை தட்டுப்பாடாகி விட்டது. காரணம் இந்தியா பாகிஸ்தான் சண்டை நடந்து கொண்டிருந்த நேரம். அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் கரி (கொய்லா) அடுப்புகள் வாங்கி சமையல் செய்ய முற்படுகிறார்கள். என்னுடைய துணைவி நமக்கும் கரி அடுப்பு வாங்க வேண்டுமல்லவா? சமையல் செய்ய

என்ன செய்வது? என்று கேட்டாள். என்னிடம் காசு இல்லை கர்த்தர் நமக்கு சாப்பாடு தந்தால் சாப்பிடலாம். இல்லையேல் உபவாசமிருப்போம்'' என்றேன். ''நாம் உபாவாசம் இருந்து கொள்ளலாம். பிள்ளைகளுக்கு என்ன செய்வது? என்று கூறினாள். நம்மைப் போஷிக்கும் ஆண்டவர் நமது குழந்தைகளையும் போஷிப்பார்'' என்று துணைவியிடம் கூறிவிட்டு நான் தேவனிடம் ஜெபிப்பதற்காக கடந்து போனேன்.

வழக்கமாய் நான் ஜெபிக்கும் பொழுது கர்த்தர் என் பக்கத்தில் நிற்பதை நான் காணுவேன். அன்றைக்கும் மாலை 5 மணியிலிருந்து கட்டிலில் உட்கார்ந்து மண்டியிட்டு ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது பரலோகத்தின் தேவன் என் சமீபத்தில் நிற்பதை அகக் கண்ணால் பார்க்கிறேன். (உபா. 4:7) அவருடைய கரத்தில் பரிசுத்த வேதபுத்தகம் இருப்பதையும் நான் பார்க்கிறேன். அவர் குனிந்து என் செவிகள் கேட்கும்படி என்னோடு பேச ஆரம்பித்தார். அவருடைய சத்தத்தை மிகவும் கவனமாய் கேட்க ஆரம்பித்தேன்.

''இந்த வேதத்திலுள்ள என்னுடைய எல்லா வார்த்தைகளையும் நீ விசுவாசிக்கிறாயா?'' என்று வேதத்தின் நாயகர் கேட்டார். ''ஆம்! ஆண்டவரே! உம்முடைய வார்த்தைகள் எல்லாவற்றையும் நான் விசுவாசிக்கிறேன்'' என்றேன். உடனே தம் கரத்திலிருந்த வேத புத்தகத்தை திறந்து அதில் ஒரு வசனத்தில் தம்முடைய ஒரு விரலை வைத்துக் காண்பித்து ''இந்த வசனத்தை விசுவாசிக்கிறாயா?'' என்று கேட்டார். நான் தலையை சாய்த்து அவர் காண்பித்த அந்த வசனத்தை மிகவும் கவனமாக வாசித்தேன். அவர் காண்பித்த வசனம் ''தம்முடைய தூதர்களை காற்றுகளாகவும் தம்முடைய ஊழியக்காரை அக்கினிஜுவாலைகளாகவும் செய்கிறார்'' (எபி. 1:7) என்பதே.

இந்த வசனத்தை இறைவன் எதற்காக இப்பொழுது நம்மிடம் காண்பிக்கிறார்? இதனால் நமக்கு என்ன போதனை தரப்போகிறாரோ? என்று நான் எண்ணிக் கொண்டிருக்கும்போது ''இந்த வசனத்தை நீ நம்புகிறாயா?'' என்று கேட்டார். இறைவன் நினைத்தால் தம்முடைய தூதர்களை காற்றுகளாகவும், அக்கினிஜுவாலைகளாகவும் மாற்ற முடியும் என்பதை எண்ணிக் கொண்டு, ஆம் ஆண்டவரே! இந்த வசனத்தையும் விசுவாசிக்கிறேன்'' என்று ஆவியிலேயே பதில் கூறினேன். அப்படியானால்! உன்னுடைய ஸ்டவ் அடுப்பு எரிய கொஞ்சம் அக்கினியை நான் அனுப்பி தர முடியும் என்று நீ விசுவாசிக்கிறாயா?'' என்று கேட்டார். எனக்கு மிகவும் ஆச்சியமாய் இருந்தது.

என்னோடு பேசுகிறவர் இல்லாமையிலிருந்து எல்லாவற்றையும் உண்டாக்க வல்லமையுள்ளவர். இருளிலிருந்து வெளிச்சத்தை பிரகாசிக்க

சொன்ன தேவன் அவரால் கூடாத காரியம் ஒன்றுமில்லை என உணர்ந்தவனாய் ''ஆம் ஆண்டவரே! விசுவாசிக்கிறேன்'' என்று பதில் உரைத்தேன். ''அப்படியானால் அதை செய்து பார்'' என்று கூறிவிட்டு இறைவன் மறைந்து விட்டார் நான் ஜெபத்தை முடித்துக் கொண்டு என் துணைவியை அழைத்து தேவன் பேசி சொன்ன காரியங்களை கூறி, ''கர்த்தர் இப்படி செய்ய முடியும்'' என்று நீ நம்புகிறாயா? என்று கேட்டேன்.

''ஆண்டவர் இப்படி செய்ய முடியும்! என்று நானும் விசுவாசிக்கிறேன்'' என்று கூறினாள். இருவருமாக ஸ்டவ்வை எடுத்து வைத்து ஜெபித்தோம். கொஞ்சம் ஸ்டவ்விலிருந்த எண்ணையையும் முந்தின நாள் இரவில் விளக்கில் ஊற்றி விட்டபடியால் இப்பொழுது ஸ்டவ்வில் ஒரு சொட்டு கூடஎண்ணை கிடையாது. கர்த்தருடைய வார்த்தையை நம்பி ஸ்டவ்வில் காற்றை நிறைய அடித்தேன். நிப்பிள் வழியாக எண்ணைக்குப் பதிலாக காற்று மட்டுமே சத்தமிட்டுக் கொண்டு வந்து கொண்டிருந்தது. உடனே ஒரு தீக்குச்சியை உரசி அந்த காற்றில் பிடித்தேன். என்ன அதிசயம்! காற்றில் தீப்பிடித்துவிட்டது. இப்பொழுது ஸ்டவ் எரிகிறது. என் துணைவி சமையல் செய்ய ஆரம்பித்தாள். நான் காய்கறி வங்கி வர வெளியே போய்விட்டேன். பக்கத்து வீட்டுப் பெண்கள் என் துணைவியிடம் வந்து ''நீங்கள் கிறிஸ்தவர்கள் பொய் சொல்லமாட்டோம் என்பீர்கள். இப்பொழுது மண்ணெண்ணையை வைத்துகொண்டு பொய் சொல்லி விட்டீர்களே'' என்று கேட்டிருக்கிறார்கள்.

''உண்மையாகவே நாங்கள் எண்ணையை வைத்துக்கொண்டு இல்லையென்று உங்களிடம் பொய் கூறவில்லை. எங்கள் ஆண்டவர் இப்பொழுது எங்களுக்கு இந்த ஸ்டவ்வை எரியவைத்தார்'' என்று என் துணைவி அவர்களிடம் கூறியிருக்கிறாள். ''உங்கள் ஆண்டவர் பேயைத் துரத்துவார். நோயை சுகமாக்குவார் என்பதை நாங்கள் நம்புகிறோம். ஆனால்! ஸ்டவ்வையும் எரிய வைப்பார் என்பதை நாங்கள் நம்பமாட்டோம். அப்படியானால்! நீங்கள் சமையல் செய்தபின் ஸ்டவ்வை எங்களிடம் காட்டவேண்டும். அதன்பிறகு உங்களுக்கு ஸ்டவ் எரிந்தால் நாங்கள் நம்புகிறோம்'' என்று கூறிவிட்டு போய்விட்டார்கள்.

நான் வீடு வந்ததும் விபரம் அறிந்தேன். ''சீக்கிரமாய் சமைத்து முடிந்ததும் அண்டை வீட்டுக்காரர்களை அழைத்து ஜெபம் செய்து மீண்டும் ஸ்டவ்வை பற்ற வைத்துக்காட்டு'' என்று கூறிவிட்டு நான் பைபிளைக் கையில் எடுத்துக்கொண்டு ஒருவருக்கு ஜெபம் பண்ணும்படியாக போய்விட்டேன். அன்றொரு நாள் சமாரிய ஸ்திரியானவள் , ''இவர் மேசியாவா? வந்து பாருங்கள்'' என்று சமாரியர் யாவரையும் அழைத்து

வந்ததுபோல் விபரங்களை அறிந்த இரண்டு ஸ்திரீகள் அந்தப்பக்கத்திலுள்ள எல்லா பெண்களிடமும், ''வாருங்கள்! மண்ணெண்ணெய் இல்லாமல் ஸ்டவ் எரிகிறது, வந்து பாருங்கள்'' என்று ஏராளமான பெண்களை அழைத்து வந்துவிட்டார்கள். ஒரு சகோதரி வந்து ஸ்டவை கழற்றி தலைகீழாக கவிழ்த்து மண்ணெண்ணை ஒன்றும் இல்லை என்று எல்லோரிடமும் காண்பித்து விட்டு இனி, எங்கள் முன்னால் ஸ்டவ்வை எரிய வைத்துக் காட்டவேண்டும். அப்பொழுது கர்த்தர் தான் உங்கள் ஸ்டவ்வை எரிய வைக்கிறார் என்பதை நாங்கள் நம்புவோம் என்று கூறி இருக்கிறது. உடனே என் துணைவியானவள் ஜெபம் செய்துவிட்டு ஸ்டவ்வை எரிய வைத்ததும் மீண்டும் ஸ்டவ் எரிய ஆரம்பித்தது. எல்லாரும் ஆச்சரியப்பட்டு, ''உங்கள் தேவன் தான் உண்மையான தேவன். அக்கினி இறங்க பண்ணுகிறார்'' என்று கூறிச் சென்றார்கள். அந்த ஏரியா முழுவதும் இந்தச் செய்தி பரவிவிட்டது.

இஸ்ரவேல் மக்கள் கானானுக்குள் காலெடுத்து வைத்து தேசத்தின் தானியத்தை புசிக்கும் வரைக்கும் (யோசு. 5:12) அவர்களுக்கு மன்னாவை கொடுத்தார். அதுபோல கடையில் மண்ணெண்ணை வரும் வரையிலும் மூன்று தினங்கள் இரவும் பகலும் ஸ்டவ் எரிய தேவன் உதவி செய்தார். அதிசயமானவருக்கே மகிமையுண்டாவதாக. சுற்றியிருந்த புறஜாதி மக்களில் அநேகர், நம்முடைய தேவனுடைய வல்லமையைக் கண்டு எங்களோடு குடும்ப ஜெபத்தில் பங்கெடுத்து கர்த்தரை மகிமைப்படுத்தி வந்தார்கள். அநேகருடைய வீட்டு முன்னால் வைத்திருந்த துளசி தெய்வத்திற்கு தொடர்ந்து அவர்கள் தண்ணீர் விடாமல் அவைகளெல்லாம் பட்டுப்போய்விட்டது. இவ்விதமாய் கர்த்தர் தம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தினார்.

அல்லேலூயா

''அவர் நாமம் அதிசயமானவர்'' (ஏசா. 9:6)

அத்தியாயம் 4

# தமிழ்நாட்டில் புதிய எருசலேம் சபையின் ஆரம்பம்

எங்களுடைய வாழ்க்கை முற்றிலும் மாறிவிட்டது. மிகவும் ஏழ்மையான தோற்றம். பழைய ஆடம்பரங்களையெல்லாம் விட்டுவிட்டு சாதாரண மனிதர்களாக ஊர் வந்து சேர்ந்தோம். கர்த்தருடைய அன்பு எங்கள் உள்ளங்களில் ஊற்றப்பட்டதும் எங்களுடைய ஆடம்பர வாழ்வு மறைந்துவிட்டது. ''ஒருவன் கிறிஸ்துவுக்குள் இருந்தால் புதுசிருஷ்டியாய் இருக்கிறான்; பழையவைகள் ஒழிந்து போயின. எல்லாம் புதிதாயின'' (1கொரி 5:17) என்ற வேதவாக்கியத்தின்படி அவைகள் மாற்றப்பட்டு விட்டது. என் துணைவிக்கு ஒரே ஒரு வெள்ளை புடவையும் எனக்கு ஒரு வெள்ளை பைஜாமாவும் ஒரு ஜிப்பா, மட்டுமே இருந்தது. அவைகளைத் துவைத்து, துவைத்து துணிகளெல்லாம் மஞ்சள் நிறமாகிவிட்டது. நாங்கள் அதைக்குறித்துக் கவலைப்படவில்லை. ஒருநாள் நாங்கள் (பம்பாய்) ஆராதனைக்கு சென்றுகொண்டிருந்தோம். எங்கள் வீட்டின் அருகாமையிலுள்ள சில பெண்கள் எங்களை பார்த்துக் கொண்டு நின்றார்கள். (எங்களுடைய பழைய வாழ்க்கையை அறிந்தவர்கள்) இவர்களை கடந்து வந்ததும், இவர்களெல்லாரும் நம்மை ஏளனமாக எண்ணுகிறார்கள் என்று என் உள்ளத்தில் உணர்ந்தவனாக அந்த பெண்களை நான் திரும்பிப் பார்த்தேன். அதில் ஒரு சகோதரி எங்களை பார்த்துக் காறித்துப்பினாள். ''சீ! இது என்ன வாழ்க்கை? இப்படியா ஆண்டவர் ஜீவிக்க சொன்னார்'' என்று மற்றவர்களிடம் கூறினாள். நாங்கள் அதைக்குறித்து கவலைப்படவில்லை. ஆண்டவர் நம்மை ஏழ்மையாக்கி விட்டாரே, மற்றவர்கள் நம்மை பரிகாசம் பண்ண இடம் கொடுத்து விட்டாரே என்று நாங்கள் எண்ணவில்லை. எம்பெருமான் இயேசு கிறிஸ்துவின் முகத்திலே காறி உமிழ்ந்த சமுதாயம் நம்மை காறிதுப்புகிறதென்றால் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. பரிசுத்தவான்களெல்லாம் இந்த பாதை வழியாகவே கடந்து போயிருக்கிறார்கள். ''அவமானத்துக்கும் உமிழ் நீருக்கும் என் முகத்தை மறைக்கவில்லை'' (ஏசா. 50:6) என்று கூறப்பட்டிருக்கிறது. ''ஐசுவரியவான் தான் தாழ்த்தப்பட்டதைக் குறித்து மேன்மைப்பாராட்டக்கடவன்'' (யாக் 1:10) என்றும் வேதம் கூறுகிறது. அனைத்து உலகத்தையும் சிஷ்டித்த, சிருஷ்டி கர்த்தராகிய நமது ஆண்டவர் மனுக்குலத்தை மீட்டு இரட்சிப்பதற்காக ''அடிமையின் கோலம் எடுத்தார்'' (பிலி 2:7) என்று பார்க்கிறோம்.

தமிழ்நாட்டிற்கு 1970ல் வந்து சேர்ந்தோம். என் உடன் பிறப்புகளும் எங்களை ஏளனமாய் பார்த்தார்கள். இவர்கள் இனி எப்படி வாழ்க்கையை கழிப்பார்கள் என எண்ணினார்கள். வீடு வந்ததும் வீட்டாரை ஜெபத்திற்காக

அழைத்தேன். யாவரும் வந்தார்கள். என் தம்பியின் துணைவி வரவில்லை. ஏன் வரவில்லை என்று விசாரித்தேன். அவள் கடந்த 40 தினங்களாக வாய் திறவாமல், ஒன்றும் சாப்பிடாமல் மரண அவஸ்தையாய் இருக்கிறாள் என்றார்கள். '' நீ உன் வீட்டிற்கு போனதும் உன் வீட்டார் உன்னை ஏற்றுக் கொள்ளும்படியாக நான் பெரிய அற்புதம் ஒன்று செய்வேன்'' என்று ஆண்டவர் என்னோடு பேசியிருந்தார். தம்பியின் துணைவி பெலவீனமாய் இருக்கும் செய்தி கேட்டதும் கர்த்தர் அதிசயம் நடத்தப்போகிறார் என எண்ணி கர்த்தரை மகிமைப்படுத்தினேன்.

தம்பியின் வீட்டிற்கு கடந்துபோய் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தில் அவளைக்கட்டியிருந்த ஆவியை அதட்டினேன் கர்த்தர் அற்புதமாய் விடுதலையளித்தார். கர்த்தருடைய அன்புக்காய் கர்த்தரை ஸ்துதிக்கிறேன். உடனடியாக வாய்திறந்து பேசினாள். ஆகாரம் சாப்பிட்டாள். இந்த செய்தி அந்த ஊரிலுள்ள அநேகமான மக்களுக்கு தெரியவரவே தங்கள் வீடுகளிலுள்ள வியாதியஸ்தர்களையெல்லாம் அழைத்து வந்தார்கள். தேவனாகிய கர்த்தர் எல்லாவித நோய்களையும் குணமாக்கி, சகல பிசாசுகளையும் துரத்தி மக்களை தம்முடைய மகிமையுள்ள ஆவியினால் நிரப்பினார். அன்று முதல் தமிழ்நாட்டில் ''புதிய எருசலேம் சபை'' ஆரம்பமாகிவிட்டது. அல்லேலூயா!

தேவனுடைய வேலை ஆரம்பமான இடத்தில் சாத்தானும் தன்னுடைய வேலையை துவங்க ஆரம்பித்தான். பலத்த எதிர்ப்புகளும், பயமுறுத்தல்களும் உருவானது. ஒருநாள் இரவில் என்னுடைய தலையை அறுத்துவிட வேண்டுமென்று பலருடைய தூண்டுதலினால் என்னுடைய மூத்த சகோதரர்கள் இருவர் இரவு முழுக்க விழித்து காத்திருந்தனர். ஆனால் என்னை ஆட்கொண்ட என் தேவனாகிய கர்த்தர் என்னை அந்த இராத்திரியில் சொந்த ஊருக்கு வராதபடி தடைசெய்துவிட்டார்.

மறுநாள் ஊருக்கு வரும் பொழுது செய்தியறிந்தேன். ''நீ இனி இந்த ஊரில் ஊழியம் செய்ய முடியாது நிலைமை ரொம்ப மோசமாகி விட்டது. நீ போலீஸ் பாதுகாவலுடன் ஊருக்கு செல்ல வேண்டும்'' என்று பாதிவழியில் என் தகப்பனார் வந்து ஆலோசனை கூறினார்கள். அந்த செய்தி கேட்டதும் என்னை நடத்தி வரும் என் தேவனிடம் விண்ணப்பம் செய்தேன். ''ஜீவனுள்ள ஆண்டவரே! என்னை உம்முடைய சேவைக்கென்று அழைத்து என்சொந்த ஊருக்கு அன்பியுள்ளீர்! இப்பொழுதும் என் பிராணனைக் காத்துக் கொள்ள போலீசாரின் துணையை நான் தேட வேண்டுமா? உமக்காக நான் மரிக்கவும் ஆயத்தமாயுள்ளேன். என் ஊழியத்தின் கடைசி மணி நேரம் வந்து விட்டதென்றால் அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். என் பிராணனைக் காக்க

போலீஸ் உதவியை நான் தேடமாட்டேன் என்றேன்''.

இஸ்ரவேலின் சேனைகளின் கர்த்தர் பேசினார். ''உன்னை தொடுகிறவன் என் கண்மணியைத் தொடுகிறான்'' என்ற வேத வாக்கியத்தை மறந்துவிடாதே. உன்னை ஒருவனும் தொடமாட்டான் ஊருக்குப்போ'' என்று கூறினார். தைரியமாய் ஊருக்கு வந்துவிட்டேன். என்னுடைய உள்ளத்திலிருந்த பயத்தின் ஆவியை தேவன் மாற்றி தைரியமடைய செய்தார்.

இப்படியே ஊழியம் வளர ஆரம்பித்தது. பல மந்திரவாதிகளும் எதிர்த்து மரணத்தைக் கண்டு விட்டார்கள். என்னுடைய இளைய சகோதரர் ஒருவரை தேவன் ஊழியத்திற்காக பக்குவப்படுத்தி ஒரு தீர்க்கதரிசியாகத் தந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக! நாங்கள் இருவரும் அநேக இராத்திரியை காடுகளிலே ஜெபத்தில் கழித்து வந்தோம். சுமார் ஓராண்டு காலமாக இரவு நேரத்தை காட்டிலேயே ஜெபத்திலே கழித்து வந்தோம். இயேசு கிறிஸ்து பகல் முழுவதும் ஊழியம் செய்து இராமுழுவதும் மலைகளிலும் காடுகளிலும் ஜெபித்து வந்தார் அவர் வைத்து போன மாதிரியின்படி எங்களையும் நடத்தினார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

### சேலத்தில் ஊழியம்

இப்படியிருக்க கர்த்தர் ஒருநாள், ''சேலத்தில் ஒரு சகோதரி பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றவள். இப்பொழுது அசுத்த ஆவியால் தாக்கப்பட்டு மிகவும் வேதனைப்படுகிறாள். இந்த அசுத்த ஆவி இவளை தாக்குவதற்கு காரணம் என்ன என்பதை வெளிப்படுத்தி, நீங்கள் கடந்து போய் அவளுக்கு ஜெபம் பண்ணுங்கள் நான் அவளை விடுவிப்பேன், சேலத்தில் சீக்கிரம் ''புதிய எருசலேம் சபையின் வேலை ஆரம்பமாகும்'' என்று பேசினார். சகோதரன் மூலம் தீர்க்கதரிசனம் வரும் பொழுது நாங்கள் கடந்த போக வேண்டிய இடங்களை தேவன் காட்சியிலே காண்பிப்பார். இவ்வித செய்தியை டைரியில் பதிவு செய்து கொண்டு, தேவன் அனுப்பின ஓர் நாளிலே சேலம் போய் குறிக்கப்பட்ட வீட்டைக் கண்டுபிடித்து அந்த ஆவியை நசரேயனாகிய இயேசுவின் நாமத்தில் கடந்து கொண்டோம். அந்த அம்மாவுக்கு பூரண விடுதலையை தேவன் கொடுத்தார்.

அந்த அம்மா ''நீங்கள் எங்கேயிருந்து வந்திருக்கிறீர்கள்'' என்று கேட்டார்கள். ''நாங்கள் நெல்லை மாவட்டத்தின் தெற்கு பகுதியிலிருந்து கர்த்தரால் அனுப்பப்பட்டு வந்திருக்கிறோம்'' என்று கூறினோம். உடனே அந்த அம்மா கண்ணீர் வடித்து, ''என் ஆண்டவர்! இந்த ஏழையின் கண்ணீருள்ள ஜெபத்தைக் கேட்டு தம்முடைய ஊழியக்காரரை அனுப்பி விடுதலை தந்தாரே'' என்று தேவனை மகிமைப்படுத்தினார்கள். இந்த

சகோதரிக்கு ஏன் இந்தப் பெலவீனம் வந்தது என்றும் தேவன் வெளிப்படுத்தினார். ''கேரளாவை சேர்ந்த வாலிப பெண் ஒருத்தி குறி சொல்லும் ஆவியை பெற்றவள். வெள்ளை சாரி கட்டி தன்னை ஒரு ஆவிக்குரியவள் போல் காண்பித்து அநேக ஆவிக்குரிய பெண்களையும், ஆண்களையும் பெலவீனப்படுத்தியிருக்கிறாள். இந்த சகோதரியோடு, அந்த குறி சொல்லுகிற ஆவியை உடையவள், அடிக்கடி சந்தித்து பேசினபடியால் அவளிடமுள்ள அந்த ஆவி இவளை பெலவீனப்படுத்தியுள்ளது. ஆகையால் இவள் அடிக்கடி தற்கொலை செய்து கொள்ள விரும்புகிறாள். எனவே நீங்கள் முதலாவது அந்தக் குறி சொல்லும் ஆவியையுடைய அந்த பெண்ணின் வீடு பக்கம் போய் அந்த ஆவியை முதலில் கட்டி விட்டுப் பின்னர் இந்த சகோதரிக்கு போய் ஜெபியுங்கள்'' என்று தேவன் எங்களுக்கு வெளிப்படுத்தியிருந்தார்.

அந்தப்படியே முதலாவது, அந்தக் குறி சொல்லும் ஆவியைக் கொண்டுள்ள அந்த ஸ்தீரியின் வீட்டுப்பக்கமாய் போனோம். அங்கே ஒரு இளம் பெண் ஒரு சிறு மரப்பொம்மையை வைத்துக்கொண்டு அதன் முன்பாக தலைமுடியெல்லாம் கலைந்து ஆடிக்கொண்டேயிருந்தாள். அந்த வீட்டின் பக்கம் போனதும் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தில் அந்த ஆவியை கட்டினோம். ''பலவானை முந்திக் கட்டினாலொழியப் பலவானுடைய வீட்டுக்குள் புகுந்து அவன் உடமைகளை எப்படிக் கொள்ளையிடக் கூடும்?'' (மத். 12:29) ஆவியைக் கட்டினதும், அவள் தன் ஆட்டத்தை நிறுத்திக் கொண்டு தன்னுடைய வல்லமை குன்றிப் போனதை அறிந்து, பதறி தலையை ஒழுங்குப் படுத்திக் கொண்டு, எழுந்திருந்து ''வாருங்கள். இப்படி இருவர் வருவார்கள் என்று எனக்கு வெளிப்பாடு ஆனது வாருங்கள். கை, கால் அலம்பி இளைப்பாறுங்கள்'' என்று எங்களை உபசரிக்க ஆரம்பித்தாள். ''நாங்கள் உன்னிடம் செய்தி கேட்க வரவில்லை. நாங்கள் வேறு ஜோலியாக வந்தோம்'' என்று கூறிவிட்டு நாங்கள் கடந்து போய்விட்டோம்.

''பிரியமானவர்களே! உலகத்தில் அநேக கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றியிருப்பதினால், நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்தறியுங்கள்''. (1 யோவா 4:1) இதைக் கண்டு பிடிப்பது கொஞ்சம் கஷ்டமான காரியந்தான் ''சாத்தானும் ஒளியின் தூதனுடைய வேஷத்தை தரித்துக் கொள்வானே'' (2கொரி 11:14) தேவனுடைய கிருபையைப் பெற்றவர்கள் மட்டுமே இவ்வித ஆவிகளை கண்டுபிடிக்க முடிகிறது.

இந்நாட்களில் வேதம் அறியாத சிலர் சாத்தானை 'ஒளியின் தூதன்' என்று சொல்லுகிறார்கள். யாருக்காவது அசுத்த ஆவி பிடித்திருந்தால் ஒளியின்

தூதன் இறங்கி விட்டான் என்று கூறுகிறார்கள். ''நான் உலகத்திற்கு ஒளியாய் இருக்கிறேன்'' (யோவா. 8:12) என்று நமது இரட்சகர் கூறுவதால் அவருடைய தூதர்களை, ஊழியர்களை ''ஒளியின் தூதர்கள்'' என்று கூறமுடியும். ஆகையால் சாத்தானுடைய ஊழியக்காரரும் நீதியின் (தேவனின்) ஊழியக்காரருடைய வேஷத்தை தரித்துக் கொண்டால் அது ஆச்சரியமல்லவே என்று பவுலும் கூறுகிறார். (2கொரி 11:15) ஒளியின் தூதன் என்றால் சாத்தான் அல்ல.

இப்படி தேவனுடைய ஊழியக்காரிப்போல் வேஷந்தரித்து தேவனுடைய பிள்ளைகளை வஞ்சிக்கும் ஒரு ஆவியை கட்டுவதற்கு முதலாவது தேவன் கிருபை செய்தார் அவருக்கே மகிமையுண்டாவதாக! ஆவிகளை துரத்துவதில் இரண்டு முறைகளை தேவன் கற்று தந்திருக்கிறார். ஒன்று : அசுத்த ஆவி பிடித்தவர்களிடமிருந்து அதை வெளியேற்றுவது. இரண்டாவது : அசுத்த ஆவியின் இருப்பிடத்தை விட்டே அதை துரத்தி விடுவது.

இவ்விதமாய் தேவன் தம்மால் முன் குறிக்கப்பட்ட தமது ஜனங்களை, பிசாசின் பிடியிலிருந்து மீட்டு இரட்சிப்பதற்காக தம்முடைய சரீரமாகிய சபையின் மூலம் தம்முடைய ஊழியக்காரர்களுக்கு கொடுத்துள்ள அதிகாரங்களுக்காக, வல்லமைகளுக்காக, தேவனை ஸ்துதிக்கிறேன். வாழ்க கர்த்தருடைய நாமம்! வளர்க தேவனுடைய சரீரமாகிய திருச்சபை!

இப்படி நாங்கள் தேவனுடைய ஆலோசனையை நிறைவேற்றி விட்டு தேவ உத்தரவின்படி மீண்டும் சில நாட்கள் சேலத்தில் தங்கி கிராமங்களில் கர்த்தருடைய செய்தியை அறிவித்து வந்தோம். பாஸ்டர் ராஜா டி. ஸ்டீபன் என்ற சகோதரர், நாங்கள் தங்கி ஊழியம் செய்வதற்காக ஒரு கிராமத்திலுள்ள அவர்களுடைய தேவாலயம் ஒன்றில் எங்களுக்கு இடம் தந்தார். அங்கே ஒரு கோயில் குட்டி (பணியாள்) ஒருவரும் இரவில் எங்களோடு தங்குவார்.

நாங்கள் தங்கியிருந்த ஆலயத்தில் பலமுறை திருடர்கள் கொள்ளையடித்திருப்பதாகவும், இந்த ஊர் மிகவும் துஷ்டர்கள் நிறைந்த ஊர். நீங்கள் போகும் வரை கவனமாய் இருக்கவேண்டும் என்றும் கர்த்தர் எங்களுக்கு வெளிப்படுத்தியிருந்தார். சில நாட்களை கவனமாய் கழித்தோம். ''நாளை காலையில் நாங்கள் ஊருக்குப் போகிறோம்'' என்று கோயில் குட்டியாக பணிபுரியும் பெரியவரிடம் கூறியிருந்தோம். அன்று இரவில் இரண்டு வாலிபர்கள் நாங்கள் தங்கியிருந்த ஆலயத்திற்குள் வந்து, ''நீங்கள் சில நாட்களாக எங்களுடைய கிராமத்தில் கர்த்தருடைய ஊழியத்தை செய்து வருகிறதை நாங்கள் கண்டோம். உங்களிடம் வந்து ஆண்டவரைப் பற்றி அறிய விரும்பினோம். ஆனால் சமயம் கிடைக்கவில்லை. நாளைக் காலையில் நீங்கள் ஊருக்குப் போவதாக அறிந்து இப்பொழுது வந்துள்ளோம்.

எங்களுக்கு ஆண்டவரை பற்றி கூறுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார்கள்.

இருவரும் கிறிஸ்தவ மதத்தை சேர்ந்தவர்களே. சிறிது நேரம் ஆவிக்குரிய அனுபவங்களைப் பற்றியும், இரட்சிப்பின் வழியைப்பற்றியும் கூறினோம். இருவரில் ஒருவர் நான் இரவு வேலைப்பார்த்து வந்ததால் மிகவும் களைப்பாய் இருக்கிறேன் என்று கூறி சீக்கிரமாய் படுத்துக் கொண்டார். மற்றவரும் அடுத்து படுத்துக் கொண்டு, ''நீங்கள் நாளை பிரயாணப்படுகிறவர்கள் ஆகையால் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினர். நாங்கள் வெளி இடங்களுக்கு சென்றால் இரவு வேளையை தூங்காமல் ஜெபத்திலேயே கழிப்பது வழக்கம். அப்படியே, நானும் சகோதரரும் இரவில் ஜெபம் செய்ய ஆரம்பித்தோம். உடனே ஆவியானவர் பேசினார். ''வந்திருப்பவர்கள் இருவரும் திருடர்கள். தவறான திட்டத்தோடு இங்கே வந்திருக்கிறார்கள். உடனடியாக நீங்கள் வெளியேறிவிட வேண்டும்'' என்று கர்த்தர் பேசினார்.

இரவு சுமார் 12.30 மணியிருக்கும் நாங்கள் எங்களுடைய பொருட்களை எடுத்துக் கொண்டு வெளியே புறப்பட்டோம். திருடர்கள் இருவரும் தூங்கினது போல் பாசாங்கு செய்கிறார்கள். நாங்கள் மெதுவாக வெளியேறி, கதவை வெளியே பூட்டி சாவியை கோயில் குட்டியாரின் வீட்டிலே கொண்டு கொடுக்கப்போகிறோம். அவர் வீட்டு வராந்தாவில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அன்றைய தினம் இவர் அந்த திருடர்களை உள்ளே அனுப்பிவிட்டு இவர் தூங்க வரவில்லை.

எங்களை கண்டதும் ரொம்ப ஆவேசமாய் ''என்ன ஐயா! என்ன நடந்தது? இந்நேரத்தில் வந்திருக்கிறீர்கள்?'' என்று புலம்ப ஆரம்பித்தார். ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நாங்கள் கொஞ்சம் சீக்கிரமாய் போக வேண்டுமென்று புறப்பட்டோம். உங்கள் பேரப்பிள்ளைகள் இருவர் ஆலயத்தில் வந்து உங்கள் பேரைச்சொல்லிக் கொண்டு தூங்குகிறார்கள். பூட்டிச் சாவியை கொண்டு வந்துள்ளோம். நீர் போய் திறந்து விடும்'' என்று கூறி சாவியை கொடுத்து விட்டு, நாங்கள் நள்ளிரவே சுமார் 4 கி.மீட்டர் தொலைவிலுள்ள பஸ் நிலையத்திற்கு வந்து சேர்ந்தோம். இவ்விதமாய் திருடர்களின் கரத்தினின்று எங்களைப் பாதுகாத்த என் தேவனை நன்றியோடு ஸ்துதிக்கிறேன்.

கர்த்தர் சொன்னபடியே இன்று சேலத்தில் 'புதிய எருசலேம் சபை' உருவாகி கர்த்தருடைய வல்லமையால் ஊழியங்கள் நடந்து வருகிறது. ''கால் மிதித்த இடத்தையெல்லாம் சொந்தமாக்கி தருவேன்'' என்ற வாக்குத்தத்தத்தை புதிய எருசலேமில் நிறைவேற்றி வருகின்றபடியால் கர்த்தர் ஸ்தோத்தரிக்கிறேன்.

அத்தியாயம் 5

# 18 ஆண்டுகள் வாய் பேசாத பெண்ணை சுகமாக்கினார்!

நாங்கள் சேலத்தில் இருக்கும் பொழுது அடுத்து நாங்கள் செய்ய வேண்டிய ஊழியத்தைக் குறித்து தேவன் பேசினார். ''கன்னியாகுமரியிலிருந்து சுமார் 3 கிலோ மீட்டர் தொலைவில் வடக்கே வலது பக்கம் செல்லும் பாதையில் உள்ளே போய் 18 ஆண்டு காலமாய் வாதையால் தாக்கப்பட்டு இப்பொழுது வாய் பேசாமல் ஒரு மகள் இருக்கிறாள். அந்த வீட்டார் இரவும் பகலும் என்னை நோக்கி கூப்பிடுகிறார்கள். கடந்து போய் ஜெபியுங்கள் நான் விடுதலையளிப்பேன்'' என்று சர்வ வல்லமையுள்ள ஆண்டவர் பேசினார்.

இவ்விதமான தேவ உத்தரவை பெற்றுக் கொண்டு நாங்கள் சேலம் ஊழியத்தை முடித்துக் கொண்டு ஊருக்கு வந்தோம். மறுநாள் மேற்படி விலாசத்தை கரத்தில் எடுத்துக் கொண்டு கன்னியாகுமாரி போய் அங்கிருந்து கால் நடையாக நடந்து வந்து தேவன் காண்பித்த இடத்துக்கு காலை 8.30 மணிக்கு வந்து சேர்ந்தோம். இந்த நாட்களில் ஆவிக்குரியவர்கள் என்று கூறுகின்றவர்களிலும் பலர், தேவன் இனி மனிதனோடு பேசமட்டார். அவர் பேச வேண்டியதெல்லாம் வேதத்தில் எழுதி தந்துவிட்டார் என்று கூறுகிறார்கள். இவர்கள் பரிசுத்த ஆவியானவரால் நடத்தப்பாடதவர்கள். அது மட்டுமல்ல, ''பாவிகளுக்கு தேவன் செவிக்கொடுக்கிறது இல்லையென்று அறிந்திருக்கிறோம். ஒருவன் தேவபக்தியுள்ளவனாயிருந்து அவருக்கு சித்தமானதை செய்தால் அவனுக்கு செவி கொடுப்பார்'' (யோவா. 9:31) என்று வேதம் கூறுகிறது.

அப்படியே ஆதித்திருச்சபையிலும் ''நீ போய் அந்த இரதத்துடனே சேர்ந்து கொள்'' என்று பிலிப்புடனே பரிசுத்த ஆவியானவர் கூறினார். (அப். 8:29) ''நீ ஒன்றுக்கும் சந்தேகப்படாமல் அந்த மனிதர்களோடு போ'' என்று பேதுருவிடம் கர்த்தருடைய ஆவியானவர் கூறினார். (அப். 10:20). பவுலையும், சீலாவையும் அந்நாட்களில் ஆசியாவில் கர்த்தருடைய வசனத்தை சொல்லாதபடிக்கு பரிசுத்த ஆவியானவர் தடை செய்தார். அப். 16:6 இன்னும் ஏராளமாய் சொல்ல முடியும். இவைகள் அப்போஸ்தலர் காலத்தின் ஊழியங்கள், இன்றைக்கும் அப்போஸ்தல ஊழியம் நடைபெறுகிறது என்பதை நினைவூட்டுகிறேன்.

நாங்கள் சென்ற இடத்தின் பெயர் ஒற்றையால்விளை. தேவன் காண்பித்த இடத்திற்கு போய் சேர்ந்தோம். அந்த இடம் ஓர் சி.எஸ்.ஐ. ஆலயத்தின் காம்பவுண்ட். அங்கே காலை 8.30 மணிக்கு ஆராதனைக்காக

முதலாம் மணி அடிக்கப்படுகிறது. ''என்ன ஆண்டவரே! எங்களை ஆலயக் காம்பவுண்டில் கொண்டு விட்டு விட்டீரே'' என்று நின்று கொண்டே இறைவனிடம் கேட்டோம். ''நீங்கள் ஆலயத்திற்குள் போய் இந்த ஆராதனையில் கலந்து கொள்ளுங்கள். பெலவீனமாயிருக்கிற அந்த சகோதரியின் கணவனை அங்கு சந்திப்பீர்கள். அவன் உங்களை தன்னுடைய வீட்டிற்கு அழைத்துப்போவான்'' என்று பரிசுத்த ஆவியானவர் பேசினார். நாங்கள் தேவ உத்தரவைப் பெற்று ஆலயத்திற்குள் சென்றோம். அங்கே இருவர் ஆராதனை ஒழுங்குகளை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் இளம் வயதுடையவர். அவர் தான் இங்குள்ள உபதேசியார் என்பதை பின்னால் அறிந்து கொண்டோம். அவர் எங்களை கண்டதும் மிகவும் மலர்ந்த முகத்துடன் "Praise the Lord Brother என்று எங்களுக்கு கரம் கொடுத்து நீங்கள் இருவரும் இந்த ஆராதனையில் செய்தி கொடுக்கவேண்டும்'' என்று கூறினார். ''கர்த்தர் அனுமதித்தால் செய்தி கொடுக்கிறோம்'' என்று கூறிவிட்டு அருகாமையிலிருந்த ஒரு பெஞ்சில் எங்கள் பைகளை வைத்துக் கொண்டு ஜெபம் செய்தோம். அந்த ஆலயத்தினுள் நின்ற மற்றவர் உபதேசியாரை ஆல்ட்டரில் அழைத்து ''பெந்தேகோஸ்துக்காரர்களை அழைத்து பிரசங்கம் செய்ய வைத்து சபையை உடைக்கலாம் என்று எண்ணுகிறீரோ? உமக்கு எதற்கையா சம்பளம் கொடுக்கிறோம்?'' என்று மிகவும் காட்டமாகப் பேசினார். ''என்னங்க, நான் தான் எப்பொழுதும் உங்கள் மத்தியில் பேசிக் கொண்டிருக்கிறேனே. ஏதோ புதிதான சாட்சிகளை, செய்திகளை கேட்கும் பொழுது சபை மக்களிடம் ஒரு உணர்வு உண்டாகுமே என எண்ணித் தான் நான் சொன்னேன்'' என்று உபதேசியார் பதில் கூறினார். இதற்கிடையில் நான் ஜெபத்தை முடித்துக் கொண்டு இவர்களை பார்த்தேன். ஆல்ட்டரில் நின்ற மற்றவர், ''பிரதர் இங்கே வாருங்கள்'' என்று அழைத்தார். நான் கடந்து போனேன். ''நீங்கள் எந்த சபையை சேர்ந்தவர்கள்?'' என்று கேட்டார். ''ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்றேன். அதற்கு அவர், ''இல்லை பெந்தேகோஸ்துக்காரர்கள் பிரசங்கம் பண்ணி சபைகளை உடைத்து விடுவார்கள்.

ஆகையினால் தான் கேட்கிறேன்'' என்றார். ''நாங்கள் இங்கே சபையை உடைப்பதற்காக வரவில்லை. நாங்கள் வேறு ஜோலியாக வந்தோம். கர்த்தர் அனுமதித்தால் எங்களுடைய அனுபவ சாட்சியைக் கூறுவோம். அதற்காக வருந்த வேண்டாம்'' என்று கூறினேன். அவர் ''சரி பிரதர்! நீங்கள் பிரசங்கம் பண்ணுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

மீண்டும் வந்து என்ன செய்தியை இங்கே பேச வேண்டும் என்று கர்த்தரிடம் விண்ணப்பித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது பரிசுத்த

ஆவியானவர் : ''உன்னிடம் பேசினவன் தான் அந்த பெலவீனமுள்ள சகோதரியின் கணவன். ஆராதனை முடிந்ததும் உங்களை தன்னுடைய வீட்டிற்கு அழைத்துப் போவான்'' என்று பேசினார்.

ஆராதனை ஆரம்பமானது. பிரசங்க நேரத்தில் உபதேசியர் எங்களை அழைத்தார். உடன் சகோதரர் சாட்சி கொடுத்தார். எனக்கும் தேவன் கொடுத்த செய்தியை அவ்வேளையில் அறிவித்தேன். பிரசங்கத்தின் ஆரம்பத்திலேயே நாங்கள் இங்கே பிரசங்கம் செய்வதற்காக வரவில்லை. நீண்ட நாட்களாக இந்த பிரதேசத்தில் ஒரு சகோதரி பெலவீனமாய் இருப்பதாக தேவன் வெளிப்படுத்தியுள்ளார். அவர்களுக்கு ஜெபிப்பதற்காகவே நாங்கள் வந்துள்ளோம் என்று கூறி தேவ செய்தியை கொடுத்து முடித்தோம்.

ஆராதனை முடிந்ததும் கர்த்தர் சொன்னபடி அவர் எங்களிடம் வந்து, ''ஐயா! என்னுடைய வீடுவரைக்கும் நீங்கள் வந்து ஒரு ஜெபம் செய்து போக வேண்டும்'' என்று கூறினார். ''உங்கள் வீட்டிற்கு தான் நாங்கள் வந்திருக்கிறோம். பயப்படாமல் உங்கள் வேலைகளையெல்லாம் முடித்து விட்டு வாருங்கள்'' என்று அவரிடம் கூறினோம். அவர் அந்த ஆலயத்தில் முக்கியமான ஒருவரும் கூட தன்னுடைய கடமைகளை முடித்துக்கொண்டு எங்களிடம் என்னுடைய வீட்டுக்குத் தான் வந்திருப்பதாகக் கூறினீர்களே! எங்கள் வீட்டில் நோயாளி இருப்பதை உங்களுக்குச் சொன்னது யார்?'' என்று கேட்டார்.

''உங்கள் துணைவி 18 ஆண்டுகாலமாய் பெலவீனமாகி இப்பொழுது வாய் பேசாமல் இருக்கிறது'' என்று தேவன் கூறினார் என்றதும், வானத்தை நோக்கி பார்த்துக் கண்ணீர் விட்டார். ''ஆண்டவரே! என்னுடைய மன்றாட்டை கேட்டு என்னுடைய குடிசைக்கு அனுப்பிய ஊழியர்களை நானே தடைசெய்துவிட பார்த்தேனே. சகோதரர்களே! நான் உங்களை பிரசங்கிக்கக்கூடாது என்று தடை செய்திருந்தால் நீங்கள் போயிருப்பீர்களா?'' என்று கண்ணீரோடு கேட்டார். ''நாங்கள் தேவசித்தம் செய்யாமல் போகமாட்டோம்'' என்று கூறினோம். நீங்கள் ஆலயத்துக்குள் வராமல் என் வீட்டிற்கு வந்திருந்தாலும் உங்கள் உடையைப் பார்த்ததும், என் வீட்டிலே ஜெபிக்க வேண்டாம் என்று கூறியிருப்பேன். காரணம் பெந்தேகோஸ்துகாரர்கள் என்றாலே எனக்கு ரொம்ப வெறுப்பு'' என்று கூறினார். எங்களை அவருடைய வீட்டிற்கு அனுப்பாமல் ஆலயத்துக்கு நேராக எங்களை ஏன் வழிநடத்தினார் என்பதின் இரகசியத்தை அப்பொழுது அவருடைய வார்த்தையால் அறிந்து தேவனை ஸ்தோத்திரித்தோம். ஆ! தேவனுடைய அறிவே அறிவு! யார் அவருக்கு ஆலோசனை கூறமுடியும்.

பேசிக்கொண்டே அவருடைய வீட்டை அடைந்தோம். பெலவீனமான அந்த அம்மா அடுக்களையில் போய் ஒளித்துக் கொண்டது. கணவன் போய் ''ஊழியர்கள் உனக்காக ஜெபிக்க வந்திருந்திருந்தார்கள். வா!'' என்று அழைத்திருக்கிறார். அந்த அம்மா வரமாட்டேன் என்று தலையை அசைத்துக் கொண்டு கதவின் பின்புறமாக போய் ஒளித்துக் கொண்டது.

''எந்த பிரசங்கிமார் வந்தாலும் ஜெபிக்க வந்து விடுவாள். இன்றைக்கு ஏனோ வர மறுக்கிறாள் நீங்கள் வேண்டுமானால் வீட்டிலே ஒரு ஜெபம் பண்ணி விட்டு போங்கள்'' என்று அவர் கூறினார். வந்திருப்பவர்கள் தேவனுடைய ஊழியக்காரர்கள் என்பதை பிசாசு அறிந்திருந்தபடியால், அந்த அம்மாவை ஜெபிக்க வர விடாதபடி பிசாசு, தடை செய்து விட்டது. அந்தப் பிசாசு இன்றைக்கு வெளியேறப் போகிறது என்று உறுதியாக நாங்கள் கூறினதும், ஒரு சிறு பிள்ளையை தூக்கி வருவதுபோல் தூக்கி வந்து வீட்டின் மத்தியில் அமரச் செய்தார்.

பிசாசு பல ஆண்டுகளாய் அந்த அம்மாவை தாக்கி இருந்தபடியால் உருவமெல்லாம் கரைந்து ஒரு சிறு பிள்ளையைப்போல் ஆகிவிட்டது. ஒரு பாவாடையும் சட்டையுமே அணிந்திருந்தது. பிசாசானவன் கொல்லவும், அழிக்கவுமே வருகிறான் என்கிற சத்தியம் எவ்வளவு உண்மையாயிருக்கிறது என்பதை அறிந்து கொண்டோம்.

கர்த்தர் எங்களுக்கு கொடுத்த அதிகாரத்தின்படி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே பிசாசை அதட்டினோம். அந்த அம்மாவை கீழே தள்ளி சிறிது நேரம் அலைக்கழித்து. தாயாரின் துயர நிலையைக் கண்ட அவர்களுடைய பிள்ளைகளெல்லாம் சத்தமிட்டு அழ ஆரம்பித்தது. அந்த அம்மாவை தாக்கியிருந்த பிசாசு வெளியேறினதும் பல ஆண்டுகளாக ஊமையாக இருந்த அந்த அம்மா வாய் திறந்து, ''பிள்ளைகளே! அழாதீர்கள் எனக்கு ஒன்றுமில்லை,'' என்று பேசினார்கள். பிள்ளைகளெல்லாம் சந்தோஷத்தில் சத்தமிட்டனர். எங்க அம்மா பேசிவிட்டார்கள்! பேசிவீட்டார்கள்! என்று சத்தமிடவே அக்கம் பக்கதிலுள்ளவர்களெல்லாரும் செய்தி கேட்டு அந்த ஊரே அங்கு கூடி வந்து விட்டது.

ராகேல் அம்மா வாய் பேசி விட்டார்கள் என்ற ஒரே செய்தி ஊரை நிரப்பினது. இவ்விதமாய் தேவன் நடப்பித்த அற்புத செயலுக்காக தேவனை ஸ்துதிக்கிறேன். இந்த ராகேல் அம்மாவிடமிருந்து அசுத்த ஆவிபோனதும் தான் பாவாடை சட்டையோடிருப்பதை அறிந்து வெட்கப்பட்டு வீட்டுக்குள்ளேபோய் ஒரு சேலையைக் கட்டிக்கொண்டு எங்கள் முன் வந்து உட்கார்ந்தார்கள்.

ஓற்றைபால்விளையில் தேவன் அற்புதம் நடத்தியுள்ளார் என்ற செய்தி அந்த வட்டாரத்தில் காட்டுத்தீ போல் பரவி விட்டது. காரணம் இந்த அம்மா பல ஆண்டுகளாய் படுக்கையில் இருந்திருக்கிறார்கள். அதோடு அந்த வட்டாரத்திலுள்ள ஏராளமான ஊழியர்கள் இந்த அம்மாவுக்காக வந்து ஜெபித்து போயிருக்கிறார்கள்.

சிறிது நேரத்துக்குள்ளாக கன்னியாகுமரி ஜில்லாவில் அகஸ்தீஸ்வரம் அருகே உள்ள புன்னையடி என்ற ஊரிலுள்ள சபையைச் சேர்ந்த வாலிபர்கள் சுமார் இருபதுக்கும் அதிகமான பேர்கள் 'சத்திய சுவிசேஷக் குழு' என்ற பெயரில் ஊழியம் செய்து வருபவர்கள், அன்று ஞாயிறு மாலை அந்த பிரதேசத்துக்கு ஊழியம் செய்ய வந்தார்கள். ''ராகேல் அம்மாவுக்கு சுகம் கிடைத்துவிட்டது. அவர்கள் வாய் பேசுகிறார்கள். எங்கிருந்தோ இரண்டு சகோதரர்கள் கர்த்தரால் அனுப்பப்பட்டு வந்து ஜெபித்தார்கள்'' என்ற செய்தி கேட்டதும் அவர்கள் சீக்கிரமாய் தங்களுடைய ஊழியத்தை முடித்துக் கொண்டு அங்கே வந்தார்கள்.

வந்தவர்கள் எங்களுடைய அனுபவங்களை கேட்டார்கள் பின்னர், அவர்களோடு சேர்ந்து ஜெபித்தோம். கர்த்தருடைய மகிமை பிரத்தியட்சமாய் இறக்கினது. CSI உபதேசியார் எழும்பி வெளியே போய் விட்டார். வந்திருந்தவர்களிலும் பலருடைய இருதயம் பரிசுத்த ஆவியானவருக்கு விரோதமாய் இருந்ததை காண முடிந்தது. ''உங்கள் பிதாக்களைப் போல் நீங்களும் பரிசுத்த ஆவிக்கு எப்பொழுதும் எதிர்த்து நிற்கிறீர்கள்'' (அப் 7:51) என்று ஸ்தேவான் கூறின வார்த்தையை ஆவியானவர் நினைப்பூட்டினார். வந்தவர்களில் ஒரு சகோதரர் மட்டும் அந்நிய பாஷை அடையாளத்தோடு அபிஷேகம் பெற்றுக் கொண்டார். ஏற்கெனவே அபிஷேகம் பெற்ற ஒரு சகோதரரும் அவர்களோடு வந்திருந்தார். அவர் பெயர் ஏசுதாசன், ''அவரைக் கொண்டு புன்னையடியிலே 'புதிய எருசலேம் சபையை' கட்டுவதாக தேவன் பேசினார். அதை நாங்கள் மனதில் வைத்துக் கொண்டு அந்த காலங்களுக்காக காத்திருந்தோம்.

## புன்னையடியில் புதிய எருசலேம்

''புன்னையடியில் ஒரு கூட்டம் பெண்கள் பரிசுத்தாவிப் பெற வாஞ்சிக்கிறார்கள். நீங்கள் எங்களுடைய ஊர் வரை வந்து போவீர்களா?'' என்று அந்த ஏசுதாசன் என்ற சகோதரர் கேட்டார். ''கர்த்தர் அனுப்பினால் தான் நாங்கள் வருவோம். கர்த்தர் தானே அபிஷேகிக்கிறவர். ஆகையால் உங்கள் விலாசத்தை கொடுங்கள். கர்த்தர் அனுப்பும் பொழுது வருகிறோம்''. என்று கூறி அவர்களுடைய விலாசத்தை வாங்கிக் கொண்டோம்.

இவர்களும் புன்னையடி போய் பரிசுத்த ஆவிக்காக காத்திருந்த சகோதரிகளிடம் ‘‘ராகேல் அம்மா சுகம் பெற்றதையும் சகோதரர்களில் ஒருவர் அபிஷேகம் பெற்றதையும் கூறி நீங்களும் ஜெபியுங்கள். தேவன் அந்த ஊழியர்களை நமது ஊருக்கும் அனுப்புவார்’’ என்பதாக கூறியிருக்கிறார்கள். அன்று முதல் அங்குள்ள சகோதரிகள் தொடர்ந்து ஜெபித்திருக்கிறார்கள்.

ஒரு மாதத்திற்குப் பின் ஒரு நாள் நாங்கள் உபவாசித்து ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது : ‘‘புன்னையடியில் ஒரு கூட்டம் பெண்கள் அபிஷேகம் பெறுவதற்காக காத்திருந்து ஜெபித்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் அங்கே கடந்து போங்கள். நான் என்னுடைய வல்லமையைப் விளங்கப்பண்ணுவேன்’’ என்று கர்த்தர் எங்களோடு பேசினார். தேவ செய்தி பெற்று நாங்கள் கடந்து போனோம். ‘‘தம்மைப் பற்றி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய வல்லமையை விளங்கப்பண்ணும்படி கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும் உலாவிக் கொண்டிருக்கிறது.’’ (2 நாளா 16:9) என்ற வேதவாக்கியம் எத்தனை உண்மையானது.

ஆம் பிரியமானவர்களே! இன்றும் அநேகர் கர்த்தருடைய மகிமையைக் காண வேண்டும் என்று வாஞ்சிக்கிறார்கள். ஆனாலும், உத்தம இருதயத்தோடு அவரை தேடாதபடியால் கண்டு கொள்ள முடியவில்லை. உத்தமமாய் என்னை பின்பற்றின கேனேசியனான எப்புன்னேயின் குமாரன் காலேபும் நூனின் குமாரன் யோசுவாவும் தவிர எகிப்திலிருந்து வந்தவர்களில் இருபது வயது முதல் அதற்கு மேற்பட்ட மனிதர்களில் ஒருவரும் என்னை உத்தமாய் பின்பற்றாதபடியினால் கானானில் பிரவேசிப்பதில்லை, என்று இஸ்ரவேலர்களைக் குறித்து தேவன் கூறியிருக்கிறார்.

புன்னையடியில் தினமும் மத்தியான வேளையில் பக்தியுள்ள ஒரு கூட்டம் பெண்கள் ஜெபிப்பது வழக்கமாம். அவர்களுடைய ஜெப வேளையில் சகோதரர் ஒருவரை கூட்டிக் கொண்டு அவர்களோடு ஜெபத்தில் கலந்து கொண்டோம். ‘‘எல்லோரும் அவரவர் தங்களுடைய பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு பாவங்களை அறிக்கை செய்யுங்கள். அப்பொது கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்’’ என்று ஆலோசனை கூறினோம். அந்தபடியே எல்லோரும் எழுந்து நின்று ஒவ்வொருவராகத் தங்களுடைய பாவங்களைத் தேவ சமூகத்தில் அறிக்கை செய்து கொண்டிருக்கும் பொழுது எல்லோருடைய உள்ளங்களும் உடைய ஆரம்பித்தது.

நொறுங்கினவர்களின் இருதயத்தை உயிர்ப்பிக்கிற தேவன் எல்லோருடைய உள்ளங்களிலும் வந்து இறங்கினார். சுமார் இருபதுக்கும்

அதிகமாக பெண்கள் ஒரே நேரத்தில் கர்த்தருடைய ஆவியினால் நிரப்பப்பட்டார்கள். இடி முழக்கம் போன்ற பலத்த சத்தம் உண்டாகி விட்டது. தூரத்திலே வேலி அடைத்துக் கொண்டு நின்ற ஒருவர் அரிவாளோடும், கவக் கம்போடும் ஏதோ கலவரம் உண்டாகி விட்டதென எண்ணி நாங்கள் ஜெபித்துக் கொண்டிருந்த வீட்டை நோக்கி ஓடி வந்திருக்கிறார். வெளியே நின்ற ஒரு பாட்டியிடம் ''இங்கே என்ன கலவரம்? ஒரே சத்தமாய் கேட்டதால் ஓடிவந்தேன்'' என்று கூறவே, அப்படியொன்றும் இல்லை. நம் பிள்ளைகள் கூடி ஜெபிக்கிறார்கள் என்று பாட்டி பதில் கூறினதாக பின்னால் அறிந்தோம்.

தேவன் தம்முடைய வல்லமையை இவ்விதமாய் இந்த பகுதிகளில் வெளிப்படுத்தினார். பின்னர் சில மாதங்களுக்குப் பின் சகோதரர் ஏசுதாசனிடம் கர்த்தர் பேசி, அவர் புதிய எருசலேம் சபையில் கர்த்தருடைய ஊழியம் செய்ய தன்னை ஒப்புக் கொடுத்தார். இவரைக் கொண்டு புன்னையடியில் சபை கட்டப்பட்டு கர்த்தருடைய ஊழியம் வல்லமையோடு செய்யப்பட்டு வருகிறது. கர்த்தர் தாம் சொன்னபடியே எல்லாவற்றையும் செய்து வருகிறார். ''அவர் தம்முடைய எல்லாவார்த்தைகளிலும் ஒன்றையாகிலும் தரையிலே விழுந்து போகவிடவில்லை'' (1 சாமு 3:19) அவருக்கே மகிமையுண்டாவதாக!

### கோயம்புத்தூரில் புதிய எருசலேம்

ஓர் நாள் நானும் உடன் ஊழியருமாக தேவனிடம் ஜெபித்துக் கொண்டிருந்தோம். உடன் ஊழியர் தீர்க்கத்தரிசியாய் இருப்பதால், அவர் மூலமாய் தேவன் பேச ஆரம்பித்தார். நான் உடனே டைரி ஒன்றில் அந்த செய்தியை எழுத ஆரம்பித்தேன். ''நீங்கள் உடனடியாக கோயம்புத்தூர் செல்ல வேண்டும். அங்கே என்னை உத்தமமாய் தேடுகிற ஒரு சகோதரி இந்நாட்களில் மிகுந்த நெருக்கத்துக்குள்ளாகி கண்ணீர் வடிக்கிறாள். கணவன் மனந்திரும்பாதவன். இவனுடைய நண்பர்கள் பலர் சேர்ந்து செய்த ஒரு கொலைக் குற்றத்தினிமித்தம் இவனையும் காவலர்கள் தேடி வருகிறார்கள். இவனும் தலைமறைவாய் இருக்கிறான். இவள் ஆதரவின்றி தவிக்கிறாள். தன்னுடைய கணவனும் அந்த கொலைக் குற்றத்திற்கு ஆளாகியிருப்பாரோ? அப்படி ஆகியிருந்தால், தன்னுடைய எதிர் காலமும், தன் குழந்தைகளுடைய எதிர்காலமும் எப்படியிருக்கும் என எண்ணி, ஏங்கி என்னுடைய சமூகத்தில் கண்ணீர் வடிக்கிறாள்!

நீங்கள் போய் அவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டும். அவளுடைய கணவன் அந்த கொலைக் குற்றத்தில் சேரவில்லை. அவன் நிரபராதி, அவனுக்கு விடுதலை உண்டு. அதற்காக இவள் கவலைப்பட வேண்டாம்.

என்று ஆறுதல் கூறி வாருங்கள். நான் அந்த மகளை அதிகமாய் நேசிக்கிறேன்'' என்று கர்த்தர் செய்தி கொடுத்தார்.

ஆம்! அன்று ஆகாரின் கண்ணீரைக் கண்ட தேவன் இன்றைக்கும் தம்முடைய பிள்ளைகளின் கண்ணீரைக் காணுகின்றார். ஆண்டவரே! உமக்கு கண் இல்லையா? என்று கூறாதே, ''கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள் மேல் நோக்கமாயிருக்கிறது. அவருடைய செவிகள் அவர்கள் வேண்டுதலுக்குக் கவனமாயிருக்கிறது.'' (1பேரு 3:12).

பின்னே ஏன் என்னுடைய மன்றாட்டைக் கர்த்தர் கேட்கவில்லை என்று கூறுகிறாயா? ''உங்கள் பாவங்களே அவர் உங்களுக்கு செவிகொடாதபடிக்கு அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கிறது'' (ஏசா 59:2).

கோவையில் அந்த சகோதரியின் வீடு இருக்கும் இடத்துக்கு நாங்கள் போய் சேர்வதற்கு எங்களுக்குத் தகுந்த அடையாளங்களை தேவன் காண்பித்தார். தீர்க்கதரிசியின் மூலம் செய்தி வரும்பொழுது, நான் அதை டைரியில் குறிப்பிடுவேன். அதே சமயம் அந்த இடங்களும் என்னுடைய மனக்கண் முன்னாலே காட்சியில் காண்பிக்கப்படும். தேவனுடைய மாபெரும் கிருபைக்காகத் தேவனை ஸ்துதிக்கிறேன்.

இப்படியே நாங்கள் தேவ ஆலோசனைப்படி கோயம்புத்தூருக்கு ரயில் மார்க்கமாய் போய் சேர்ந்தோம். அதிகாலை 3 மணியளவில் நாங்கள் கோவையில் இறங்கினோம். நேரம் இருட்டாக இருந்தபடியால் விடியும் வரையிலும் பயணிகள் தங்கும் இடத்தில் தங்கியிருந்தோம்.

எங்களுக்கு கொடுக்கப்பட்ட அடையாளத்தில் ஒன்று : நீங்கள் கோவை ரயில் நிலையத்திலிருந்து வெளியே வந்ததும் வடகிழக்கு திசை நோக்கி செல்லவேண்டும் என்பது முதலாவது அடையாளம். அப்படியே விடிந்ததும் ரயில் நிலையத்தை விட்டு வெளியே வந்து கிழக்கு, வடக்கு எது என்று அறிந்து கொண்டு சிறிது தூரம் வந்து பின்னர் வடகிழக்கில் செல்ல வேண்டும். அங்கே ஒரு இடம், பல ரோடுகள் அங்கிருந்து வடகிழக்கை நோக்கி பிரிகிறது. அந்த இடத்தில் நின்று இருவரும் ஜெபித்தோம். ஜீவனுள்ள ஆண்டவரே! முன் பின் தெரியாத இடத்தில் உம்முடைய காரியமாய் வந்திருக்கிறோம். நீர் எங்களுக்கு வழிகாட்ட வேண்டும். நாங்கள் எந்த ரோட்டின் வழியாக செல்ல வேண்டும் என்பதை எங்களுக்க காண்பியும் என்று விண்ணப்பம் செய்தோம்.

தேவன் எங்களோடு கூடவே வந்திருந்தபடியால் ''நான் உங்களுக்கு முன்னாலே செல்கிறேன். என் பாதங்களை காணுவீர்கள். அதைப்பார்த்து பின் தொடர்ந்து வாருங்கள்'' என்று சர்வ வல்லமையுள்ள ஆண்டவர் பேசினார்.

''என் பின் பக்கத்தை காண்பாய்'' (யாத். 32:33) என்று மோசேயோடு சொன்ன அதே ஆண்டவர், எங்களோடும் பேசினார். ஜெபத்தை முடித்துக் கண்களைத் திறந்தோம். என்ன ஆச்சரியம்! எங்களுக்கு முன்னால் இரண்டு பாதங்கள் நடந்து செல்வதைப் பார்த்தோம்.

ஆம்! அருமையான தேவ ஜனமே, இந்த வார்த்தைகளை எழுதும் போதே எனக்குள் வல்லமை பெருகிறது. என் ஆண்டருடைய அன்பு என் உள்ளத்தை நிரப்புகிறது. எனது இரு கண்களும் ஆனந்த கண்ணீர் வடிக்கிறது. காரணம் ''நான் மோசேயோடே இருந்து போல உன்னோடும் இருப்பேன். நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை உன்னை கைவிடுவதுமில்லை'' (யோசு. 1:5) என்று யோசுவாவோடு சொன்னதுபோல எங்களோடு சொல்லி எங்கள் தைரியப்படுத்தி எங்களை இந்த ஊழியப் பாதையில் நடத்திவருகிற தேவனுடைய அன்பை மறுபடியும் தியானிப்பதால் ஏற்படும் ஆனந்தக் கண்ணீர் அது.

நான் உனக்கு முன்னாலே சென்று கோணலானவைகளை செவ்வையாக்குவேன் என்று சொன்ன ஜீவனுள்ள ஆண்டவர் எங்களுக்கு முன்னாலே போகிறார். நாங்கள் அவருடைய அடிச்சுவடை பார்த்து பலமைல் தூரம் சென்றோம். ரோட்டிலும், பிளாட்பாரத்திலும் ஏராளமான மக்கள் நடந்து போய்க் கொண்டும், வந்து கொண்டும் இருக்கிறார்கள். நாங்கள் எங்கள் பார்வையை அவரை விட்டு திருப்பாமல் சென்று கொண்டிருந்தோம்.

திடீரென்று மெயின் ரோட்டை விட்டு இடதுபுறமாய் இறங்கி ஒரு தெருவில் கர்த்தருடைய பாதங்கள் சிறிது தூரம் நடந்தது. பின்னர் ஒரு வீட்டின் பின்புறம் கர்த்தர் நின்று கொண்டு, ''இதுதான் அந்த வீடு. முன்புறமாய் போய் செய்தியைச் சொல்லி அந்த மகளை பலப்படுத்தி விட்டு போங்கள். குறிக்கப்பட்ட காலத்தில் கோயம்புத்தூரிலும் புதிய எருசலேம் சபை கட்டப்படும்'', என்று கர்த்தர் பேசினார்.

நாங்கள் அந்த இடத்தில் நின்று சிறிது நேரம் ஜெபித்து விட்டு வீட்டின் முன்புறத்துக்கு போனோம். அந்த சகோதரி வாசலில் நின்று எங்களுடைய தோற்றத்தைக் கண்டதும், ''ஐயா! இருவரும் உள்ளே வாருங்கள். நேற்று இரவே கர்த்தர் எனக்கு உங்கள் இருவரையும் தரிசனத்தில் காண்பித்தார். இது நேரம் வரையும் நான் எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறேன் என்று சொல்லி எங்கள் வீட்டினுள் வரவேற்றார்கள்.''

தன்னுடைய பிரச்சனைகளை சொல்லி கண்ணீர் வடித்தார்கள். கணவன் எங்கோ தலைமறைவாய் இருப்பதாகவும் கூறினார்கள். ''உங்கள் கணவன் கொலையில் சம்பந்தப்படவில்லை, அவருக்கு விடுதலை கிடைக்கும்.

ஆகையால் கவலைப்பட வேண்டாம் கர்த்தர் உங்களைக் காத்துக் கொள்வார்'' என்று எங்களிடம் கூறின கர்த்தருடைய செய்தியைச் சொன்னதும் அந்த சகோதரிக்கு உண்டான சந்தோஷத்துக்கு அளவே கிடையாது. இப்படி நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே அவர்களுடைய கணவரும் மெதுவாக கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தார். ''நீங்கள் கொலைகுற்றத்தில் சம்பந்தப்படவில்லை என்று என் ஆண்டவர் சொல்லிவிட்டார். அத்தான், நீங்கள் இனி கவலைப்பட வேண்டாம்'' என்று மகிழ்ச்சியோடு உரத்த சத்தமாய் அந்த சகோதரி கூறினார். உஷ்ஷ்.... சத்தம் போடாதே C.I.D.கள் என்னை பின் தொடர்கிறார்கள். நான் கொலை செய்யவில்லை, என்பதை இப்போதாவது நம்பினாயா? என்றாலும் நான் இவர்கள் கையில் அகப்படாமல் முறையாக வக்கீல் மூலம் ஆஜராகி விடுதலையாக வேண்டும். கர்த்தர் உங்களை அனுப்பினதற்காக நன்றி! தொடர்ந்து எங்களுக்காக வேண்டிக் கொள்ளுங்கள் என்று கெஞ்சினார். ஜெபித்து ஆறுதல் படுத்திவிட்டு நாங்கள் கடந்து வந்தோம். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

''....நீ விசுவாசித்தால் தேவனுடைய மகிமையை காண்பாய்''

யோவா 11:40



அத்தியாயம் 6

# ஊழிய வாழ்க்கைப் பாதையின் மூன்று காலங்கள்

தேவன் எங்களைக் கொண்டு தமிழகத்தின் பல பாகங்களிலும் தம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தி கொண்டு வந்தார். அவருக்கே துதி செலுத்துகிறோம். இந்நாட்களில் மனிதர்களுடைய பார்வையில் சபையின் தோற்றமும், ஊழியர்களாகிய எங்களுடைய தோற்றமும் அற்பமாகவே காணப்பட்டது. ‘‘அற்பமான ஆரம்பத்தின் நாளை யார் அசட்டை பண்ணலாம்?’’ (சகரியா 4:10.) அநேக ஆவிக்குரிய தலைவர்கள் பரியாசம் பண்ணினார்கள். இந்த சிறுவர்கள் தேவனுடைய சபையைக் கட்டுவார்களோ? இவர்கள் கட்டினாலும் நிலைத்து நிற்குமோ? (நெகே. 4:1-3) இத்தனை சபைகள் உருவாக்கப்பட்டிருக்க இன்னொரு சபை அவசியமோ? இருக்கிற சபை ஒன்றில் இவர்கள் சேர்ந்து கொண்டால் என்ன? என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள். நேரில் கேட்பார்கள். நாங்கள் அவர்களுக்கு மறுமொழியாக பரலோகத்தின் தேவனானவர் எங்களுக்கு உத்தவிட்டிருக்கிறார். நாங்கள் அவருடைய ஊழியக்காரரர்கள் ஆகையால் நாங்கள் அவருடைய சபையாகிய புதியஎருசலேமைக் கட்டுகிறோம். (நெகமி 2:20) என்று விளக்கம் கூறுவதுண்டு.

இவ்விதமாய் உருவத்தில் பெரியவர்களும் எண்ணிக்கையில் அதிகமாய் காணப்படுகிறவர்களும் எங்களை அற்பமாய் எண்ணும் போதெல்லாம் கர்த்தர் தம்முடைய வார்த்தைகளைக் கொண்டு எங்களை தேற்றுவார். ‘‘பரலோக ராஜ்யம் கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கிறது. அது சகல விதைகளிலும் சிறியதாயிருந்தும், வளரும் போது சகல பூண்டுகளிலும் பெரிதாகி, ஆகாயத்து பறவைகள் அதன் கிளைகளில் வந்தடையத் தக்க மரமாகும்’’ (மத். 13:31,32) என்று கூறி இறைவன் ஆறுதல் அளிப்பார்.

இறைவனே நேரடியாக அவருடைய வேலைக்கு எங்களை அழைத்து திருச்சபையின் அப்போஸ்தலர் மூலம் எங்களை அதிகாரப் படுத்தியிருக்கிறபடியால் எங்களுடைய எல்லா தேவைகளுக்கும் அன்று முதல் இன்று வரை எங்களுடைய கண்கள் அவருடைய கரத்தையே நோக்கி பார்த்துக்கொண்டிருக்கிறது. சங். 123:1,2.

ஊழியர்களுடைய வாழ்க்கைப் பாதையானது மூன்று காலங்களாக பிரிக்கப்படுகிறது.

1. கற்றுக் கொள்கிற காலம்

2. பரீட்சையின் காலம்

3. ஊழியக் காலம்

இவைகளில் நிலைத்து நின்றால் கர்த்தரால் உபயோகிக்கப்படுவார்கள். உண்மையுள்ளவர்களாய் நடந்து கொண்டால் உயர்த்தப்படுவார்கள்.

தேவனாகிய கர்த்தர் தம்முடைய ஊழியர்களுக்கு ''எந்த நிலைமையில் இருந்தாலும் மனரம்மியமாயிருக்கக் கற்றுத் தருகிறார்'' தாழ்ந்திருக்கவும், வாழ்ந்திருக்கவும் திருப்தியாயிருக்கவும், பட்டினியாயிருக்கவும், பரிபூரணமடையவும், குறைவுபடவும் கர்த்தர் போதிக்கிறார்'' (பிலிப். 4:11,12).

இவ்விதமாய் போதிக்கப்பட்டவர்களுக்கு அதற்கான பரீட்சையின் காலத்தையும் கர்த்தர் நியமிக்கிறார். எனவே ''உபத்திரவம் பொறுமையையும், பொறுமை பரீட்சையையும் பரீட்சை நம்பிக்கையையும் உண்டாக்குகிறதென்று நாங்கள் அறிந்து உபத்திரவங்களிலும் மேன்மை பாராட்டுகிறோம்'' (ரோமர் 5:3,4) என்று பரிசுத்தவான்கள் கூறுகிறார்கள். யாக் 1:23 தாங்கள் கற்றுக்கொண்ட விசுவாசம் சோதிக்கப்படும் போதும் அது பரீட்சிக்கப்படும், பொழுதுதான் கர்த்தர் தங்களோடிருக்கிறதை பக்தர்கள் கண்டு சந்தோஷப்படுகிறார்கள். பரீட்சைக்கு நில்லாதவர்கள், இந்த சந்தோஷத்தை அடைந்து கொள்ள மாட்டார்கள். (2கொரி 13:5,6).

எங்களுக்கு தேவன் கொடுத்த பரீட்சையின் நாட்களில் எங்களுக்கு அறிமுகமான அநேகர் எங்களுடைய வீட்டிற்கு வராது விலகிப் போனதுண்டு - எங்களைக் கண்டு பலர் முகத்தைச் சுளித்ததுமுண்டு. அதற்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறேன். 1972ம் வருட பிறப்பு அன்றைக்கு புது வருடம் பிறந்து வரும் வேளை, சபை மக்கள் யாவரும் அந்த வருடத்திற்காக தேவன் கொடுக்கும் வாக்குத்தத்தமான வார்த்தைகளைப் பெற வாஞ்சித்து நள்ளிரவு 11.45க்கே ஸ்தோத்தரித்து ஆவியில் நிறைந்து கர்த்தரை ஆராதித்து கொண்டிருக்கிறார்கள். தேவன் தம்முடைய தீர்க்கத்தரிசி மூலம் பல ரகசியங்களையும், நடக்கவிருக்கும் பல காரியங்களையும் பேச ஆரம்பித்தார்.

வருடம் பிறந்தது. சபையார் முழுவதும் ஆர்ப்பரித்து இறைவனை மகிமைப்படுத்திக் கொண்டிருக்கும்போது, சடிதியாகப் பரலோகத்திலிருந்து நீண்ட உறையில் அமைக்கப்பட்ட ஒரு கடிதத்தை ஒரு தேவ தூதன் என்னுடைய கரத்தில் தந்துவிட்டு அவர் மறைந்து விட்டார். ஆவலோடு அவசரமாய் உறையினுள் இருந்த நீண்ட அட்டை ஒன்றை வெளியே எடுத்தேன். அதில் ''1972 முதல் 1975'' என்று மட்டும் எழுதியிருந்தது. இதன் இரகசியம் விளங்காமல் அதற்காக தேவனிடம் விண்ணப்பம் செய்தேன். ''இந்த ஆண்டு முதல் 1975ம் ஆண்டு வரை நெருக்கத்தின் காலம்; பரீட்சையின் காலம். ஆகையால் சோர்ந்து போகாதே'' என்று பரிசுத்த

ஆவியானவர் எனக்குள் இருந்து பேசினார். சிறிது கலக்கமாகவே தோன்றினாலும் கர்த்தர் நம்மை கைவிடமாட்டார் என்கிற தைரியம் என் ஆத்துமாவை தேற்றியது. (சங். 94:19)

இந்த பரீட்சையின் காலத்தில் பல நாட்கள் நாங்கள் பட்டினியாய் இருந்ததுண்டு. ஒரே வஸ்திரத்தோடு ஜீவித்த நாட்கள் பல உண்டு. இந்நாட்களில் எங்களுடைய ஆகாரத்துக்காக நாங்கள் பயன்படுத்துவது 10 காசுகள் மட்டுமே. அநேக நாட்களில் இந்த பத்துக் காசு கூட கிடைக்காது. இந்த பத்துக் காசை வழக்கமாக நாங்கள் சாமான் வாங்கும் கடையில் கொண்டு போய் கொடுத்தால், ''வழக்கப்படி தானே'' என்று கடைக்காரர் கேட்பார். ''ஆமாம்'' என்றதும் ஐந்து காசுக்கு பொரி கடலையும், மூன்று காசுக்கு கருப்புக் கட்டியும் (பனைவெல்லம்) இரண்டு காசுக்கு காப்பித்தூளும் தருவார். இந்த ஆகாரத்தில் சில நேரங்களில் சில விசுவாசிகளும் பங்குபெற்று கொள்வார்கள். இந்நாட்களில் இறைவனுடைய வாயிலிருந்து புறப்பட்ட ஒவ்வொரு வார்த்தைகளும் எங்களுக்கு போஜனமாயிருந்தது, எங்களை பிழைத்திருக்கச் செய்தது. (உபா. 8:3) அவருக்கே மகிமையுண்டாவதாக.

1975 வரை நெருக்கத்தின் காலம் என்று தேவன் கூறி இருந்தார். ஞாயிறு காலை ஆராதனைக்கு எங்களில் ஒருவர் நாங்குநேரிக்கும், ஒருவர் மகிழ்ச்சி புரத்துக்கும் சென்று ஆராதனை நடத்திவிட்டு மாலை வள்ளியூரில் கூடி ஆராதிப்போம். ஆராதனைக்கு சுமார் 50 பேர் வருவார்கள். ஆராதனை முடிந்து காணிக்கை பெட்டியை திறந்து எண்ணினால் 75 நயா பைசாக்கள் கிடைக்கும்.

இரவில் எங்களோடு, சில விசுவாசிகள் தங்குவார்கள் இந்த 75 பைசாவைக் கொண்டு போய் ரவையும் கொஞ்சம் கருப்பு கட்டியும், காபி தூளும் வாங்கி வந்து இரவில் தங்குகிற மக்களுக்கு உப்புமா கிண்டி காப்பிபோட்டு கொடுத்து விடுவோம். பின்னர் அடுத்த ஞாயிற்றுக்கிழமை தான் 75 பேசா கிடைக்கும். எனது குடும்பம் மனைவி, பிள்ளைகள் இருப்பது மகிழ்ச்சிப்புரம், சுமார் 3கி மீட்டர் தொலைவில் உள்ளது. இந்த ஞாயிறு இரவு விசுவாசிகளுக்கு நாங்கள் கொடுக்கும் உப்புமா, காப்பியானது மகிழ்ச்சிபுரத்திலிருக்கும் எனது மனைவி பிள்ளைகளுக்கு கிடைக்காது.

இதற்கிடையில் யாராவது ஜெபிக்க வந்து ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் காணிக்கை தந்திருந்தால் அதை வாடகை கொடுப்பதற்காக வைத்துக் கொள்வோம். வள்ளியூரில் ஆராதனை நடக்கும் கட்டிடத்துக்கு 20 ரூபாய் வாடகை ஆகும். அதை 10ம் தேதி 10 ரூபாயும் 20ம் தேதி 10 ரூபாயும் கொடுப்போம்.

1974ம் வருடம் கடைசி நாள் ஆராதனைக்கு காலையிலிருந்தே ஆயத்தமாகி கொண்டிருக்கிறோம். ஆராதிக்க வருகிற மக்களுக்கு கொடுப்பதற்கு ஒன்றும் இல்லை. சகோதரர் பஜாருக்குப் போய் 5 கிலோ மரச்சீனி கிழங்கு கடனாக வாங்கி வந்தார். அதைத் துண்டுகளாக வெட்டி பானையில் போட்டு அடுப்பை பற்ற வைக்க தீப்பெட்டியைத் தேடினார். அதில் ஒரே ஒரு குச்சு மாத்திரம் கிடைந்தது. அதைக் கொளுத்தி அணைந்து போனால் மறுபடியும் தீப்பெட்டி வாங்க காசு இல்லையே. எனவே விளக்கை கொளுத்தி வைத்து விட்டால் விளக்கைக் கொண்டு அடுப்பை எரிய வைக்கலாம் என எண்ணி விளக்கை எடுத்து வைத்துவிட்டு, தீக்குச்சியை உரசினால் ஒரு ஒரே தீக்குச்சியில் சிறிது தீப்பிடித்தது. ஆனால், தீக்குச்சி இரண்டாக ஓடிந்து பாதி துள்ளி தூரமாய் விழுந்து விட்டது. தீர்க்கதரிசியாருக்கு மிகுந்த மனவேதனை, என்ன செய்வதென்று திகைத்துப்போய் ஒடிந்து விழுந்த தீக்குச்சியை தேடினார். நேரமும் இருட்டிவிட்டது. விளக்கி கொளுத்தி இப்போது தீக்குச்சி இல்லை. துடைப்பத்தை எடுத்து மெதுவாக பெருக்கி, உடைந்துபோன தீக்குச்சை கண்டுபிடித்து விட்டார். (காணாமற்போன வெள்ளிக்காசைக் கண்டு பிடித்தது போல் இருந்தது) ஏற்கனவே அந்த குச்சு எரிந்துதான் ஒடிந்துபோனது.

இவர் விசுவாசத்தோடு எடுத்து பார்க்க அந்தக் குச்சியிலுள்ள பாதிமருந்து எரியாமல் இருந்தது. என்ன ஆச்சரியம்! மீண்டும் அந்தக் குச்சைக் கைக்குள் வைத்து ஜெபம் பண்ணி பற்ற வைத்ததும் தீக்குச்சு எரிந்தது. உடனே அருகிலிருந்த விளக்கைப் பற்ற வைத்து விட்டு, பின்னர் அடுப்பை பற்ற வைத்து கிழங்கு அவிக்கும் வேலையை அவர் செய்தார்.

எனக்கோ காலையிலிருந்து ஒருவகையான தலைபாரம், ஒன்றும் சிந்திக்க முடியாத அளவுக்கு மன அழுத்தமாய் இருந்தது. புதுவருட வாக்குத்தத்த வார்த்தைக்காக காத்திருந்தபோது கர்த்தருடைய ஆவியானவர் ''நான் உனக்கு முன்னேபோய், கோணலானவைகளை செவ்வையாக்குவேன்'' (ஏசா. 45:2) என்ற வார்த்தையை தந்தார். ஆனால், இந்த வார்த்தையை தியானிக்கவும் ஜெபிக்கவும் முடியவில்லை. ஆவியானவரின் எந்த சப்தமும் கேட்கபடவில்லை. வருடத்தின் இறுதி நாள் காலையிலிருந்து எதுவும் சாப்பிடவும் இல்லை மாலை சுமார் 5 மணியளவில் தெப்பக்குளத்துக்குப் போய் கைகால் அலம்பிவிட்டு, சிறிது வெளிக்காற்று வாங்கிவிட்டு வரலாம் என்று ஆலயத்தை விட்டு வெளியே வந்தேன்.

ஆலய வராந்தாவுக்கும் காம்பவுண்டு சுவருக்கும் இடையேயுள்ள தூரத்தில் இருபக்கமும் தேவதூதர்களை மாமிசக் கண்ணாலே பார்க்கிறேன். எனக்கு ரொம்ப ஆச்சரியமாய் இருந்தது. புதுவருட ஆராதனைக்கு பாதுகாப்பு

கொடுப்பதற்காக தேவன் தம்முடைய பணிவிடையின் ஆவிகளை அனுப்பி இருக்கிறார் என்று எண்ணிக் கொண்டு காம்பவுண்டு வாசலில் வந்து வெளியே பார்க்கிறேன். நான் போக, வேண்டிய வழி இரு பக்கங்களிலும் தூதர்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுதும் எனக்கு காரியம் வெளிப்படவில்லை. ஆலயக் காம்பவுண்ட் வாசற்படியில் நின்று கொண்டு தேவதூதர்களின் வரிசைக்கு இடது புறமாக பார்க்கிறேன். அங்கே ஒரு கூட்டம் குட்டி பிசாசுகள் கூட்டமாய் நின்று கொண்டு ''வந்துவிட்டான். வெளியே வந்துவிட்டான்'', என்று சப்தம் போடுகிறது. இவைகளையும் பார்த்துக் கொண்டு, எனக்கு முன்னாலே வைத்திருக்கும் பாதுகாப்பு வளையத்துக்குள் நான் சென்று கொண்டிருகிறேன். இந்த குட்டி பிசாசுகள் என்னிடம் நெருங்கி வர முடியவில்லை. தெப்புக்குளத்துக்குள் இறங்கி கைகால் முகம் கழுவி விட்டு தெப்பக்குளத்தை விட்டு, வெளியே வடக்கு பக்கம் வந்தேன். தேவதூதர்கள் எல்லாரும் என்னை நெருங்கி வருகிறார்கள்.

அடுத்து ஏதோ ஒரு ஆபத்து நடக்க இருப்பது போலவும் அதினின்று என்னைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தோடு அவர்கள் நெருங்கி வருகிறார்கள். என்பதை நான் உணர்ந்தேன். ஆனால் அந்த குட்டிப் பிசாசுகள் எனக்கு முன்னாக சுமார் 100 அடி தூரத்தில் நின்று கொண்டிருக்கிறது. இந்தக்குட்டிப் பிசாசுகள் மேலே வானத்தை நோக்கி பார்த்து கொண்டிருக்கிறது. நானும் மேலே எட்டிப் பார்த்தேன். என் தலைக்கு மேலாக சுமார் 200 அடி உயரத்தில் ஒருபெரிய டிராகன் (Dragon) போன்ற ஒரு மிருகம் காணப்பட்டது. ''இன்றைக்கு தப்ப முடியாது'' என்று அதன் வாயிலிருந்து சப்தம் வந்தது. அதோடு அதன் வாயிலிருந்து அக்கினி, திரளாக வந்து கொண்டிருக்கிறது. அது உறுமிக் கொண்டே அக்கினியை அனுப்புகின்றது.

இது இரவு சொப்பனம் என்று எண்ணி விடாதீர்கள். 1974ம் வருடத்தில் டிசம்பர் 31ம் தேதி மாலை 5.30 மணிக்கு நடந்து கொண்டிருந்தது. இவ்வளவு பெரிய டிராகன் பிசாசுகளின் தலைவன் நேரடியாய் அக்கினியை கொட்டிக் கொண்டிருந்த போதும் எனக்கு எந்தவிதமான பயமுமில்லை. கலக்கமுமில்லை, ஏனென்றால் ''உலகத்திலிருக்கிறவனினும் உங்களுக்குள் இருக்கிறவர் பெரியவர்'' என்ற தேவ வாக்கு உள்ளத்தில் இருப்பதால் பயமே வரவில்லை. நானும் அண்ணார்ந்து அந்த டிராகனையும் நெருப்பு கோளத்தையும் நோக்கிப் பார்த்து கொண்டே அந்த இடத்திலே நிற்கிறேன். என் தலையிலிருந்து மூன்று உருண்டையான பழுக்கக் காய்ச்சின கம்பியைபோல புறப்பட்டு டிராகனை நோக்கிப் போகிறது. பிதா, குமாரன் பரிசுத்த ஆவியின் வல்லமை புறப்பட போகிறது என்று நான் எண்ணுகிறேன்.

சில வினாடிக்குள் டிராகனிலிருந்து புறப்பட்ட நெருப்பு அணைந்து விட்டது. டிராகனும் ஓடி ஒளிந்துவிட்டான். நான் அங்கிருந்து புறப்பட்டு தேவாலயத்திற்கு சென்றேன். அதுவரையிலும் என்னை காவல் வளையத்திற்குள்ளே வைத்து பாதுகாத்த தேவ தூதர்கள் என்னை ஆலயத்தில் கொண்டு வந்து விட்டு சென்றார்கள்.

எனக்கு இன்னமும் தலைப்பாரம் குறையவேயில்லை. ஜெபம்பண்ண முடியவில்லை. ஆராதனைக்கு மக்கள் வந்தார்கள். குறித்த நேரத்தில் ஆராதனை ஆரம்பித்தோம். ஒரு சிறு ஜெபம் மாத்திரம் என்னால் பண்ண முடிகிறது. பின்னர் ஒரு பாட்டை ஆரம்பித்துக் கொடுத்தேன். சகோதரர் பாடல்களைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தார். எனக்குள் என்ன நடக்கிறது? என்றும், நான் வெளியே சென்றபோது என்ன நடந்தது? என்று சகோதரரிடம் கூறவில்லை. அவர் பல வேலைகளில் ஈடுபட்டு கொண்டிருந்தார்.

1974ம் வருடம் நிறைவடையப் போகிறது. எல்லோரும் முழங்காலில் நின்று ஆர்ப்பபரித்தார்கள். ஆவியானவர் பலமாய் கிரியை செய்து கொண்டிருந்தார். இரவு 12ம் மணி நேரம் முடியவும் 1972ம் வருடப் பிறப்பு ஆராதனையில் ஒரு தேவதூதன் வந்து ஒரு கடிதம் கொடுத்தார். அந்த அட்டையில் 1972 முதல் 1975 என்று எழுதி இருந்தது. இப்போது 1975ம் வருடம் பிறந்ததும் அதே தேவ தூதன் ஒரு கடிதம் கொண்டு வந்தார். இன்று தந்த கடிதத்தில் வெற்றி, வெற்றி, வெற்றி என்று எழுதியிருந்தது. அந்த கடிதத்தை கையில் வாங்கினதும் என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஆவியானவர் பெருத்த சத்தத்தோடு ‘‘வெற்றி’’ என்ற சத்தத்தை தொனிக்கப் பண்ணினார். சபைமக்கள் அனைவரின் வாயிலும் ஆவியானவர் வெற்றி, வெற்றி, வெற்றி என்று முழக்கமிட்டார்.

இதுவரையில் என் தலையிலிருந்து பாரம் மாறி, மனதிலிருந்த துக்கங்கள் மாறி மிகுந்த மகிழ்ச்சி உண்டானது. தேவனாகிய கர்த்தர் தீர்க்கதரிசியின் மூலமாக வருங்காலங்களில் சபையின் மேன்மைகளையும் சபை மக்களுக்குள்ள ஆசீர்வாதங்களையும் குறித்து பேசினார். எனக்கு கொடுத்திருந்த தேவ செய்தியையும் பூரணமாக்கி பிரசங்கிக்க வைத்தார். புத்தாண்டு ஆராதனை பூரிப்பாய் நடந்தது. தலைமையிலிருந்து வந்த வாக்குத்தத்தமானது ‘‘உனக்கு மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல துரைத்தனங்களோடும் இப்பிரபஞ்சத்திலுள்ள அந்தகார லோகாதிபதிகளோடும், வானமண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் போராட்டம் உண்டு. போராட்டத்தில் ஜெயம் பெறுவாய், கர்த்தர் உன்னை ஆசீர்வதிப்பார்’’ என்பதாக எழுதியிருந்தது. அன்று நடந்த போராட்டத்தில்

வானமண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளின் தலைவனே போராட இறங்கிவிட்டான். திரியேக தேவனுடைய வல்லமை அவனை மேற்கொண்டது.

இயற்கையாகவே எனக்கு ஒரு பயந்த சுபாவம் உண்டு. இரவு வேளைகளில் சுடுகாட்டைக் கண்டால், விக்கிரக் கோயில்களைக் கண்டால் ஒரு பயம், இது இரட்சிக்கப்படுவதற்கு முன்பு இருந்தது. வள்ளியூருக்கு கிழக்கே இராதாபுரம் ரோட்டில் ஒரு சுடுகாடு உண்டு, அடர்ந்த ஆலமரங்களும் உண்டு. அந்த இடத்தில் இரவில் வர ரொம்ப பயப்படுவேன். மகிழ்ச்சிப்புரத்தில் இருந்தபோது வீட்டில் சபையை ஆரம்பித்தோம். உள்ளூரிலிருந்து ஒரு சில பெண்கள் சி.எஸ்.ஐ. ஆராதனைக்குப் போய்விட்டு இங்கே வருவார்கள். ஒரு நாள் என்னுடைய மூத்த சகோதரர்கள் இருவரும் எங்கள் வீட்டிற்கு வெளியே இருந்து யாரும் ஆராதிக்கவரக்கூடாது, என்று பயமுறுத்தினதால் அந்த மக்கள் தேவனை ஆராதிக்க வர முடியவில்லை. ''வள்ளியூரில் ஒரு இடம் பார்த்து அங்கு வருகிற மக்கள் கொண்டு எனக்கு ஆராதனை செய்யுங்கள்'' என்று ஆண்டவர் பேசினார். அப்படியே வள்ளியூரில் இடம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இதற்கிடையில் ஓர் நாள் ஐரேனிபுரத்திலிருக்கும் ஊழியர் டி. சுந்தரர்ராஜன் அவர்களை பார்த்துவிட்டு வள்ளியூர்வரும்போது இரவு சுமார் 12 மணி ஆகிவிட்டது. இரவு சினிமா பார்க்கிற ஆட்களும் போய்விட்டார்கள். ரோடெல்லாம் நிசப்தமாக காணப்படுகிறது. இப்பொழுது நான் அபிஷேகம் பெற்ற கர்த்தருடைய ஊழியக்காரரன் தனியாகத்தான் வருகிறேன். என்னை வள்ளியூருக்கு ஊழியத்தை ஆரம்பிக்க வரவிடக்கூடாது. இன்றைக்கு இவனை பயமுறுத்த வேண்டும் என்று சாத்தான் திட்டமிட்டிருந்ததாக பின்னால் அறிந்துகொண்டேன்.

நான் வள்ளியூரில் பஸ்ஸை விட்டு இறங்கி கிழக்கு நோக்கி இராதாபுரம் ரோட்டில் வந்து கொண்டிருந்தேன் வள்ளியூருக்கு கிழக்கே ரோட்டு ஓரத்தில் ஒரு பிள்ளையார் கோயில் இருக்கிறது. இந்த கோயிலுக்கு சுமார் 200 அடி தூரத்திற்கு மேற்கே வலது பக்கம் ஒரு சிறிய தெரு உள்ளே போகிறது. இரண்டு வீட்டைத் தாண்டினதும் அந்த தெரு அடைக்கப்பட்டிருக்கும். இந்த குட்டைத்தெரு பக்கத்தில் வந்ததும் என் கண்கள் அந்த தெருவை நோக்கிப் பார்த்தது. நல்ல நிலா வெளிச்சம் ஒரு நியூஸ் பேப்பர் முழுமையாக விரித்து தரையில் கிடக்கிறது. அந்த பேப்பருக்குள் ஒரு சிறிய இரைச்சல் கேட்டது. நான் அதை பொருட்படுத்தாமல் என் நடையை தொடர்ந்தேன். ஆனாலும், என்னுடைய மனம் அந்த பேப்பருக்குள் ஏதோ சப்தம் கேட்டதே என எண்ணி மீண்டும் பின்னாகத் திரும்பி அந்த ஏரியாவை நோக்குகிறேன். எந்தவிதமான

காற்றும் வீசாத ஒரு நிசப்தமான நேரம் அது.

நான் பார்த்த அந்த செய்தித்தாள் முன்பக்கம் பேப்பர் தூக்கி இருக்க, வடக்கு நோக்கி கீழே தரையை உரசிக்கொண்டு மெயின் ரோட்டில் வந்து அந்த பேப்பர் ஏறுகிறது. எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் அந்த பேப்பரைத் திரும்பி பார்த்ததும் அது தரையிலே படுத்துக்கொண்டது. நான் நடந்து பிள்ளையார் கோயில் பக்கம் வந்துவிட்டேன். இப்பொழுது இந்த பேப்பர் முழுமையாக தரையிலிருந்து நிமிர்ந்து ஒரு விளம்பரபோர்டு போல நிற்கிறது. அப்படி கீழ் பகுதி தரையில் உரசுகிற சப்தம் கேட்கிறது ஒரு தகர டப்பா உரசுகிறது மாதிரி சத்தம் கேட்கிறது. நான் கொஞ்சம் முன்னதாக நடந்து போய்விட்டபடியால் அந்த பேப்பர் இப்பொழுது தரையிலிருந்து இரண்டு அடி உயரத்திற்கு உயர்ந்து ரொம்ப வேகமாக ஒரு ஆம்புலன்ஸ் சத்தம் போல வேகமாய் சத்தமிட்டுக் கொண்டு என்னைத் தாக்க வருகிறது. ஆவியானவர் எனக்குள்ளே வல்லமையாய் இறங்கினார். ‘‘நீ, நில்’’ என்று ஆண்டவர் சொல்ல, நான் ரோட்டை விட்டு கொஞ்சம் கீழே இறங்கி நின்று கொண்டேன். என் பக்கத்தில் ஒரு சிறிய உடை மரம் (முள்செடி) நின்று கொண்டிருந்தது. அந்த பேப்பர் இப்பொழுது என் உயரத்தில் பறந்து அதுவும் ரோட்டை விட்டு இறங்கி வேகமாய் மிகுந்த இரைச்சலோடு என் மீது மோத வந்தது. நான் ஆவியானவரின் பெலத்தால் சுமார் நான்கு அடி தூரம் துள்ளி நகர்ந்து விட்டேன். பறந்து வந்த பேப்பர் என் பக்கத்தில் நின்றிருந்த உடைமரத்தில் முள்செடியில் அப்படியே பதிந்து விட்டது. முள்ளால் குத்தப்பட்டு பேப்பர் அப்படியே இருக்க, சரி இனி இங்கேயே இரு, என்று, கூறிவிட்டு நான் மறுபடியும் ரோட்டில் ஏறி ராதாபுரம் ரோட்டிலேயே கொஞ்ச தூரம் நடந்ததும், உடை மரத்தில் முள்செடியில் மாட்டிருந்த பேப்பர் அந்த முள்ளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு மறுபடியும் ரோட்டிற்கு வந்து என்னை தாக்குவதற்குப் பறந்து வருகிறது.

இரயில் தண்டவாளத்திற்கு அருகே நான் வந்து கொண்டிருக்கிறேன். பழையபடி ஆம்புலன்ஸ் வேகத்தில், அதே சத்தத்தில் என்னை துரத்திக் கொண்டு வருகிறது. பிள்ளையார் கோவில் முன்னாலே சாத்தான் என்னை தாக்க வேண்டும் என்று எண்ணினான் முடியவில்லை. இப்பொழுது இன்னும் கொஞ்சம் தூரத்தில் நான் பயப்படுகிற சுடுகாடும் ஆலமரமும் வருகிற அந்த இடத்தில் வைத்து என்னை தாக்க வேண்டுமென்று சாத்தான் நினைத்திருந்தான். அவனுடைய எண்ணத்தை அவமாக்குவதற்காக நமக்குள் இருக்கும் உலக இரட்சகர் என்னை ‘‘அந்த இடத்தில் நில்’’ என்று கட்டளையிட்டார். இது வரையிலும் சாத்தானுடைய லீலைகளை பார்த்து ரசிக்கும்படி தேவன் செயல்பட்டார். இப்பொழுது என்னை போர்வீரனாக

தேவன் மாற்றிவிட்டார்.

கைகளும் கால்களும் முறுக்கேறி விட்டது. என் கண்கள் பேப்பரையே பார்த்துக் கொண்டிருக்கிறது. எனக்கு அருகாமையில் சாத்தான் வருமுன் உள்ளேயிருந்து ஆவியானவர் பலத்த சத்தத்தோடு ''போ சாத்தானே'', கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் உன்னை கட்டுகிறேன்.'' என்று ஆவியானவர் பேசினார். ''போ சாத்தானே'' என்ற வார்த்தை வெளியானதும் அந்த பேப்பர் துண்டு துண்டாக உடைந்தது. ஒரு காற்று வந்து எல்லாக் குப்பைகளையும் அள்ளிக் கொண்டு போனது அந்த வல்லமையோடு ஊர் வந்து சேர்ந்தேன். அன்றிலிருந்து சாத்தானைக் கண்டு, சுடுகாட்டைக் கண்டு இருட்டைக்கண்டு பயப்படுகிற பயமெல்லம் மாறிவிட்டது. ''தேவனுக்கு மகிமை உண்டாகட்டும்''

''சமாதானத்தின் தேவன் சீக்கிரமாய் சாத்தனை
உங்கள் கால்களில் கீழே நசுக்கிப் போடுவார்''
(ரோமர் 16:20)

### இந்த கேரீத் ஆசிரமத்தை சொந்தமாக வாங்கித்தருவேன்!

ஒருநாள் இரவு வள்ளியூர் ஆலயத்தில் நானும் சகோதரரும் ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது இரவு 8 மணி இருக்கும் ''நீங்கள் இப்பொழுது புறப்பட்டு நாங்கு நேரிக்குப் போகிற ரோட்டில் இங்கிருந்து சுமார் 5 கிலோமீட்டர் தொலைவில் பெருமடைசாத்தான் கோவில் இருக்கிறது அதற்கு அருகேயுள்ள ஒரு தோட்டத்துக்குள் ஒரு குடிசையில் ஒரு பையன் மட்டும் தங்கி இருப்பான் அவனைப் பார்த்து இந்த தோட்டம் தேவனுடைய ஊழியத்துக்காகப் பயன்பட வேண்டிய இடம் என்று கூறி அந்த தோட்டத்தின் உரிமையாளருடைய முகவரியை வாங்கி வாருங்கள். அந்த இடத்தில் வாரத்தில் ஒருநாள் கூட்டம் நடத்தவேண்டும். பின்னர் அந்த இடத்தை சபைக்காக வாங்கி தருவேன்'' என்று ஆவியானவர் பேசினார். உடனே ஜெபத்தை முடித்துக் கொண்டு அந்த இடத்துச் செல்ல புறப்பட்டோம்.

அப்பொழுது குறைந்த பட்ச பஸ் கட்டணம் 30 நயா பைசா, தான். எங்களிடம் 60பைசா இல்லை. உடனே ஜெபித்துவிட்டு இரவில் நடந்து ஆண்டவர் சொன்னபடி அந்த இடத்துக்கு போய் அந்த சகோதரனைக் கண்டோம் ''இந்த ராத்திரியில் வந்திருக்கிறீர்களே'' என்று ஆச்சரியமாய் கேட்டார். ''பஸ்வர நேரமாகும். ஆகையால், அவசரமாக வந்தோம்'' என்று கூறி, டைரியில் எழுதி வைத்திருந்தவைகளை வாசித்தோம். அங்கிருந்த சகோதரன், ''நான் உரிமையாளரிடம் கூறி உங்களை வந்து பார்க்கச் சொல்கிறேன்'' என்றார். நாங்களும் அங்கே ஒரு ஜெபம் செய்துவிட்டு மீண்டும் நடந்து வள்ளியூருக்கு இரவில் வந்து சேர்ந்தோம்.

இரண்டு தினங்கள் கழித்து நாங்கள் இருந்த இடத்துக்கு அந்த உரிமையாளர் வந்தார். ''நீங்கள் எங்கள் தோட்டத்துக்கு வந்ததாக பையன் கூறினார். நீங்கள் சொன்ன தேவ செய்திகளையும் கூறினார். சில ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்காவிலிருந்து வந்த ஒரு தேவ மனுஷனும் அந்த இடத்தைக் குறித்து, இந்த இடத்தில் தேவனுடைய மகிமை வெளிபடும். தேவன் இந்த இடத்தில் பெரிய காரியங்களை செய்வார் என்பதாக கூறினார். நீங்கள் வாரந்தோறும் வெள்ளிக்கிழமை மாலையில் ஒரு கூட்டம் நடத்துவீர்களா?'' என்று கேட்டார். நாங்களும் சரி என்று கூறினோம்.

இந்நாட்களில் வெளி ஊர்களுக்கு கால் நடையாகவே கடந்து போய் ஊழியம் செய்தும் வந்தோம். வள்ளியூரிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள 'கோரீத் ஆசிரமம்' என்ற இடத்தில் தேவ ஆலோசனைப்படி ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை தோறும் மாலை 7 மணிக்கு கடந்து போய் கூட்டம் நடத்தி வந்தோம். ஒருநாள் மாலையில், ''கோரீத்துக்கு போகும் பொழுது நடந்து போக வேண்டும் வரும் பொழுது பஸ்ஸுக்கு காசு தருவேன்'' என ஆண்டவர் பேசினார். தேவ உத்தரவும் பெற்று சிறிது தூரம் கடந்து போனோம். வழியிலே மேற்கே இருந்து ஒரு இரண்டு ரூபாய் நோட்டு காற்றிலே பறந்து வந்து எங்கள் முன்னே விழுந்தது. அதை காலால் மிதித்துக் கொண்டு, நாம் நடந்து போவது ஆண்டவருக்கு பிரியம் இல்லாதபடியால், இந்த பணத்தை நமக்கு தேவன் தந்திருப்பார் என எண்ணிக் கொண்டே அந்த ரூபாய் நோட்டை குனிந்து எடுத்தேன். அடுத்தப்படியாக, ஒரு ஐந்து ரூபாய் தாளும் பறந்து வந்து எனக்கு முன்பாக விழுந்தது. அதையும் எடுத்துக் கொண்டு சிந்திக்க ஆரம்பித்தேன்.

ஆண்டவர் நம்மை நடந்து தானே போகச் சொன்னார். ஆகையால், இந்த காசை நாம் பயன்படுத்தக் கூடாது. இது யாருடையது என்று விசாரித்துக் கொடுத்துவிட்டு செல்லவேண்டும். இது நமக்கு ஒரு சோதனையாக தோன்றுகிறது என எண்ணிக்கொண்டு நிமிரு முன் இன்னொரு இருபது ரூபாய் நோட்டும் பறந்துவந்து முன்பாக விழுந்தது. அதையும் சேர்த்து ரூபாய் இருபத்தேழையும் எடுத்துக் கொண்டு நிமிர்ந்தேன். ஒரு பெரியவர் தன்னுடைய மேல் சட்டையை உதறிக் கொண்டே ''என் பணமெல்லாம் காற்றில் போய்விட்டதே. யார் எடுத்தார்களோ தெரியவில்லையே'' என்று கதறிக் கொண்டே வந்தார். பெரியவரை அழைத்து ''எத்தனை ரூபாய் தொலைத்தீர்? என்னென்ன நோட்டுகள்?'' என்று விபரம்கேட்டு பணத்தை அவரிடம் திருப்பி கொடுத்தோம். அவருக்கு மிகுந்த ஆறுதல். இரு கரம் கூப்பி பணத்தை பெற்றுக்கொண்டார். அருகே நின்றவர்கள் ஆச்சரியப்பட்டு,

வேறுயாரும் எடுத்திருந்தாலும் கொடுக்க மாட்டார்களே ஒருவரோடொருவர் பேசிக் கொண்டார்கள்.

நாங்கள் தொடர்ந்து நடந்து போய் கூட்டம் நடத்தினோம். அங்கே கூட்டத்திற்கு வரக்கூடிய ஒரு அம்மா பஸ்ஸில் வரும் பொழுது நாங்கள் நடந்து வருவதைக் கண்டு மிகவும் வருத்தப்பட்டு அன்றிலிருந்து காணிக்கை கொடுக்க ஆரம்பித்தார்கள். எங்களுடைய குறைவுகளை நாங்கள் மனிதர்களிடம் சொல்லுவதில்லை. ‘‘இந்த கேரீத் ஆசிரமத்தை சொந்தமாக வாங்கித் தருவேன். அங்கே போய் வாரந்தோறும் ஆராதனை நடத்துங்கள். காலம் வரும்போது அதை சொந்தமாக்கித் தருவேன்’’ என்று ஆண்டவர் பேசினார்.

நாகர்கோவிலைச் சேர்ந்த சத்தியநேசன் ஆசிரியருக்கு சொந்தமான இடம் அது. அவரும் அனுமதி தரவே கூட்டம் நடத்தி வந்தோம். அங்கே காவலுக்காக பின்னர் ஒரு குடும்பத்தினர் இருந்தார்கள். ஒரு அம்மா மாத்திரம் எப்பொழுதாவது ஜெபத்துக்கு வருவார்கள், ஆட்கள் யாரும் வரவில்லையே என்று ஒருநாள் கூட ஆராதிக்கப்போகாமல் இருந்ததில்லை. வள்ளியூருக்கும் நாங்குநேரிக்கும் இடையே பெருமளஞ்சி என்ற இடத்திற்கு அருகாமையில் பெருமடைசாத்தான் கோவில் பக்கத்தில் இந்தஇடம் உள்ளது. கடமைக்காக ஆராதிக்காதபடி, பொழுதை போக்கிவிட்டுச் செல்லாதபடி, முறையாக மூன்று பாடல்களைப்பாடி, ஜெபம் பண்ணி, தேவன் கொடுக்கும் செய்தியைப் பிரசங்கித்து, ‘‘பர மண்டல ஜெபம்’’ பண்ணி, ‘‘என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்தரி’’ என்ற வசனத்தையும் சொல்லி வருவோம். அவ்வப்பொழுது கடிதம் மூலம் அப்போஸ்தலரிடம் ஆலோசனைப் பெற்றுக் கொள்வோம்.

சில நாட்கள் இரவில் கூட்டம் முடித்துவிட்டு வள்ளியூருக்கு இரவு 9 மணிக்கு மேல் நடந்து வருவோம். பசியின் களைப்பினால் நடக்கும் பொழுதே தூக்கம் வந்துவிடும். தூங்கிக் கொண்டே நடப்பதினால் ரோட்டை விட்டு கீழே இறங்கி விடுவோம். ரோட்டின் முள்ளுகள் சட்டை வேஷ்டிகளைப் பிடித்து இழுக்கும் அப்பொழுதுதான் நாங்கள் ரோட்டைவிட்டு கீழே இறங்கி விட்டோம் என்பது தெரியும். மீண்டும் ரோட்டுக்கு வருவோம்.

இப்படி பல ஆண்டுகள் வெள்ளிக்கிழமைதோறும் நடந்து போய் ஆராதனை செய்து வந்தோம். கண்ணீரோடு விதைக்கிறவர்கள், கெம்பீரத்தோடே அறுப்பார்கள். (சங். 126:5) என்ற வேதவாக்கியத்தின் படி 30 காசு கொடுத்து பஸ்ஸில் பயணம் செய்ய முடியாமல் கால்நடையாக நடந்துபோய் தேவனை ஆராதித்து மகிமைப்படுத்தி வந்தபடியால் பல கட்டிடங்களுடனும் கிணறு, பம்பு செட்டு போர்வெல் கிணறுடனும் 35 ஏக்கர் நிலத்தை வெறும் ரூபாய் 7500க்கு தேவன் வாங்கிக் கொடுத்தார்.

''தேவனுக்கே மகிமை உண்டாகட்டும்''.

ஒரு நாள் வள்ளியூரிலிருந்து 12 மைல் தொலைவிலிருக்கும் ஆரல்வாய்மொழிக்குப் போய் அங்கிருக்கும் ஊழியருக்கு ஒரு ஆலோசனைக் கூற வேண்டும் என்று கர்த்தர் கட்டளையிட்டார். கையில் காசில்லை. முந்தின இரவு சாப்பிடவும் இல்லை. அதிகாலையில் புறப்பட்டு மெதுவாக நடக்க ஆரம்பித்தோம்.

சுமார் நான்கு மணி நேர நடை பிரயாண தூரமே உண்டு. காலை 6 மணிக்கு புறப்பட்டு மாலை 6 மணிக்கு ஆரல்வாய்மொழி சேர்ந்தோம். நாகர்கோவிலிருந்து திருநெல்வேலி செல்லும் பிரதான சாலை இது. காலையில் நாங்கள் இந்த ரோட்டிலே நடந்து செல்வதைப் பார்த்த அநேக பஸ் டிரைவர்களும் கண்டக்டர்களும் பல தடவை அவர்கள் தெற்கும், வடக்கு போகும் பொழுது எங்களை பார்த்துக்கொண்டே போகிறார்கள். மைல் கற்கள், பாலங்கள் காணும் இடங்களிலெல்லாம் உட்கார்ந்து, உட்கார்ந்து எழுந்து போனோம்.

நாங்கள் போவதற்கு முந்தின தினம் இரவில் ஆரல்வாய் மொழியிலுள்ள எங்கள் ஊழியருக்கு நாங்கள் நடந்து வருவதாக ஒரு தரிசனம் கிடைத்திருக்கிறது. இந்த தரிசனத்தை அங்குள்ள மில்லில் வேலைப் பார்க்கும் ஒரு விசுவாசியிடம் ஊழியர் கூறி இருக்கிறார். ''வள்ளியூரில் சபையில் மிகவும் கஷ்டமாய் இருக்கிறது மாதிரி தெரிகிறது. ஐயா இருவரும் அங்கிருந்தே நடந்து வருவதாக நான் ஒரு தரிசனம் கண்டேன்'', என்று சொல்லியிருக்கிறார். ''அது எப்படி? மேலேயிருந்து உதவி அனுப்புவார்களல்லவா? பின்னே ஏன் கஷ்டம் வருகிறது?'' என்று அந்த விசுவாசி கூறியிருக்கிறார். சரி பார்க்கலாமே என்று அவர்கள் பேசிக் கொண்டார்களாம்.

நாங்கள் ஆரல்வாய்மொழி ஊரைச் சேர்ந்ததும் தற்செயலாய் கடைவீதிக்கு வந்த ஊழியர் எங்களை கண்டு கொண்டார். அவர் எங்களைப் பார்த்தும் ''ஐயா! நீங்கள் நடந்து தானே வருகிறீர்கள்'' என்றார். ''ஏன்? எங்கள் முகத்தின் சாயல் அப்படித் தெரிகிறதா?'' என்று கேட்டேன். ''இல்லை, நேற்று நீங்கள் நடந்து வருவதாக நான் ஓர் தரிசனம் கண்டேன், ஆகையால் கேட்டேன்'' என்றார்.

உங்களுக்குக் காண்பிக்கப்பட்ட தரிசனத்தை நிறைவேற்றும்படி கர்த்தர் எங்களை நடந்துவரும்படி செய்துள்ளார் என்று பேசிக்கொண்டு ஊழியரின் வீட்டிற்கு போய் செய்தியை கூறிவிட்டு மீண்டும் நடந்து வள்ளியூர் வர

புறப்பட்டோம். எங்களை நடக்கவிடாதபடி சகோதரர் ஒருவர் காசு தந்து எங்களை பஸ்ஸில் அனுப்பினார்.

இந்த விபரத்தை அறிந்த அங்குள்ள விசுவாசிகள் தசம பாகம் கொடுக்க வேண்டுமென தீர்மானித்து. சபை ஊழியத்தை தாங்கி கர்த்தருடைய ஆசீர்வாதங்களை பெற்றுக் வருகிறார்கள். ஆ! தேவன் கொடுக்கும போதனைகளைக் கண்டும், கேட்டும், அனுபவித்தும் கர்த்தரை மகிமைப்படுத்துகிறோம். அவருக்கே என்றென்றைக்கும் மகிமையுண்டாவதாக!

''கர்த்தர் எருசலேமை கட்டுகிறார்'' சங். 147:22



அத்தியாயம் 7

# முதல் வெளிநாட்டு ஊழியம்

பிரியமானவர்களே! இறைவன் எங்களை போதித்து வழி நடத்தி வந்த நாட்களில் : எந்த நிலைமையில் இருந்தாலும் மனரம்மியமாய் இருக்க கற்றுக் கொண்டோம். (பிலி 4:11). இப்படியிருக்கையில் 1975ம் ஆண்டில் ஒரு பெரியவர் எங்கள் ஆராதனைக்கு வந்து போய்க் கொண்டிருந்தார். ஒரு நாள் ஜெபத்தில் இருக்கும் பொழுது ''புதிதாக ஆராதனைக்கு வந்து போகிற பெரியவருடைய மகன் ஒருவன் வெளிநாட்டில் இருக்கிறான்; அவனுடைய விலாசத்தை வாங்கி அவனுடன் தொடர்பு கொள்ள வேண்டும். உங்களை நான் அந்த நாட்டிற்கு அனுப்புவேன்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

சிலர் இந்நாட்களில் தங்களுக்குப் புரியாததும், தங்களால் முடியாததுமான ஒரு காரியத்தை கர்த்தர் வெளிப்படுத்தினால் கர்த்தர் இப்படிப் பேசுவாரா? நம்மோடு பேசினது பரிசுத்த ஆவியா? அல்லது சாத்தானா? என்றெல்லாம் சந்தேகப்படுகிறார்கள். ''ஆபிரகாமோடு உன் சந்ததி இப்படி இருக்கும் என்று பேசின அதே ஆண்டவர், உன் நேசகுமாரனை எனக்காகப் பலி செலுத்து'' என்றும் பேசினார். ஆபிரகாம் சந்தேகப்படவே இல்லை. ஆம், ஆபிரகாம் தேவனை விசுவாசித்தார். அப்படிப்பட்ட விசுவாச வரத்தை என் தேவன் எங்களுக்கும் தந்ததற்காக என் தேவனை நன்றியோடு துதிக்கிறேன்.

மறுவாரம் மேற்படி பெரியவர் ஆராதனைக்கு வந்திருந்தார். ஆராதனை முடிந்ததும், ''ஐயா, உங்கள் பிள்ளைகள் யாராவது வெளிநாட்டில் இருக்கிறார்களா?'' என்றுகேட்டோம். ''ஆமாம்! என் இளையமகன் மோரீசியஸில் இருக்கிறான்; என்ன விஷயம்?'' என்று கேட்டார். எங்களை அந்த நாட்டிற்கு அனுப்புவதாக ஆண்டவர் வெளிப்படுத்தியுள்ளார். ஆகையால், உங்கள் மகனின் முகவரியை கொடுத்தீர்களானால் நாங்கள் தொடர்பு கொண்டு, தேவன் அனுப்பும் பொழுது அங்கே போவோம்'' என்று கூறினோம்.

நாங்கள் இருக்கும் ஏழ்மை நிலையை அவர் அறிந்திருந்தபடியால், அங்கு போக உங்களால் எப்படி முடியும்? பணம் அதிகமாக செலவாகுமே என்று கூறினார். ''கர்த்தர் எங்களை அனுப்புவதாக கூறியிருக்கிறார். ஆகையால் நாங்கள் போவோம் என்று நம்புகிறோம். நீங்கள் விலாசத்தை கொடுங்கள்'' என்றோம். அவரும் விலாசத்தை எழுதி தந்துவிட்டுப் போனார்.

நாங்கள் மறுநாளில் மோரீஷியசுக்கு ஒரு கடிதம் எழுதினோம். ஆண்டவர் எங்களை உங்களிடத்திற்கு அனுப்புவதாக கூறியுள்ளார். நாங்கள்

உங்களிடம் வந்து அந்த நாட்டில் கர்த்தருடைய வேலையைச் செய்வதற்கு நாங்கள் இங்கிருந்து என்னென்ன ஆயத்தங்களோடு வரவேண்டும்? அதற்கான ஆலோசனைகளை எழுதுங்கள் என்று எழுதியிருந்தோம். அங்கிருந்து சகோதரர் கருணாகரன் என்பவர் எங்களுக்கு விளக்கம் எழுதினார். பாஸ்போர்ட் எடுத்துக் கொள்ளவேண்டும். டூரிஸ்ட் விசாவும் வாங்கிக் கொள்ள வேண்டும். போக, வர ரிட்டன் டிக்கட் வாங்கிக் கொள்ள வேண்டும். இப்படி வருவதாக இருந்தால் இங்கிருந்து ஊழியத்திற்குப் போவதற்கான ஏற்பாடுகளை நான் செய்து தருகிறேன் என்பதாக கடிதம் எழுதினார்.

நாங்கள் கர்த்தருடைய உத்தரவுக்காக காத்துக் கொண்டிருந்தோம். கர்த்தர் திடீரென்று ஒருநாள் நாங்கள் புறப்படவேண்டிய நாளைக் குறித்து வெளிப்படுத்தி ‘‘சென்னையில் பாஸ்போர்ட்டுக்கான ஏற்பாடுகளை செய்துவிட்டு பம்பாய்க்கு போங்கள்; தேவையான பணவசதிகளை நான் ஆயத்தம் பண்ணித் தருவேன்’’ என்று கூறினார். அந்தப்படியே, கர்த்தரின் கட்டளைப் பெற்று ஸ்தல ஊழியத்தை அதற்காக கர்த்தர் நியமித்த ஊழியரிடம் ஒப்படைத்துவிட்டு கிளை சபைகளுக்கும் ‘‘நாங்கள் வெளிநாட்டுக்குப் போகிறோம். எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்’’ என்று அறிவிப்பு கொடுத்து விட்டு நாங்கள் வள்ளியூரிலிருந்து சென்னைக்கு பிரயாணப்பட்டோம். அதே சமயத்தில் எங்களிடம் சென்னை வரை செல்வதற்கும் போதிய பணம் கிடையாது. ‘‘உன்னை அனுப்புகிறது நானல்லவா’’ என்ற கர்த்தருடைய வார்த்தை நம்பி நாங்கள் ஆலயத்தில் ஜெபம் பண்ணிவிட்டு புறப்பட்டோம்.

நாங்கள் புறப்படும்பொழுது ஒரு சகோதரர் அவசரமாக ஆலயத்திற்குள் வந்தார். ‘‘ஐயா! எங்கே புறப்பட்டுள்ளீர்கள்? ஐயாமார்களோடு என்னையும் சென்னை வரை போகும்படி நேற்று இரவில் கர்த்தர் பேசினார். ஐயா அனுமதி தந்தால் வருகிறேன்’’ என்றார். என் ஆண்டவர் எனக்காக யாவற்றையும் செய்து முடித்தவர். சென்னை வரையிலும் நம்மை அழைத்துப் போக தம்முடைய தூதனை அனுப்பியுள்ளார் என உணர்ந்து சரி, பிரதர் கர்த்தர் அனுப்பியிருப்பதால் எங்களோடு வாருங்கள் என அழைத்துப் போனோம்.

அவரே சென்னை வரை செல்வதற்கானப் பண உதவிகளை செய்து சென்னையில் பாஸ்போர்ட் எடுப்பதற்கான பாரங்கள் வாங்கி, பூர்த்தி, செய்து எங்களிடமும் கையொப்பம் வாங்கி, அதற்குரியவர்களிடம் சேர்த்து விட்டு எங்களையும் பம்பாய்க்கு அனுப்பி வைத்தார். கர்த்தருக்கே மகிமையுண்டவதாக!

பாஸ்போர்ட் வருவதற்கும், எங்களுக்குத் தேவையான பணம்

கிடைப்பதற்கும் மாதங்கள் பல கடந்து விட்டது கர்த்தருடைய கிருபையால் ஏழை விசுவாசிகள் ஐந்தும், பத்துமாக அனுப்பிய காணிக்கை ரூபாய் ஐந்தாயிரம் வந்து சேர்ந்தது. கர்த்தருடைய பிள்ளைகளின் ஊக்கமாக ஜெபத்தினால் பாஸ்போர்ட்டும் வந்து சேர்ந்துவிட்டது. நாங்கள் மோரீஷியசுக்கு கப்பலில் செல்லவேண்டும் என எண்ணியிருந்தோம். கப்பலில் போய் வர ரூபாய் ஐயாயிரம் போதுமானது என அறிந்தோம். பாஸ்போர்ட்டையும் சேர்ந்த பணத்தையும் கொண்டு கப்பலில் டிக்கட் வாங்க சென்றோம். ''மோரீஷியசுக்கு இனி கப்பல் ஓடாது. கம்பெனிக்கு மிகுந்த நஷ்டம் உண்டாகி விட்டது'' என்று கூறினார்கள். எங்களுக்கு மிகுந்த அதிர்ச்சியாகி விட்டது. இனி என்ன செய்வது? விமானத்தில் செல்ல வேண்டுமானால் ரூபாய் பதினையாயிரம் தேவை. நமதுசபை மக்கள் மிகவும் ஏழைகள், நாம் எப்படி செல்வோம்? என்கிற எண்ணத்தோடு தலைமை மேய்ப்பரிடம் வந்து விபரத்தைக் கூறினோம். ''கர்த்தர் எப்படியும் வாசலை திறப்பார். கலங்க வேண்டாம்'' என்று ஆறுதல் கூறினார்கள். விசுவாசிகளிலும் பலர், ''ஐயாயிரம் தந்த ஆண்டவர் பதினையாயிரமும் தருவார்'' என்று எங்களுக்கு தைரியமான வார்த்தைகளைக் கூறினார்கள்.

இதற்கிடையில் நாங்கள் வெளிநாடு செல்ல முடியாது என எண்ணக் கூடிய அளவுக்கு மீண்டும் ஒரு அதிர்ச்சி தரும் செய்தி வந்தது. எங்களை வரவேற்று எங்களுடைய வார்த்தைகளை மொழி பெயர்த்து எங்களுடைய ஊழியத்தில் உதவியாயிருப்பதாக வாக்கு கொடுத்திருந்த திரு. கருணாகரன் அங்குள்ள வேலையை விட்டு விட்டு இந்தியா வருவதற்காக விமான டிக்கட் வாங்கி விட்டார் என்ற செய்தியை தமிழ் நாட்டிலுள்ள ஒரு சகோதரர் அறிந்து பம்பாய்க்கு கடிதம் எழுதினார். நாங்களும் ஊரிலிருந்து வந்து நீண்ட நாட்களாகி விட்டன. இந்த ஊழியத்தை குறித்து பாரங்கள் உள்ளத்தை அதிகமாய் அழுத்தினது.

இந்த ஊழியம் தடைப்பட்டு நாம் திரும்ப ஊருக்குப் போனால் நாங்கள் வெளிநாட்டுக்குப் போகிறோம் என்று சொன்ன தேவனுடைய வெளிப்படுத்தலை விசுவாசிகள் தவறாய் எண்ண நேரிடும். கஷ்டப்பட்டு சபை மக்கள் பணம் அனுப்பித் தந்தார்கள். விசுவாசிகளிடம் என்ன பதில் சொல்ல முடியும் என்று கலங்கினவர்களாக காணப்பட்டோம்.

தலைமை மேய்ப்பர் உடனடியாக சபையை வரவழைத்து, எப்படியும் மீதியுள்ள ரூபாய் பத்தாயிரமும் கிடைக்க வேண்டும். நம்முடைய ஊழியர்கள் மோரீஷீயசுக்கு போய் சேரும் வரையிலும் திரு. கருணாகரனை ஆண்டவர் தடுத்து நிறுத்த வேண்டும். அதற்காக நாம் கர்த்தரிடம் ஊக்கமாய் ஜெபம் பண்ண வேண்டும் என்று சபை மக்களுக்கு அறிவிப்பு கொடுத்தார்கள்

தேவனுடைய பிள்ளைகள் யாவரும் ஊக்கமாய் ஜெபித்தார்கள். அன்று இரவிலே எனக்கு மனம் அதிகபாரமாகவே நானும் தூங்காமல் நீண்ட நேரம் கண்ணீரோடு தேவனிடம் முறையிட்டுக் கொண்டிருந்தேன்.

திடீரென்று என் கண்களுக்கு முன்பாக ஒரு கை நீட்டப்பட்டிருந்ததைப் பார்த்தேன். அந்தக் கரம் எனக்காகக் கல்வாரிச் சிலுவையில் அடிக்கப்பட்ட என் ஆண்டவருடைய கரம் என்பதை நான் கண்டு கொண்டேன். காரணம், அந்த கரத்தின் உள்ளங்கையில் ஒரு பெரிய ஆணி அடித்து பிடுங்கி எடுத்த துவாரம் காணப்பட்டது. அதில் இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ஆ! என் ஆண்டவர் எனக்காக எத்தனை அதிகமாக வேதனையை அனுபவித்திருக்கிறார் என்பதை எண்ணி இன்னும் அதிகமாய் என் உள்ளம் எனக்குள்ளே கதற ஆரம்பித்தது. துக்கம் என்னுடைய தொண்டைய அடைத்தது. கதறி அழ வேண்டும் போல் தோன்றியது. பக்கத்து அறையில் தலைமை போதகர் ஜெபித்துக்கொண்டிருந்தார். பக்கத்தில் உடன் ஊழியர்களும் ஜெபித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் என்னுடைய துக்கத்தை எனக்குள்ளேயே அடக்கிக் கொண்டேன்.

சில மணித்துளிகள் கடந்தபின் என் நேசரின் மெல்லிய சப்தம் எனக்குள்ளிருந்து கேட்டது. காயப்பட்ட கரம் என் கண் முன்னால் நீட்டியபடியே இருக்கிறது. மகனே! என்று அழைத்தார் என் ஆண்டவர். இந்த வார்த்தையை கேட்டதும் என் நேசரின் அன்பும், என் மனதின் துக்கமும் கண்ணீராய் மாற, என் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய் ஓடினது. விம்மிய குரலில் எனக்குள்ளேயே அழைத்த ஆண்டவருக்கு, ஆண்டவரே! நான் என்ன செய்ய வேண்டும்? பதில் உரைத்தேன். மறுமொழியாக ''இந்த கரத்தில் எதற்காக ஆணி அடிக்கப்பட்டது''? என்று கேட்டார். நான் பதில் சொல்வதற்கு முன்னால் ''பாவமன்னிப்புக்காக என்று கூறப்போகிறாய் அப்படித்தானே'' என்று என் சிந்தையை அறிந்த ஆண்டவர் கேட்டார். ''ஆம், ஆண்டவரே, என் பாவங்களையும், சர்வலோகத்தின் பாவங்களையும் மன்னிப்பதற்காகவே உம்முடைய கால், கரங்களில் ஆணி அடிக்கப்பட்டது'' என்றேன்.

பாவமன்னிப்புக்காக மாத்திரமல்ல, எல்லாம் முடிந்தது என்று நான் கூறின வார்த்தையின் அர்த்தம் பாவமன்னிப்புக்கானவைகளை மாத்திரமல்ல, இவ்வுலகத்தில் செய்யப்பட வேண்டிய பாவமன்னிப்பின் ஊழியத்திற்கு தேவையானவைகளையும் செய்து முடித்துள்ளேன். ஆகையால் நீ கலங்காதே, தைரியமாயிரு. இந்த ஊழியத்தை செய்து முடிக்க தேவையானவைகள் சந்திக்கப்படும் என்று என்னை சிருஷ்டித்தவரும், என்னை ஆட்கொண்டவருமான என் கர்த்தர் பேசினார். உடனே என்னில் வல்லமை பெருகினது. புதுப்பெலன் அடைந்தேன். என் கவலைகளெல்லாம் என்னை

விட்டு மாறிவிட்டது. தேவனுக்கே மகிமையுண்டவதாக!

அநேக தேவபிள்ளைகளிடமும் இந்த ஊழியத்தின் முக்கியத்துவத்தை தேவன் வெளிப்படுத்தி ஊழியத்துக்காக உதவி செய்ய வேண்டும் என்ற வாஞ்சையையும் கர்த்தர் கொடுத்தார். மறுநாளிலேயே சிலர் தங்களிடமிருந்த பொன் ஆபரணங்களைக் கொண்டு வந்து கர்த்தருடைய ஊழியத்துக்குத் தேவையானவைகளுக்காக எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார்கள். அப்படியே தேவையான ரூபாய் பத்தாயிரமும் வந்து சேர்ந்தது. கர்த்தருக்கே மகிமையுண்டவதாக!

மறுநாளே விமான டிக்கட் வாங்குவதற்காக சென்றோம். அங்கேயும் ஒரு தடை காணப்பட்டது. எட்டு தினங்களுக்கு முன் டிக்கட்டிற்குரிய பணத்தை ரிசர்வ் பாங்கில் கட்டி அங்கிருந்து வெரிபிகேஷன் சர்ட்டிபிக்கேட் வாங்கி வந்ததால்தான் விமான டிக்கெட் மோரிஷீயசுக்கு கிடைக்கும் என்று கூறிவிட்டார்கள். தலைமை மேய்ப்பரிடம் விபரங்களை கூறினோம். ‘‘நாட்கள் பிந்தினால், அங்கிருந்து, திரு. கருணாகரன் இந்தியா வந்துவிட முடியுமே, எப்படியும் இதற்கு கர்த்தர் ஒரு வழி திறக்கும்படி ஜெபிப்போம்’’ என்று கூறினார்கள்.

இரவில் பாரத்தோடு ஜெபித்தோம். எல்லா தேவைகளையும் கர்த்தர் சந்தித்த பிறகும், நாட்கள் பிந்துகிறதே என்கிற வருத்தத்தோடு ஆண்டவரிடம் இரவில் விண்ணப்பம் செய்தோம்.

மறுநாள் காலையில் ஒரு சகோதரர் கையில் ஒரு ‘இந்தியன் எக்ஸ்பிரஸ்’ என்ற ஆங்கில பத்திரிக்கையை எடுத்துக்கொண்டு, ‘‘ஐயா ஆண்டவர் ஒரு பெரிய அற்புதம் செய்திருக்கிறார்’’, என்று கூறிக்கொண்டே பத்திரிக்கையை தலைமை மேய்ப்பரிடம் கொடுத்தார். அதில் முதல் முறையாக மோரீஷியசுக்கு செல்கிறவர்களுக்கு ரிசர்வ் பேங்க் வெரிபிகேஷன் அவசியமில்லை என்பதாக எழுதியிருந்தது. என்ன ஆச்சரியம்! ஒரே ராத்திரியில் புதிய சட்டம் பிறப்பிக்கப்பட்டது.

நாங்கள் உடனே பத்திரிக்கையையும், கையில் பணத்தையும் எடுத்துக்கொண்டு விமான டிக்கெட் வாங்கச் சென்றோம். அங்குள்ளவர்களும் உங்களுக்காகவே இப்படி ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது என்று கூறி விமான டிக்கட்டைக் கொடுத்தார்கள். எழுதிக்கொண்டே போனால் ஏடு தாங்காது. ‘‘எல்லாம் முடிந்தது’’ என்று சொன்ன கல்வாரி நாதர் அவருடைய சேவைக்கான எல்லாவற்றையும் செய்து மோரீஷியசுக்கு போக வாசலைத் திறந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

இவ்விதமாக தேவனுடைய கிருபையினால் நாங்கள் 23-11-1976ல் பம்பாயிலிருந்து ஏர் இந்தியா விமானத்தின் மூலம் மோரீஷியஸ் செல்ல சந்தாகுருஸ் விமான நிலையத்துக்குச் சென்றோம். எங்களுடைய தலைமை மேய்ப்பரும், உடன் ஊழியர்கள், பம்பாய் புதிய எருசலேம் சபையார் யாவரும் எங்களை வழியனுப்ப வந்திருந்தார்கள். எங்களுடைய பயணச் சீட்டுகள், உடமைகள் எல்லாம் பரிசோதனை செய்த பின் தலைமை மேய்ப்பர் ஜெபித்து எங்களை அனுப்பினார்கள்.

முதல் முறையாக விமானத்தில் பிராயணம் செய்ய போகிறோம். முன்பின் தெரியாத வேற்று மொழி பேசும் மக்களிடம் கடந்து போகிறோம் எங்களுடைய ஊழியத்தில் மொழி பெயர்க்கவிருக்கும் சகோ. கருணாகரனைக் கடிதத்தின் மூலமே அறிந்திருக்கிறோம். நேரில் பார்த்ததில்லை. என்பது போன்ற எண்ணங்களெல்லாம் சிந்தனையில் தோன்றிக் கொண்டேயிருந்தது. பரிசோதனைகளெல்லாம் முடிந்து பயணிகள் தங்கும் அறையில் போய் அமர்ந்து கண்களை மூடி ஜெபித்துக் கொண்டேயிருந்தோம். கர்த்தருடைய ஆவியானவர் உள்ளத்தில் பேசிக்கொண்டேயிருந்தார். ''பலங்கொண்டு திடமனதாயிரு,'' திகையாதே, கலங்காதே, உன்னை அனுப்புகிறது நானல்லவா'' என்றெல்லாம் ஆறுதலான வார்த்தைகளைப் பேசி பெலப்படுத்தினார்.

''மோரீஷியஸ் செல்லும் பயணிகள் விமானத்துக்குச் செல்லலாம்'' என்ற அறிவிப்பு கொடுக்கப்பட்டது. பயணிகள் எல்லோரும் புறப்பட்டார்கள். விமானம் சிறிது தூரத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. அதுவரையிலும் போக, வாகனங்கள் ஏற்றிச்செல்ல வந்தது. வாகனத்தில் ஏறி விமானத்தில் சென்று எங்களுக்குரிய ஆசனத்தில் அமர்ந்தோம். உள்ளம் தேவனின் அன்பினால் நிரம்பினது. ஆண்டவரை ஸ்தோத்திரத்து கொண்டேயிருந்தோம். பஸ்ஸில் செல்லக் காசில்லாமையால் கால்நடையாகவே நடந்து போய் ஊழியம் செய்து வந்த நாட்களில், ''உங்களை நான் வெளிநாடுகளுக்கும் அனுப்புவேன், விமானத்தில் நீங்கள் அடிக்கடி பயணம் செய்வீர்கள். என்னுடைய ஊழியத்துக்காக சகலமும் ஆயத்தமாய் உள்ளது. இந்நாட்களிலுள்ள குறைவுகளைக் கண்டு சோர்ந்து போகக்கூடாது'' என்றெல்லாம் கர்த்தர் பேசின வார்த்தைகளை நினைவு கூர்ந்து, என் ஆண்டவரை ஸ்தோத்திரித்து மகிமைப்படுத்திக் கொண்டேயிருந்தோம்.

சில வினாடிகளில் விமானம் புறப்பட்டது. இடுப்பில் ஆசனத்தில் பொருத்தப்பட்டுள்ள பெல்ட்டை மாட்டிக்கொள்ளவேண்டும். ஆபத்து ஏற்பட்டால் எவ்வாறு தப்பித்துக் கொள்ளவேண்டும் என்பதற்காக விளக்கங்களை ஒருவர் பயணிகளிடம் கூறினார். ஏற்கனவே நாங்கள்

புறப்படுமுன்பும், விமானத்தில் தலை சுற்றும், ஜன்னல் வழியாக வெளியே பார்க்கக் கூடாது வாந்திவரும் என்றெல்லாம் அறிந்த சிலர் எங்களிடம் கூறியிருந்தார்கள். ஆனால்! கர்த்தருடைய பெரிதான கிருபையால் எங்களுக்கு ஒரு பெலவீனமும் ஏற்படவில்லை. மாறாக எங்கள் உள்ளம் தேவனுடைய அன்பை எண்ணி மகிழ்ந்து கொண்டேயிருந்தது.

ஜன்னல் வழியாக தூரத்தில் பார்க்கும்பொழுது இறைவன் படைத்த மேக கூட்டங்கள், நல்ல வெண்மையான பஞ்சைப் போல உயர்ந்த சிகரங்களாக காட்சி அளித்தது. பம்பாயிலிருந்து நேரே மேற்கே அரபிக் கடலின் மேல் பறந்த எங்கள் விமானம் தென்மேற்கு திசை நோக்கி, தென் ஆப்பிரிக்காவின் கிழக்கு கடலின் மேல் முழுவதும் கடல் மார்க்கமாகவே சென்றது.

பூமியிலிருந்து மேலே ஆகாயத்தை நாம் பார்க்கும் பொழுது மேக மண்டலத்தினுடே நீல ஆகாயம் தெரிவது போலவே மேகமண்டலத்துக்கும், மேலே மிகவும் உயரமாய் பறந்து கொண்டிருந்த மண்டலமும் அதனூடே கீழேயுள்ள சமுத்திரமும் நீல நிறமாய் தோன்றியது. அது கீழேயும் ஒரு ஆகாயம் இருப்பது போலவே தெரிந்தது. சில இடங்களில் பஸ் எப்படி துள்ளுமோ? அதுபோல் ஆகாயத்திலும் விமானம் காற்று அழுத்தம் உள்ள இடங்களில் இடறுவதைக் காண முடிந்தது. சமுத்திரத்தின் சில இடங்களில் பயங்கர கொந்தளிப்புகள் இருந்தது. அப்படிப்பட்ட இடங்களை பயணிகளுக்கு காண்பிப்பதற்காக விமானத்தை மிகவும் தாழ்த்தி தண்ணீரின் ஓரத்துக்கு கொண்டு வந்து காண்பித்தார்கள்.

இவ்விதமாய் இறைவனின் படைப்புகளைப் பார்த்து தேவனை மகிமைப் படுத்திக் கொண்டே சென்றோம். சுமார் நான்கு மணி நேரப் பிரயாணத்திற்குப் பின்பு சிசெல்ஸ் என்ற ஒரு சிறிய தீவில் எங்கள் விமானம் இறங்கியது. கீழே இறங்கி தேநீர் அருந்தினோம். மீண்டும் விமானம் புறப்பட்டு இரண்டு மணி நேரப் பயணத்திற்குப் பின்பு மோரீஷியஸ் வந்தது.

விமான நிலையத்தில் விமானம் இறங்கினதும், பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரித்து எங்கள் கைப்பைகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தோம். தமிழைத் தவிர வேறு பாஷை தெரியாது. அதிகாரிகள் என்ன கேட்பார்கள்? எப்படி மறுமொழி கொடுப்பது? என்பது போன்ற கலக்கங்கள் ஒருபுறமும் உருவாகியது. எப்படியும் கர்த்தர் நமக்காகப் பேசுவார் என்றும் ''அப்பொழுது பேசுகிறது உங்கள் பிதாவின் ஆவியானவரே'' என்ற வார்த்தையையும் தியானித்துக்கொண்டே கஸ்டம்ஸ் ஆபிசரை அணுகினோம். அவருடைய கிரியோல் பாஷையிலே எங்கே தங்குவீர்கள்? எதற்காக வந்தீர்கள்? எவ்வளவு நாள் தங்குவீர்கள்? உங்களை அனுப்பியது யார்?

அதற்குரிய ஆதாரம் இருக்கிறதா? இங்கிருந்து யார் உங்களை அழைத்தது? என்பது போன்ற கேள்விகளையெல்லாம் கேட்டார்.

''நான் உன்னை விட்டு விலகுவதில்லை, உன்னை கைவிடுவதுமில்லை'' என்று சொன்ன சர்வவல்லமையுள்ள ஆண்டவர் பெந்தேகோஸ்தே நாளில் பொந்து, கப்பத்தோக்கியா, மெசப்பொத்தோமியா நாட்டு மக்களின் பாஷையிலே தேவனுடைய மகத்துவங்களைத் தம்முடைய சீஷர்களைக் கொண்டு பேசின ஆண்டவர் இதே நேரத்தில் இந்த கிரியோல் பாஷை பேசின அதிகாரியோடும் பேசி விளங்க வைத்து எங்களுடைய ரிக்கார்டுகளையும் காட்டி நம்ப வைத்து, விமான நிலையத்தை விட்டு வெளியே வரவைத்தார். ஆம்! இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவரே.

வெளியே சகோதரர் கருணாகரன் தன் துணைவியோடு எங்களை அழைத்துச் செல்வதற்காக கார் கொண்டு வந்திருந்தார். எங்களுடைய உடையின் தோற்றத்தைக் கண்டதும் நாங்கள் தான் தாங்கள் எதிர்பார்க்கும் ஊழியர்கள் என்பதை எளிதில் கண்டு கொண்டார்கள். ஆறுதலின் தேவன் எங்களுடைய எல்லாவித கலக்கத்தையும் நீக்கி எங்களுக்கு ஆறுதல் செய்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

அன்றைய தினம் இரவில் எங்களைப் பார்க்க சகோரர் கருணாகரன் வீட்டிற்கு மோரீஷியஸிலுள்ள கிறிஸ்தவ அசம்ப்ளியின் பாஸ்டர். பிளாக்பெர்ன் (Black Bern) என்பவர் வந்திருந்தார். சுகநலம் விசாரித்து விட்டு, ''இங்கே எவ்வளவு காலம் தங்கியிருப்பீர்கள்?'' என்று கேட்டார். ''அது உறுதியாக நாங்கள் கூறமுடியாது. கர்த்தர் அனுமதிக்கும் நாள் வரையிலும் நாங்கள் இங்கே இருப்போம்'' என்று கூறினோம்.

இந்தப் பாஸ்டர்தான் இந்த தீவிலுள்ள ஆவிக்குரிய மக்களுக்குத் தலைமைப் போதகர். இவர் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்தவர். நாங்கள் மொழிபெயர்ப்பாளரைக் கொண்டு இப்பொழுது பேசிக் கொண்டிருக்கிறோம். இவர் மறுபடியும் : ''இத்தீவிலுள்ள மக்கள் தீர்க்கதரிசனங்களைக் கேட்டு ஏமாற்றமடைந்துள்ளார்கள். ஆகையால், நீங்கள் எங்கள் மத்தியில் வேதவசனங்களை பிரசங்கிக்கலாம் ஆனால்! தீர்க்கதரிசனம், வெளிப்படுத்தல்கள் கூறவேண்டாம்'' என்று கூறினார். ஏற்கனவே நாங்கள் இந்தியாவிலிருந்து மோரீஷியஸ் செல்வதற்கு முன்னால், அந்த தீவின் நிலவரங்களையும் எங்களை எதற்காக தேவன் அனுப்புகிறார் என்பதையும், அங்கே எங்களைக் கொண்டு என்னென்ன செய்யப்போகிறார்? என்பதையும், தேவன் எங்களுக்கு முன்பே அறிவித்திருந்தார். அதோடு இந்த பாஸ்டர்

பிளாக்பெர்ன்னைப் பற்றியும் சில காரியங்கள் வெளிப்படுத்தினார்.

''இவர் ஊழியத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கத்தினிமித்தம் இந்த தீவை விட்டு விட்டு சொந்த நாட்டுக்குப் போய்விட வேண்டும் என்று தீர்மானித்திருப்பதாகவும், இவர் அப்படி போகாமல் இங்கேயே இருந்து என்னுடைய ஊழியத்தை செய்ய வேண்டும். நான் இவனை ஆசீர்வதிப்பேன்'' என்றும் இந்த பாஸ்டரைப் பற்றி தேவன் வெளிப்படுத்தியிருந்தார்.

தேவன் வெளிப்படுத்துகிறதை மக்களிடம் சொல்லக் கூடாது. மக்கள் நம்பமாட்டார்கள் என்று கூறினாரே! இவரைப் பற்றி தேவன் சொன்னதை நம்புகிறாரா பார்ப்போம் என எண்ணி, இவரைப் பற்றி தேவன் வெளிப்படுத்திய செய்தியை அவருக்கு வாசித்துக் காண்பித்தோம். அவர் உடனே கண்ணீர் விட்டார். ''நான் உங்களைத் தவறாக எண்ணி விட்டேன். உண்மையிலேயே இது கர்த்தர் வெளிப்படுத்தின செய்திதான். நான்கு வருடங்களுக்கு முன்பு, இது போலவே என்னுடைய ஊழியத்தில் ஏற்பட்ட நெருக்கத்தினால் நான் ஆஸ்திரேலியாவில் போய் கர்த்தருடைய ஊழியத்தை செய்யாலாமே என்று எண்ணி, அங்கே போய்விட்டேன். அங்கேயும் கர்த்தர் ஒரு ஊழியக்காரரைக் கொண்டு பேசினார். ''மகனே நீ யோனாவைப் போல வந்து விட்டாயே! மறுபடியும் மோரீஷியசுக்குப் போ. நான் உன்னை உயர்த்துவேன்'' என்று கூறினார். அதன்படியே நான் மீண்டும் இந்த மோரீசைஸ் வந்தேன். அதுபோலவே இந்நாட்களிலும் எனக்கு ரொம்ப வேதனையாகி, இந்த மக்கள் மத்தியில் இனி ஊழியம் செய்யக்கூடாது. இந்த ஆண்டு இறுதி வரையிலும் இருந்து விட்டு அடுத்த ஆண்டு ஆஸ்திரேலியா சென்று விட வேண்டும் என்ற முடிவில் இருக்கிறேன். இப்பொழுதும் கர்த்தருடைய ஆவியானவர் உங்களை அனுப்பி என்னுடைய பிரயாணத்தை தடை செய்துவிட்டார். உங்களை எனக்காகவே தேவன் அனுப்பியிருக்கிறார். நான் இனி என்ன நேர்ந்தாலும் இந்த இடத்தை விட்டுப் போகமாட்டேன்'' என்று கூறி, ''நாளைக்கே நாம் சபைகளை சந்திக்கலாம். நான் வந்து என்னுடைய காரில் உங்களை அழைத்துப் போவேன்'' என்று கூறிச் சென்றார். இந்த மோரீஷியஸில் கர்த்தருடைய சித்தம் செய்ய தேவன் வாசலை திறந்தார் என எண்ணித் கர்த்தரை மகிமைப் படுத்தினோம்.

மறுநாள் காலையில் அதிகாரி ஒருவர் நாங்கள் தங்கியிருந்த சகோ. கருணாகரன் வீட்டிற்கு வந்தார். எங்களுடைய விலாசம் அவரிடம் இருக்கிறது. பாஸ்டர் எஸ். சுந்தர்ராஜ், பாஸ்டர் எஸ். ஏசுதாசன் இருக்கிறார்களா? என்று கேட்டார். நாங்கள் ஒரு அறையில் ஜெபித்துக் கொண்டிருந்தோம். சகோதரி (திருமதி. கருணாகரன்) வந்து உங்களை யாரோ பார்க்க வந்திருக்கிறார்கள்

என்று கூறினார்கள். நாங்கள் இருவரும் எங்களுடைய வேஷ்டி ஜிப்பா உடையிலேயே அவரை சந்தித்தோம்.

அவர் எங்களுடைய உடையைக் கண்டதும் அவருடைய இருக்கையை விட்டு எழுந்திருந்து, ''நீங்கள் சாதுக்களா''? என்றார். என்ன விஷயம் என்றோம். ''உங்கள் உடையைப் பார்த்தால் அப்படி தெரிகிறது'' என்றார். பின்னர் அவர், ''நான் அரசாங்க சுகாதார நிலையத்தின் ஓர் அதிகாரி, நீங்கள் விமானத்தில் வந்திருப்பதால் உங்களுக்கு சரீரத்தில் மயக்கம், வாந்தி வேறு பெலவீனங்கள் உருவாகியிருக்குமாயின் அதற்கு இலவச சிகிச்சை செய்வதற்காக வந்திருக்கிறேன். உங்களுக்கு அப்படி ஏதாவது பெலவீனங்கள் உண்டானால் கூறலாம்'' என்றார். ''எங்களுக்கு அப்படி யாதொரு பெலவீனங்களும் உருவாகவில்லை'' என்று கூறினோம். நீங்கள் மோரீஷியசுக்கு முதல் தடவை தானே வந்திருக்கிறீர்கள். ஒரு பெலவீனமும் இல்லையென்று சொல்வதை எண்ணி நான் ரொம்ப ஆச்சரியப்படுகிறேன். சிரமம் தந்ததற்காக வருந்துகிறேன்'' என்று கூறிக் கடந்து போனார்.

''....அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார்'' (எபேசி 5:23)

பாஸ்டர். பிளாக் பர்ன் என்பவர் எங்களை பல இடங்களிலுள்ள அவருடைய சபைகளுக்கு அழைத்துப் போய் தேவ செய்திகளை கொடுக்க ஏற்பாடு செய்தார். பல ரோகிகள் சொஸ்தமானார்கள். அநேகரிடமிருந்து அசுத்த ஆவிகள் அலறி அடித்துக் கொண்டு வெளியேறினது. இவ்விதமாய் கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்து வருவதைக் கண்ட அவர். ஒருநாள் முழுமையும் வியாதியஸ்தர்களுக்காகவே ஜெபிக்க வேண்டும் என்று விரும்பி எங்களிடம் அனுமதி வாங்கிக் கொண்டு அங்குள்ள கிறிஸ்தவர்களுக்கெல்லாம் அறிவிப்பு கொடுத்துள்ளார்.

பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடி வந்து விட்டார்கள். வியாதி வருவதின் மூலக்காரணம் பாவமாய் இருக்கிற படியால் மக்களுக்கு பாவத்தைக் குறித்து கண்டித்து உணர்த்தும்படி ஆவியானவர் பேசினார். ''அவர் வந்து பாவத்தைக் குறித்தும், நீதியைக் குறித்தும், நியாயத்தீர்ப்பைக் குறித்தும், உலகத்தைக் கண்டித்து உணர்த்துவர்'' (யோ. 16:8) என்ற வேத வாக்கியத்தின்படி தேவன் கிரியை செய்தார். மக்களின் உள்ளங்கள் உடைந்தது. பலர் பரிசுத்த ஆவியானால் நிரப்பப்பட்டார்கள். பலரிடமிருந்து தீய வழியில் நடத்தும் தீய ஆவிகள் வெளியேறினது. இன்னும் பலருக்குள் அசுத்த ஆவிகள் இறங்கி அந்நிய பாஷைகளைப் பேசுகிறது. அவைகள் ''இங்கே எதற்கடா வந்தீர்கள்'' என்று அந்நிய பாஷையில் எங்களை திட்டுவதையும் நாங்கள் அறிந்து அவைகளையும் கர்த்தருடைய

வல்லமையால் துரத்தும்படி தேவன் உதவி செய்தார். தேவனுடைய மகிமை உண்டாவதாக!

திடீரென்று ஒரு அம்மாவுக்குள்ளிருந்து ஒரு ஆவி ''நான் போக மாட்டேன், என்னைத் துரத்தாதே'' என்று தமிழில் பேச ஆரம்பித்தது. அங்குள்ள மக்கள் எல்லாருமே தமிழ் மொழியை மறந்து விட்டார்கள். ஆனால் இந்தப் பிசாசு தமிழ்நாட்டில் இருந்து சென்ற பிசாசு, இது தமிழ் மொழியை மறக்கவில்லை. பல்லாயிரக்கணக்கான மக்கள் மத்தியில் இப்படியொரு தமிழ் குரலை கேட்டதும் எங்களுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

கூட்டத்தின் நடுவிலிருந்த இந்த அம்மா ஓடிவந்து பிரசங்க மேடையின் அருகே வந்து வீழ்ந்தது. இறங்கிப் போய் கர்த்தருடைய நாமத்தினாலே கடிந்து துரத்தினோம். அந்த ஆவி வெளியேறிவிட்டது. கர்த்தருக்கே மகிமை செலுத்துகிறேன். கூட்டம் முடிந்ததும் எங்களிடம் தனிமையில் பேசவேண்டும் என்று விரும்பி அந்த அம்மா நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு விடுதலை கிடைத்ததை அவர்கள் உணர்ந்து கொண்ட படியால் எங்கள் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து பணிந்துக் கொண்டார்கள். இப்படிச் செய்யக்கூடாது என்று நாங்கள் தடைசெய்த போது, அவர்களுடைய கண்களிலிருந்து நீர் சொரிய ஆரம்பித்தது.

''என்னைப் பிசாசின் கரத்திலிருந்து விடுதலையாக்கி எனக்கு சமாதானத்தை அளித்த என் தேவனுக்கும், தங்களுக்கும் நான் வேறெந்த விதமாக என் நன்றியைக் கூறி கொள்வது?'' என்று கூறி தன்னுடைய வாழ்க்கை சரித்திரத்தை சுருக்கமாய் கூற ஆரம்பித்து.

''நான் ஒரு இந்து குடும்பத்தைச் சேர்ந்தவள். எனக்கு திருமணம் ஆகி 15 ஆண்டுகள் ஆகிறது. நாங்கள் வழிப்பட்டு வந்த காளி தெய்வம் எங்கள் குடும்பத்தை அடியோடு அழித்து விட்டது. முதலில் என்னுடைய அப்பா, அம்மா மரித்துப் போனார்கள். பிறகு என் மாமா, மாமியும் திடீரென்று மரித்துப் போனார்கள். எனக்கு பன்னிரெண்டு குழந்தைகள் கருத்தரித்து சில மாதங்களில் அழிக்கப்பட்டு விட்டது. இப்பொழுது எனக்கு குழந்தைகள் இல்லை. இறுதியாக என் கணவரையும் அந்த சக்தி கொன்று விட்டது. இப்பொழுது நான் மட்டுமே தனிமையாய் இருக்கிறேன். என்னையும் அழித்து விட அந்த ஆவி பல வழிகளில் போராடினது. இப்படியிருக்கவே, நான் இனி கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்து விட்டால் இயேசு நாதர் என்னைக் காப்பாற்றுவார் என நம்பி நான் இந்த மார்க்கத்தில் சேர்ந்தேன்.

என்னுடைய பரிதாப நிலையைக் கண்ட ஆண்டவர் இந்தியாவில் இருந்து உங்களை அனுப்பி என்னை இந்தப் பொல்லாத பிசாசின்

பிடியிலிருந்து விடுதலையாக்கி விட்டார். எனக்காகவே நீங்கள் இத்தீவுக்கு வந்திருக்கிறீர்கள் என நினைக்கிறேன். இனி என் வாழ்நாள் எல்லாம் ஆண்டவருடைய பிள்ளையாகவே ஜீவிப்பேன்'' என்று சாட்சி கூறினது. சிறுமையானவர்கள், விதவைகள் யாவருடைய கண்ணீரையும் துடைக்கிற ஆண்டவருடைய அன்புக்காக என் ஆண்டவரை ஸ்துதிக்கிறேன்!

அங்குள்ள எல்லா மக்களும் தங்களுடைய இல்லங்களுக்கு எங்களை அழைத்து வர வேண்டும் என்று அங்குள்ள பாஸ்டரைக் கேட்டுக் கொண்டார்கள். ''கர்த்தர் அனுப்பும் இடங்களுக்கு மட்டுமே அவர்கள் போய் வருகிறார்கள் நீங்கள் அதற்காக ஜெபியுங்கள்'' என்று கூறி மக்களை அனுப்பி விட்டார்கள்.

மறுநாள் கர்த்தருடைய உத்தரவுப்படி நாங்கள் ஒரு குடும்பத்தை சந்திக்கப் புறப்பட்டோம். சகோதரர் கருணாகரன் எங்களை அழைத்து போக வந்தார். அந்த குடும்பத்தின் தலைவர் இன்னமும் இரட்சிக்கப்படாதவர். பயங்கர குடிகாரர், மனைவி, பிள்ளைகள் மட்டுமே கர்த்தரை ஏற்று கொண்டு இருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் யாரும் அவருடைய வீட்டிற்கு செல்லக் முடியாது.

ஒருநாள் இந்த சகோதரர், கருணாகரன் இவர்கள் வீட்டிற்கு சென்றிருந்த போது, அரிவாளை எடுத்து இங்கே வரக்கூடாது என்று மிரட்டி இருக்கிறார். இந்த விவரங்களைக் கருணாகரன் கூறினார். ''சரி, கர்த்தர் நம்மை அனுப்புகிறபடியால் அந்த பெரியவரை தேவன் இன்றைக்கு சந்திப்பார்'' என்று நாங்கள் சகோதர சகோதரிகளிடம் பதில் கூறிவிட்டு அந்த வீட்டிற்கு கடந்து போனோம்.

எங்களைக் கண்டதும் வீட்டில் அனைவருக்கும் பெரிய மகிழ்ச்சி. ஆனால் பெரியவர் ஏதாவது கலாட்டா செய்துவிடக் கூடாதே என்கிற கலக்கமும் ஒரு பக்கம் இருந்தது. நாங்கள் சென்றிருந்த போது அவர் வெளியே போயிருந்தார். சில நிமிட நேரத்தில் வந்தார். வீட்டு பெரியம்மா, ''இவர்கள் இந்தியாவில் இருந்து வந்திருக்கிறார்கள்'' என்று அவரிடம் எங்களை அறிமுகப்படுத்தினார்கள். ''சரி, சந்தோஷம்! நான் பைபிள் எடுத்துக் கொண்டு வருகிறேன்'' என்று கூறி வீட்டினுள் போய் பிரெஞ்சு பைபிள் ஒன்று எடுத்துக் கொண்டு வந்து எங்கள் முன் ஆசனத்தில் அமர்ந்தார். வீட்டில் உள்ள யாவருக்கும் கலக்கமாகி விட்டது. பைபிளிலிருந்து ஏதாவது இவர்களிடம் தர்க்கம் செய்ய போகிறாரா? இவர் ஒரு நாளும் பைபிளை கையில் எடுத்ததே கிடையாதே? என்று எல்லோரும் எண்ணிக் கொண்டு இவர் அடுத்து என்ன செய்யப் போகிறார் என்று இவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

சில வினாடிக்குப் பிறகு அவர் பேசினார். ‘‘நேற்று இரவு எனக்கு ஒரு தரிசனம் கிடைத்தது. நீங்கள் இரண்டு பேரும் எங்கள் வீட்டிற்கு வந்திருக்கிறீர்கள், நான் கையில் வேதப்புத்தகத்துடன் உங்கள் முன்னிலையில் அமர்ந்து ஆலோசனை கேட்பதாகக் கண்டேன். ஆகையினால் தான் உங்களை கண்டதும் நான் வீட்டினுள் போய் முதலாவது பைபிளை எடுத்துக் கொண்டு வந்து உங்கள் முன் அமர்ந்தேன். இவர்களுக்கெல்லாம் இப்பொழுது ஆச்சரியமாக இருக்கும். நீங்கள் எனக்கு போதனை கொடுங்கள் நான் அப்படியே இனி நடப்பேன்’’ என்று கூறினார். இந்த வார்த்தைகளை அவர் கூறினதும், அந்த வீட்டார் அனைவரும் அச்சரியப்பட்டு இறைவனை மகிமைப்படுத்தினார்கள்.

அவரிடம் நாங்கள், ‘‘மனம் திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும், பாவத்தினால் கிடைக்கும் நித்திய வேதனைகளும், இரட்சிக்கப் படுவதினால் கிடைக்கும் நித்திய சந்தோஷத்தையும் குறித்து வேத வசனங்களைக் கொண்டு பேசினோம். ஒரு குழந்தையைப் போல் தேம்பி, தேம்பி அழுது ‘‘என் வாழ்நாளை இதுவரையிலும் வீணாய் கழித்து விட்டேன், இனி நான் நேர்மையாக வாழ விரும்புகிறேன்’’ என்று கூறினார்.

நாங்கள் பேசிக் கொண்டிருந்த ஹாலின் எதிர்புறமான ஓர் அறையில் சுமார் இரண்டு வண்டிகளில் ஏற்றக்கூடிய அளவுக்குப் பெரிய பெரிய பாட்டில்கள் இருந்தது. சகோதரர் கருணாகரனிடம், ‘‘பெரியவர் பாட்டில் வியாபாரம் செய்கிறாரா?’’ என்று கேட்டேன். யாரும் பதில் கூறவில்லை. ‘‘நாளைக்கு நீங்கள் தங்கி இருக்கிற இடத்துக்கு நான் வருவேன், உங்களிடம் நீண்ட நேரம் பேச வேண்டும். இப்போது நாம் எல்லாரும் சாப்பிடுவோம்’’ என்று பெரியவர் கேட்டுக் கொண்டார். அப்படியே நாங்கள் உணவருந்திவிட்டு அந்த வீட்டாருக்காக ஜெபித்து விட்டு கடந்து வந்தோம். அந்த வீட்டாருக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது.

மறுநாள் அதிகாலமே நாங்கள் தங்கி இருந்த சகோதரர் கருணாகரன் வீட்டுக்கு இவர் வந்து விட்டார். நீண்ட நேரமாக அவருடைய காரியங்களைச் சொன்னார். ‘‘நேற்று நீங்கள் எங்கள் வீட்டிலுள்ள பாட்டில்களை பார்த்து, பெரியவர் பாட்டில் வீயாபாரம் செய்கிறாரா? என்று கேட்டீர்கள். அது எனக்கு ரொம்ப வெட்கத்தை உண்டாக்கி விட்டது. அந்தப் பாட்டில்கள் நான் குடிக்கும் மதுப்பாட்டில்கள், மாதம் ஒருமுறை இவ்வளவு பாட்டில்கள் சேரும். இதனால் என் வீட்டுக்கு என் சம்பாத்தியத்தில் ஒரு பைசாவும் கொடுப்பதில்லை. எனவே என் வீட்டாரும் என்னை மதிப்பதில்லை. நான் குடிக்கும் காரணம். என் முதுகெலும்புக்குள் ஒரு விதமான அரிப்பு உண்டாகி எனக்கு ரொம்ப வேதனையைக் கொடுக்கும்.

டாக்டர்களால் அதை குணப்படுத்த முடியவில்லை. ஆகையால், அந்த வேதனை நீக்குவதற்காகவே நான் குடிக்கிறேன். இந்த குடிப்பழக்கம் என்னை விட்டு மாற வேண்டும். நீங்கள் எனக்காக ஜெபிக்க வேண்டும்'', என்று கேட்டுக் கொண்டார். பாவங்களை அறிக்கை செய்ய ஆலோசனை கொடுத்தோம். தன் பாவங்களினால் ஏற்பட்ட விளைவுகளை எண்ணி மனங்கசந்து அழுது பாவ அறிக்கை செய்தார்.

இவருடைய உள்ளம் நொறுங்கினது. நொறுங்குண்டு பணிந்தவர்களின் உள்ளங்களில் வாசஞ்செய்யும் பரிசுத்தமுள்ள ஆண்டவர் இந்த பெரியவருடைய உள்ளத்திலும் வாசஞ்செய்யக் கடந்து வந்தார். கர்த்தருடைய ஆவியானவர் இவர் உள்ளத்தில் இறங்கினதும் இவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ''நான் சீக்கிரமாய் வீட்டிற்குப் போய் இந்த மகிழ்ச்சியை என் குடும்பத்தில் அறிவிக்க வேண்டும். மறுபடியும் உங்களை நாளைக்கு வந்துப்பார்க்கிறேன்'' என்று கூறி கடந்துப் போனார்.

ஒரு நாளைக்கு 10-பாட்டில் வரைக் குடிப்பவர். அன்றைக்கு மதுவே குடிக்காமல் இருந்ததையும், உள்ளத்தில் ஏற்பட்ட சந்தோஷத்தையும் வீட்டாரிடம் கூறி இருக்கிறார். அவர்களும் அந்தச் செய்தியைக் கேட்டு அவரோடு சந்தோஷப்பட்டிருக்கிறார்கள். ''மனந்திரும்புகின்ற ஒரே பாவியினிமித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிருக்கும்'' (லூக்கா 15:7) என்று நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொன்னவார்த்தையின் படி அன்று பரலோகமே சந்தோஷப்பட்டதற்காக என் தேவனை நன்றியோடு ஸ்துதிக்கிறோம்.

மறுநாள் காலையில் கொஞ்சம் பிஸ்கட், கேக், பழங்கள் ஆகியவைகள் அடங்கிய ஒரு பார்சலைக் கொண்டு வந்தார். ''இவைகள் எல்லாம் எதற்கு? சும்மா வந்தால் என்ன?'' என்று கேட்டோம். ''நான் அடைந்த மகிழ்ச்சியை நான் எவ்விதமாக கூறுவதென்றே தெரியவில்லை. என்னுடைய மாற்றத்தைக் கண்ட என் வீட்டார் ரொம்ப சந்தோஷப்படுகிறார்கள். அது மட்டுமல்ல நீண்ட நாட்களாக நான் குடிப்பதற்கு காரணமாயிருந்த என் வியாதி, அதுவும் நேற்று நீங்கள் எனக்காக ஜெபித்ததும் என்னை விட்டுப் போய் விட்டது. இயேசு சுவாமிக்கு எவ்விதமாய் நன்றி கூறுவதென்றே தெரியவில்லை.

எனக்கு பன்னிரண்டு பெண் குழந்தைகள் உண்டு. அதில் பதினொரு பிள்ளைகளை விவாகம் செய்து கொடுத்து இருக்கிறேன். அவர்கள் அத்தனை பேரும் விக்கிரக ஆராதனை செய்கிறார்கள். நீங்கள் இன்னொரு நாள் எங்கள் வீட்டிற்கு வர வேண்டும். அவர்கள் எல்லோரையும் அழைத்து வருவேன். அவர்களையும் இயேசு சுவாமியின் பிள்ளைகளாக மாற்ற வேண்டும் என்று

கேட்டுக் கொண்டார். கர்த்தர் அனுப்பும் பொழுது வருகிறோம் என்று பதில் கூறினோம்.

இவ்விதமாய் கர்த்தர் மோரீஷியஸில் அற்புதங்களை நடத்திக் கொண்டிருக்கும் பொழுது அன்றிரவிலே, நாளை மறுநாள் நீங்கள் இந்தியாவுக்கு செல்ல வேண்டும். மீண்டும் என்னுடைய காலத்தில் உங்களை இங்கே அனுப்புவேன். தமிழ்நாட்டில் வேலையை தீவிரப்படுத்த வேண்டும் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இந்த செய்தியை சகோதரர் கருணாகரனிடமும், பாஸ்டர் பிளாக் பர்னிடமும் கூறினோம். பாஸ்டர் மிகவும் வருந்தினார். ''உங்களைக் கொண்டு இந்தத் தீவின் பல இடங்களிலும் எழுப்புதல் கூட்டங்கள் நடத்த வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஒரு வாரத்திற்குள் திரும்புகிறீர்களே'' என்று வருந்தினார். அந்த தீவிலுள்ள பிரதம காவல் துறை அதிகாரி ஆச்சி முத்து என்பவர் ''இங்குள்ள விமான நிலையப் பெரிய அதிகாரியே நம்ம பையன் தான். உங்களுக்கு எத்தனை மாதங்கள் வேண்டுமானாலும் இந்த தீவில் தங்கிப் போக நாங்கள் விசா வாங்கித் தர முடியும்'' என்று கூறினார். ''நாங்கள் எங்களுடைய சுயமாய் இந்த தீவுக்கு வரவில்லை. கர்த்தரே எங்களைக் கொண்டு வந்தார்.

இப்பொழுதும், கர்த்தருடைய ஆவியானவரே எங்களை இந்தியாவுக்கு அனுப்புகிறார். எனவே நாங்கள் தேவனுடைய அனுமதியின்றி ஒரு நிமிடங்கூட இங்கே தங்க மாட்டோம்'' என்று கூறினோம். அவர்கள் வேறொன்றும் மறுத்துச் சொல்லவில்லை. எங்களுடைய பிரயாண விவரத்தை அறிந்து கொண்ட அந்த தீவின் அமைச்சரவையில் அன்று பொருளாதார மந்திரியாயிருந்தவருடைய அண்ணன் கோவிந்தசாமி ரிங்காடு என்பவர் ''இன்று எங்கள் வீட்டிற்கு நீங்கள் வரவேண்டும்'' என்று கூறி சகோதரர் கருணாகரனையும் எங்களையும் கார் கொண்டு வந்து அழைத்துப் போனார்கள். இவருடைய துணைவிப் பெயர் ரெங்கநாயகி என்பதாகும். இவர்கள் பயங்கரமான ஒரு வியாதியின் நிமித்தம் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு ஞானஸ்நானம் பெற்று பரிசுத்தாவியைப் பெற்றிருக்கிறார்கள் இவர்கள் வீட்டிற்குச் சென்றதும், ''நீங்கள் நாளை இந்தியா போகவிருக்கிறார்கள். நான் இன்னும் கைக் கொள்ள வேண்டிய சத்தியங்கள் உண்டானால் எனக்குப் போதியுங்கள். நான் அதன்படி செய்கிறேன்.'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

சிறிது நேரம் தேவனிடம் ஜெபித்தேன். ''இவளுடைய புறம்பான அலங்கரிப்பை மாற்றுவதற்கு ஆலோசனை கொடுக்க வேண்டும்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். எஸ்தரின் புஸ்தகத்திலிருந்து சில

காரியங்களை இந்த அம்மாவுடன் பேச தேவன் உதவி செய்தார். ராஜாவாகிய அகாஸ்வேருக்கு ஒரே ஒரு மணவாட்டிதான் தேவை. அதற்காக இந்து தேச முதல் எத்தியோப்பியா தேசம் வரையிலுள்ள 127 நாடுகளிலுள்ள ரூபவதிகளாயிருக்கிற கன்னிப் பெண்களை யெல்லாம் வரவழைத்து சூசான் அரமனையிலுள்ள கன்னி மாடத்திலே ஸ்தீரிகளை காவல் பண்ணும் யேகாயின் வசத்தில் ஒப்படைக்க வேண்டும். இவர்களுடைய சுத்திகரிப்புக்கு வேண்டியவைகள் கொடுக்கப்பட்ட வேண்டும். அப்பொழுது ராஜாவின் கண்களுக்கு பிரியமான கன்னிகை பட்டத்து ஸ்தீரியாக வேண்டும் என்று வேதத்தில் கூறியிருக்கிறது.

இப்படி ஏராளமான கன்னிகைகளின் மத்தியில் எஸ்தர் மாத்திரம் ராஜாவுக்குப் பிரியமானதின் இரகசியம் என்னவென்றால் தன்னைக் காவல் பண்ணுகிற, தன்னை ஆதரிக்கிற இராஜாவின் பிரதானியாகிய யேகாய் என்ன சொன்னாரோ அதன்படி நடந்து அவர் சொன்னபடியே தன்னை அலங்கரித்தபடியால் அந்த அழகு இராஜாவுக்குப் பிரியமாயிருந்தபடியால், எஸ்தர் மாத்திரம் பட்டத்து ராஜ ஸ்தீரியானாள்.

அது போலவே பிதாவாகிய தேவன் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஒரு மணவாட்டியை ஆயத்தம் செய்யும்படி இரட்சிக்கப்பட்டவர்களை (கன்னிகைகள்) யெல்லாம் பரிசுத்தாவியானவரிடம் ஒப்படைத்துள்ளார். இவர்களில் யார் யார் பரிசுத்த ஆவியானவரின் விருப்பத்தின்படி, ஆலோசனையின் படி தங்களை அலங்கரித்துக் கொள்கிறார்களோ, அவர்களே குமாரனாகிய கிறிஸ்துவுக்கு மணவாட்டியாவார்கள்'' என்று கூறி ஸ்தீரிகள் எவ்விதமாய் தங்களை அலங்கரிக்க வேண்டும் என்று பரிசுத்த ஆவியானவர் கூறியுள்ளாரோ (ரோமர் 12:2;1 தீமோ, 3: 9, 10; 1போது 3:3-6) அப்படியே அலங்கரிக்க வேண்டும் என்று கூறி மேற்கண்ட வசனங்களைக் கூறினதும் அவர்களுடைய ஜெர்மன் பைபிளில் இந்த வார்த்தைகள் இருக்கிறதா? என்று பார்த்தார்கள். வசனங்களை வாசித்து உணர்ந்து கொண்டதும், ''இன்றைக்கு என் நேசருடைய வருகை இருக்குமாயின் நான் அவருடைய மணவாட்டியாக அவரோடு செல்ல வேண்டுமே,'' என்று கூறிக் கொண்டே தன்னுடைய ஆபரணங்களை எல்லாம் கழற்றினார்கள். ''உங்கள் கணவரிடமும் அனுமதி பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறினேன்.

உடனே அருகிலிருந்த கணவரிடம் ''தேவனுடைய வசனத்தில் பெண்கள் நகை அணியக் கூடாது என்று எழுதியிருக்கிறது. ஆகையால் நான் என்னுடைய நகைகளை கழற்றி விடுவதில் உங்களுக்கு கவலையில்லையே என்று மிகவும் தாழ்மையாக தன்னுடைய கணவனிடம்

கேட்டார்கள். வேத வசனத்தில் அவ்வாறு எழுதப்பட்டிருந்தால் அப்படியே செய்ய வேண்டும் என்று கணவனாரும் கூறினார். அந்த அம்மா மிகவும் மகிழ்ச்சியோடு தன்னுடைய எல்லா நகைகளையும் கழற்றி தன்னுடைய கணவனிடம் கொடுத்து விட்டார்கள்.

கர்த்தருடைய வசனம் இத்தனை வல்லமையாய் இந்நாட்களில் கிரியை செய்ததற்காக என் தேவனை ஸ்துதித்தேன். அங்குள்ள வாலிபர்கள் தங்களுடைய பெற்றோர்களுக்கு தமிழில் சுவிஷேசம் சொன்னால் மனந்திரும்புவார்கள். ஆகையால் நீங்கள் எங்கள் தீவிலேயே தங்க வேண்டும். நாங்கள் அதற்கான சகல ஏற்பாடுகளையும் செய்து தருவோம் என்று கூறினார்கள். அநேக வயது முதிர்ந்த தமிழ் பேசும் பெரியவர்களுக்கு தமிழ் மொழியில் தேவனுடைய அன்பை குறித்து சாட்சி சொன்ன போது மிகவும் ஆச்சரியமாய் கேட்டார்கள். அநேகர் மனிந்திரும்பி இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

தேவன் குறித்திருந்த நாளில் இந்தியா திரும்ப விமானம் ஏறிவிட்டோம். பிரயாணத்தில் தேவன் எங்களோடு கூடவே இருந்து எங்களை பாதுகாத்துக்கொண்டு வந்து சேர்த்தார். நாங்கள் மோரீஷியஸ் போய் சேர்ந்ததும் அங்குள்ள விபரங்களை ஒவ்வொரு நாளும் கடிதம் மூலம் தலைமை மேய்ப்பருக்கு (பம்பாய்க்கு) தெரியப்படுத்திக் கொண்டேயிருந்தோம். தேவன் திடீரென்று பம்பாய்க்கு புறப்படச் சொல்லி விட்ட படியால் தலைமை மேய்ப்பருக்கு தந்திகொடுத்து விட்டு நாங்கள் புறப்பட்டோம். நாங்கள் எழுதிய லெட்டர்களும், தந்தியும் தலைமைக்கு வந்து சேரவில்லை. பம்பாய் சாந்தா குரூஸ் விமான நிலையத்தில் நாங்கள் வந்து இறங்கின பொழுது, அங்கு எங்களை வரவேற்க யாரையும் காணோம்.

அன்று சனிக்கிழமையாக இருந்தது. நாங்கள் உடனே ஒரு வாடகைக் கார் ஒன்று பிடித்து வீட்டிற்கு வந்தோம். இரவு சுமார் 8 மணி இருக்கும். உபவாச ஆராதனை நடந்து கொண்டு இருந்தது. ஒரு சகோதரர் ஆண்டவரே எங்கள் ஊழியர்கள் மோரீஷியசுக்கு போனார்கள். ஒரு தகவலும் இல்லை. அவர்களைப் பாதுகாத்து பத்திரமாய் அழைத்து வாரும் என்று விண்ணப்பம் செய்தார். நாங்களும் எங்கள் பெட்டிகளை அமைதியாக வைத்து விட்டு அவர்களோடு ஜெபத்தில் கலந்து கொண்டோம். நாங்களும் ஜெபிக்க ஆரம்பித்த பொழுது எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். ஆராதனை முடிந்ததும் தேவன் நடப்பித்த அற்புத செயல்களை சாட்சியாக கூறி தேவனை மகிமைப்படுத்தினோம்.

அத்தியாயம் 8

# மரித்தவன் உயிரோடு எழும்பினான்

பம்பாயிலிருந்தும் அவசரமாக எங்களைத் தேவன் தமிழ்நாட்டிற்கு அனுப்பினார். வள்ளியூர் வந்து சேர்ந்தோம். மறுநாள் அதிகாலையில் என்னுடைய குடும்பம் மகிழ்ச்சிபுரத்தில் இருந்ததால் நான் ஆவியானவருடைய அனுமதியோடு அங்கு சென்றேன். வீட்டில் சென்று ஜெபித்தேன். வீட்டு வாசலில் ஒரு சகோதரியின் அழுகை சத்தத்தை கேட்டேன். யாரென்று வெளியே வந்து பார்த்தேன். ஒரு சகோதரி அவர்களுடைய கணவன் ஏற்கனவே இரட்சிக்கப்பட்டவர். இந்த சகோதரியினால் அவர் பின்மாறிப் போனார்.

இப்பொழுது காலரா வியாதியில் அவருக்கு உயிர் ஊசலாடுகிறது. நீங்கள் வந்து ஜெபிக்க மாட்டீர்களா? என்று கேட்டது. சரி வருகிறேன், என்று கூறி பைபிளைக் கையில் எடுத்துக் கொண்டு ''ஆண்டவரே! பின்மாறிப் போனவனுக்காக நான் ஜெபிக்கலாமா?'' என்று கேட்டேன். இதற்காகத்தான் உங்களை மோரீஷியஸிலிருந்து ஊருக்கு அழைத்து வந்தேன் அவனுடைய ஆத்துமா அவனைவிட்டு பிரிந்துவிட்டது அவன் இறந்துபோனான் அவனுடைய ஜீவன் மீண்டும் அவனுக்குள் வரும்படி ஜெபம்பண்ணு நான் அவனுக்கு ஜீவனைகொடுப்பேன்,'' என்று ஆண்டவர் பேசினார். ''ஆண்டவரே! வியாதியஸ்தர்களுக்கு உம்முடைய நாமத்தினால் கைகளை வைத்து ஜெபித்ததினால் சுகம் கிடைக்கிறது. ஆனால் மரித்துபோனவர்களுக்காக எப்படி ஜெபிக்க வேண்டும்?'' என்று கேட்டேன். ''அந்த சகோதரனுடைய காதில் உன் வாயை வைத்து அவன் பெயரை சொல்லி உரத்தசத்தமாய் கூப்பிடு உன்னிலிருந்து வல்லமை புறப்பட்டு அந்த பாடியில் ஜீவன் உன்டாகும்'' என்று ஆண்டவர் பேசி சொன்னார். அந்தபடி சகோதரனுடைய காதில் என்னுடைய வாயை வைத்து உரத்த குரலில் 'ஜெயபாண்டி' என்று கூப்பிட்டேன். உடனே கண்கள் இரண்டும் ஒரு நிமிடம் திறந்து மீண்டும் மூடிக்கொண்டது. பார்த்துக் கொண்டிருந்த எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சில வினாடிக்குள் சகோதரன் எழும்பி விட்டார். இதன்பின்பு இவருடைய துணைவியும் மனந்திரும்பி கர்த்தரை ஏற்றுக் கொண்டது. கர்த்தருடைய பரிசுத்த நாமத்துக்கே மகிமையும் கனமும் சதாகாலங்களிலும் உண்டாவதாக!

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே! கர்த்தர் பெரியவர், அவர் வல்லமையுள்ளவர். ஒவ்வொருவரும் தேவனை எந்த அளவுக்கு அநுபவிக்கிறார்களோ அந்த அளவுக்கே தேவனை அறிந்து கொள்ளமுடியும்.

வியாதி வரும் பொழுது பரம வைத்தியராகவும், பஞ்சகாலம் ஏற்படும் பொழுது பரலோக மன்னாவாகவும், பகைவர்கள் சூழம் பொழுது அக்கினி மதிலாகவும் நம்மைக் காக்கிறார். அவருக்கே என்றென்றும் மகிமையுண்டாவதாக.

## "துன்மார்க்கர்கள் மத்தியில் கொண்டுபோவேன்"

நானும், உடன் ஊழியருமாக ஓர் நாள் ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது : ''உங்களை துன்மார்க்கர்களின் மத்தியில் கொண்டு போவேன்; அங்கே என்னுடைய வல்லமை வெளிப்படுவதை காண்பீர்கள்'' என்று தேவன் பேசினார்.

அப்படியே சில மாதங்கள் கடந்த பின்பு ஜெபத்தில் இருக்கும் பொழுது, ''நாளை காலையில் இங்கிருந்து புறப்பட்டு திருவனந்தபுரம் சென்று, அங்கிருந்து விமான நிலையம் சென்று மீண்டும் இன்னின்ன அடையாளம் உள்ள வழியாகக் கடந்து போய் நான் காண்பிக்கும் இடத்திலே என்னுடைய வார்த்தைகளைப் பேச வேண்டும். அங்கே என்னுடைய மகிமையை வெளிப்படுத்துவேன்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

தேவன் காட்டிய அடையாளங்களை குறித்துக் கொண்டு நானும் உடன் ஊழியருமாக மறுநாள் காலையில் நாகர்கோயில் போய் அங்கிருந்து திருவனந்தபுரம் சென்றோம். அங்கிருந்து விமான நிலையம் செல்லும் பஸ்ஸில் ஏறி அங்கு போய் இறங்கினோம். மழை பயங்கரமாய் பெய்து கொண்டிருந்தது. அங்கிருந்து நாங்கள் தொடர்ந்து செல்லக்கூடிய பாதையின் அடையாளங்களை குறித்து வைத்திருந்த டைரியைத் திறந்து பார்த்து சரியான அடையாளங்களை அறிந்து கொண்டு கொட்டும் மழையில் குடைகளைப் பிடித்துக் கொண்டு நடந்தோம். எங்கள் உடுப்புகளெல்லாம் நன்றாக நனைந்து விட்டது. தேவன் காட்டிய அடையாளத்தின் படியுள்ள இடத்தை பல மைல் தூரம் நடந்து போய் கண்டு பிடித்தோம். இப்பொழுது நேரம் மாலை சுமார் 5 மணியாகி விட்டது.

நாங்கள் ஒரு ஏரியாவுக்குள் சென்று அங்குள்ள மக்களுக்கு சுவிஷேத்தை அறிவிக்க வேண்டும் என்று கடந்து போகும் பொழுது ஒரு வாலிபன் ஓடி வந்து எங்களை மறித்துக் கொண்டு, ''நீங்கள் எங்கேயிருந்து வருகிறீர்கள்? உங்களுடைய சொந்த இடம் யாது? எதற்காக இங்கே வந்தீர்கள் என்றெல்லாம் கேள்வி கேட்டார். நாங்கள் அவரிடம் சாந்தமாக நாங்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரர்கள். நாங்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிவிக்க வந்தோம். எங்கள் சொந்த இடம் நெல்லை ஜில்லா என்று கூறினோம்.

அதற்குள் இன்னொரு வாலிபனும் அங்கு வந்தான். உங்களைப்

பார்த்தால் போதகர்கள் போல் தெரியவில்லை. நக்சலைட்டுகள் போல் காணப்படுகிறது. ஆகையால் உங்கள் உடமைகளை நாங்கள் பரிசோதிக்க வேண்டும்'' என்றார்கள். ''எங்கள் தோற்றத்தைப் பார்த்தாவது நீங்கள் எங்களை யார் என்று தெரிந்துக் கொள்ளக் கூடாதா?'' என்றோம். ''சரி, அப்படியானால் அதோ அந்த இடத்தில் எங்கள் ஆட்கள் இருக்கிறார்கள். நீங்கள் அங்கே வாருங்கள். உங்களை பரிசோதனை செய்து விட்டு அனுப்பி விடுகிறோம்'' என்றார்கள். அவர்கள் காட்டிய திசையை நோக்கிப் பார்த்தோம். அங்கே சுமார் 20க்கும் அதிகமான வாலிபர்கள் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். ''நாங்கள் அங்கே வரமுடியாது எங்களைப் போக விடுங்கள்'', என்று சொல்லி பேசிக் கொண்டிருந்த பொழுது ஒரு பெரியவர் தூரத்திலிருந்து ஓடி வந்தார்.

நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு அருகாமையில் ஒரு ஓலைக் குடிசை இருந்தது. அந்தப் பெரியவர் அந்தக் குடிசைக்கு சொந்தக்காரர் போல் தெரிந்தது. அவர் வந்து, ''தம்பிமார்களே! தயவு செய்து என்னுடைய வீட்டு முன்னே வச்சி கொலை செய்திடாதீங்க, வேண்டுமானால் வேறு எங்கேயும் கொண்டு போங்கள்'', என்று பதறிப் போய் கூறினார். அப்பொழுது தான் சில மாதங்களுக்கு முன்பாக ''துன்மார்க்கர்களின் மத்தியில் கொண்டு போய் என்னுடைய வல்லமையை வெளிப்படுத்துவேன்'' என்று தேவன் வெளிப்படுத்திய செய்தி ஞாபகத்திற்கு வந்தது. சரி இனி என்ன நடக்கிறதென்று பார்க்கலாம் என்று எண்ணிக் கொண்டோம்.

இப்படி நடக்கவே தூரத்தில் காணப்பட்ட கூட்டத்திலிருந்து இரண்டு வாட்ட சாட்டமான மனிதர்கள் ஓடி வந்தார்கள். வந்ததும் ஏற்கனவே எங்களோடு வாதாடிக் கொண்டிருந்த இரண்டு வாலிபர்களுக்கும் உரத்த குரலில், ''ஏண்டா? நோக்கிக் கொண்டு நிக்கேள் தூக்கிக் கொண்டு அவ்விடே வரட்டே'' என்று கூறினதும் எங்கள் கரங்களிலிருந்து குடைகள், கைப்பைகள் ஆகிய பொருள்களை முதலாவது பறித்து எடுத்து அந்த குண்டர்களிடம் கொடுத்து விட்டு முந்திய இரு வாலிபர்களும், எங்கள் இருவரையும் கட்டிப்பிடித்து தூக்கினார்கள்.

எங்களைப் போல நான்கு பேர்களை வேண்டுமானாலும் அவர்கள் தூக்கிக் கொண்டு போக முடியும். ஆனால்! அவர்களால் எங்களை தூக்க முடியவில்லை. நாங்கள் கண்களை மூடிக் கொண்டு இருவரும் கர்த்தரை ஸ்தோத்தரித்துக் கொண்டே நின்றோம். எங்கள் வாயிலிருந்து கர்த்தர் பேசினார். என்ன பேசினார் என்பதை நாங்கள் அறியோம்.

அடுத்து என்ன சம்பவிக்குமோ என எண்ணி உள்ளம் ஒரு வகையில் கலங்கின போதிலும், கர்த்தருடைய ஆவியானவர் எங்களுக்குள்ளிருந்து பேசி

எங்களைத் தைரியப்படுத்திக் கொண்டிருந்தார். ''நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை'' என்கிற ஆறுதலான வார்த்தைகள் எங்கள் உள்ளத்தை தேற்றிக் கொண்டே இருந்தது. இதற்கிடையில் குண்டர்களின் கூட்டம் அதிகமாகி விட்டது.

தூக்கினவர்கள் எங்களைத் தரையை விட்டு மேலே தூக்குவதற்கு எங்களை அங்குமிங்கும் நன்றாக அசைத்தார்கள். பரிசுத்த ஆவியானவர் எங்களை வல்லமையாய் ஆட்கொண்டிருந்தார். எங்கள் கால் தரையிலிருந்து ஒரு இஞ்சு உயரங்கூட மேலே எழும்பவில்லை. தூக்கினவர்கள் களைத்துப் போனார்கள். யாவரும் எங்கள் முகங்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று அவர்களில் ஒருவன் முன்னுக்கு வந்து, ''டேய், இனி அவர்களை ஒண்ணும் செய்யாதே! நிறுத்துங்கள்'' என்று கூறினதும் எங்களைத் தூக்கப் பிரயாசப்பட்டவர்கள் நிறுத்தி விட்டார்கள். எங்களிடமிருந்து பறித்துக் கொண்ட பொருட்களையெல்லாம் எங்களிடம் தந்து, ''தயவு செய்து எங்களை மன்னித்து விடுங்கள். எங்கள் ஏரியாவை விட்டு நீங்கள் போய்விட வேண்டும். ஏதோ தெரியாமல் இப்படி செய்து விட்டோம். இப்படி நடந்ததாக நீங்கள் போலீஸில் தெரியப்படுத்தக் கூடாது'' என்று எல்லோரும் கைகூப்பி வேண்டிக் கொண்டார்கள். 'கர்த்தர் உங்களை மன்னிப்பார்' என்று கூறி நாங்கள் திரும்பி வந்தோம்.

அவர்கள் எல்லையை விட்டு நாங்கள் கடந்து வரும் வரையில் எங்கள் பின்னாலேயே வந்தார்கள். நாங்கள் மீண்டும் திருவனந்தபுரம் வருவதற்காக ஒரு பஸ் ஸ்டாப்பில் நிற்கும் பொழுது இருட்டி விட்டது. அங்கே ஒரு பெரியவர் எங்களைப் பார்த்ததும் நாங்கள் வேறு இடத்தை சேர்ந்தவர்கள் என்பதை கண்டதும், அவர் மிகவும் பதட்டத்துடன் கூறினார். ''நீங்கள் ஏன் இந்த இடத்தில் இவ்வளவு நேரத்துக்கு பின் நிற்கிறீர்கள்? இந்த இடம் ரொம்ப பயங்கரமான இடமாகும். உங்களிடம் 25 பைசா இருப்பதைக் கண்டால் அதை எடுத்துக் கொள்வதற்காக உங்கள் தலையையே அறுத்து விடுவார்களே, சீக்கிரமாய் திருவனந்தபுரம் சென்று விடுங்கள்,'' என்று அவர் கூறினார்.

இந்த இடத்தில் இருப்பவர்கள் அரசாங்கத்தால் தண்டித்து திருத்த முடியாத ஒரு கூட்டத்தார். இவர்கள் இரவிலே கொலை, கொள்ளை இதையே செய்வார்கள். இதுவே இவர்கள் தொழில் என்று அந்த பெரியவர் கூறினார். கர்த்தர் எங்களை பாதுகாப்பதற்காக செய்த மகத்துவ கிரியைகளை அறிந்து கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

''இஸ்ரவேலைப் பாரமான கல்லாக்குவேன் என்ற கன்மலையாகிய

கிறிஸ்து எங்களோடிருந்து எங்களையும் அன்றைய தினம் பாரமான கற்களாக மாற்றினார். அவருக்கே மகிமையுண்டாவதாக!''

''..... காண்டாமிருகத்துக்கொத்த பெலன் அவர்களுக்கு உண்டு'' எண். 23:22

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே! நம்முடைய தேவன், நித்தமும் நம்மைப் போதிக்கிறவர். ஆம், ''நான் உனக்குப் போதித்து நீ நடக்க வேண்டிய வழியை உனக்கு காட்டுவேன், உன் மேல் என் கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்'' என்று சொன்னவர் தொடர்ந்து ஆலோசனைக்காராகவே இருந்து வருகிறார். அவருக்கே கனமும் மகிமையும் உண்டாவதாக.



அத்தியாயம் 9

# டேராடூனில் கர்த்தரின் ஊழியம்

நம்முடைய சகோதரர் ஒருவர் பெயர் பால்மணி, இவருடைய சொந்த ஊர் குமரி மாவட்டத்தில் உள்ள ஆலங்கோட்டை, இவர் இந்திய இராணுவத்தில் பணிபுரிந்து வந்தார். இவர் இமயத்தின் அடிவாரத்தில் டேராடூன் என்ற இடத்தில் பணி புரிந்து கொண்டிருந்த சமயம் இவரோடு சேர்ந்து இராணுவத்திலுள்ள பல கிறிஸ்தவர்கள், பல மாநிலத்திலிருந்து அங்கு வந்தவர்கள் கூடி இறைவனை ஆராதித்து வந்தார்கள்.

இவர்களுக்கு வேளா வேளைகளில் ஒரு போதகர் வந்து வேத வசனங்களைப் போதிப்பது வழக்கம். ஒரு நாள் அந்தப் போதகர் வந்து வேத வசனங்களைப் புரட்டி போதிப்பதைக் கண்ட நமது சகோதரர் பாலமணி என்பவர் ஆராதனை முடிந்ததும், அந்த போதகரிடம் ''ஐயா, தாங்கள் போதித்த வேத வாக்கியத்தின் கருத்து இப்படியல்லவா? நீங்கள் அதை மாற்றிப் போதித்தீர்களே'' என்று கேட்டிருக்கிறார். அவர் உடனே ஆத்திரம் அடைந்து ''உங்களுக்குத் தான் வேதம் தெரியுமே, நான் இனி உங்களுக்குப் போதிக்க வரவேண்டியதென்ன? நான் இனி இங்கே வரமாட்டேன்'' என்று கூறி விட்டு போய் விட்டார்.

இதைக் கண்ட அங்குள்ள மக்கள் ''சகோதரனே, நீர் எங்களுக்குப் போதகராயிருந்து நீர் அறிந்த சத்தியத்தை எங்களுக்குப் போதிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். நான் ஒரு விசுவாசிதான். நான் போதகன் அல்ல, ஆகையால் நான் போதகருடைய வேலையைச் செய்யக் கூடாது. நீங்கள் விரும்பினால் எங்கள் போதகர்கள் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள்.

அவர்களுக்கு நாம் கடிதம் எழுதினால் அவர்கள் வந்து நமக்கு ஆலோசனை தந்து நம்மை தொடர்ந்து கிறிஸ்துவுக்குள் வழி நடத்தி தகுந்த வழிகாட்டுவார்கள் என்பதாக சகோதரர் பால்மணி கூறியிருக்கிறார். இந்த ஆலோசனை எல்லாருக்கும் நலமாய் தோன்றினபடியால் ''சரி, சகோதரரே, அப்படியானால், நீங்கள் உடனே அவர்களுக்கு கடிதம் எழுதுங்கள்'' என்று கூறியுள்ளார்கள்.

அதே நாள் இரவில் நாங்கள் வள்ளியூரில் கூடி ஜெபித்துக் கொண்டிருந்த வேளையில் : ''சகோதரன் பால்மணியுடன் சிலர் கூடி எனக்கு ஆராதனை செய்கிறார்கள். அவர்கள் என்னுடைய சத்தியத்தை விரிவாய் அறிந்து கொள்வதற்காக உங்களை அழைக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். சீக்கிரமாய் அங்கு வரப்போகிறோம் என்று அவர்களுக்கு கடிதம் எழுதுங்கள். நான் உங்களை அங்கே அழைத்துப் போய் என்னுடைய

நாமத்தை மகிமைப்படுத்துவேன்'' என்று தேவனாகிய கர்த்தர் எங்களோடு பேசினார்.

மறுநாள் காலையில் சகோதரர் பால்மணிக்கு கர்த்தருடைய ஆவியானவர் வெளிப்படுத்தின செய்தியை நாங்கள் அவருக்கு எழுதினோம். இந்தக் கடிதத்தை அங்குள்ள விசுவாசிகள் எல்லோரும் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டு, ''நாம் இங்கேப் பேசிக் கொண்ட காரியங்களைக் கர்த்தர் அவர்களுக்கு வெளிப்படுத்தி விட்டாரே, அன்று கொர்நேலியு வீட்டிற்கு போக வேண்டும் என்று பேதுருவோடு பேசினது போல் இந்நாட்களிலும் கர்த்தர் பேசுகிறாரே, அப்படியானால் உங்கள் ஊழியர்களை உடனே இங்கு வரும்படி பிரயாண செலவுக்கு பணம் அனுப்புவோம்'', என்று விசுவாசிகள் எல்லோரும் சேர்ந்து நாங்கள் டேராடுன் செல்வதற்காகப் பயணச் செலவுக்கான பணத்தை மணியார்டர் மூலம் அனுப்பிக் கொடுத்தார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

அவர்கள் பணம் அனுப்பி தந்தவுடன் நாங்கள் பிரயாணப்படவில்லை. காரணம் நாங்கள் புறப்படவேண்டிய தேதியைக் கர்த்தர் குறிப்பிடவில்லை. ''கர்த்தர் அனுப்பும் நாளில் உங்களிடம் வருகிறோம்'' என்று அவர்களுக்கு கடிதம் எழுதி விட்டோம். சுமார் மூன்று மாதங்களுக்கு பின்பு தான் கர்த்தர் எங்களை டேராடுனுக்குப் புறப்பட அனுமதித்தார். இதிலும் ஒரு அற்புதம் நடப்பிக்க தேவன் விரும்பி எங்களை தாமதாக அனுப்பியுள்ளார் என்பதை அங்கு போன பிறகு நாங்கள் அறிந்து கொண்டோம்.

அங்குள்ள விசுவாசிகள் கூடிப் பேசிக் கொண்ட காரியங்களை 'நெல்லை மாவட்டத்திலிருந்த எங்களுக்குத் தேவன் வெளிப்படுத்தியுள்ளார் என்கிற செய்தியானது அங்குள்ள இராணுவ அதிகாரிகளுக்கும் தெரியவரவே, எங்களுடைய வரவை எதிர்பார்த்து எங்களை வரவேற்பதற்காக, சகோதரர் பால்மணியுடன் சில ராணுவ வீரர்களும் இராணுவ உடையுடன் இராணுவ வாகனத்தில் கிளைமிங் டவுனிலிருந்து டேராடூன் புகைவண்டி நிலையத்துக்கு வந்திருந்தார்கள். நாங்கள் இறைவன் இயேசுவின் திருத்தொண்டர்கள் என்பதை அறிந்து கொண்ட அவர்கள் எங்களுக்கு இறை மரியாதை செய்து அழைத்து சென்றார்கள்.

நாங்கள் சேரவேண்டிய இடத்திற்குப் போய் சேர்ந்த பின்பு சகோதரர் பால்மணி கூறினார், ''போன மாதம் வந்திருந்தால் எல்லா விசுவாசிகளையும் சந்தித்திருக்கலாம். இப்போது இராணுவத்தினர் உடற்பயிற்சிக்காக வெளியிடம் சென்று விட்டார்கள். திரும்பிவருவதற்கு இன்னும் ஒரு மாத காலமாகும்,'' என்பதாக கூறினார். எங்களுக்கு சிறிது கவலையாகத் தோன்றினாலும்,

''கர்த்தர் எங்களை இந்த நாட்களில் தான் அனுப்பினார், அவருடைய சித்தம் செய்து விட்டு நாங்கள் செல்லுவோம்'' என்பதாக கூறினோம்.

சில இராணுவ அதிகாரிகளும், இராணுவ வீரர்களும் முகாமில் தங்கியிருந்தார்கள். இராணுவ அதிகாரிகள் எங்களைப் பார்க்க வேண்டும் என்று விரும்பி எங்களை முகாமிற்குள் அழைத்திருந்தார்கள். நாங்கள் அதிகாரிகளுடைய அறைக்குள் சென்றதும், அதிகாரிகள் யாவரும் எழுந்து நின்று எங்களுக்கு மரியாதை செய்த காட்சியை நினைக்கும் பொழுது, அன்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை சுமந்து சென்ற கழுதையின் பாதங்கள் தரையில் படாதபடி தங்கள் வஸ்திரங்களை எல்லாம் வழியில் விரித்தார்கள் என்ற சம்பவமே எனக்கு ஞாபகத்திற்கு வந்தது.

அந்த அதிகாரிகள் எங்களுடைய அழைப்பு பற்றியும், இறைவனிடம் நாங்கள் எப்படி உறவாடுகிறோம் என்பது பற்றியும் எங்களிடம் கேட்டார்கள், நாங்கள் அவர்களுக்கு தேவ அழைப்பைப் பற்றி விளக்கமாய் கூறினோம். நீங்கள் எவ்வளவு நாட்கள் இங்கே இருப்பீர்கள்,'' என்று கேட்டார்கள். ''எத்தனை நாட்களென்று எங்களால் சொல்ல இயலாது. கர்த்தர் அனுப்பும் பொழுது நாங்கள் போய்விடுவோம்,'' என்பதாகக் கூறினோம்.

''நீங்கள் கொஞ்ச நாட்களுக்கு முன்பு வந்திருந்தால் உங்கள் பிரயாணம் பிரயோஜனமாயிருந்திருக்கும்'' என்று மற்றொரு அதிகாரி கூறினார். நாங்கள் சுயமாய் எங்கும் செல்ல மாட்டோம் என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள். அவர்களுக்காக வேண்டுதல் செய்து விட்டு நாங்கள் இரவில் தங்கும் விடுதிக்கு சென்று விட்டோம்.

நாங்கள் அதிகாரிகளுடைய அறையை விட்டு வெளியே வந்த சில வினாடிக்குள்ளாக உடற்பயிற்சிக்காக (Exercise) சென்றிருந்த இராணுவ வீரர்களிடமிருந்து தொலைபேசி மூலமாக செய்தி வந்திருக்கின்றது. ''நாங்கள் தங்கியிருக்கும் இடத்தில் பயங்கரமான குளிராய் இருப்பதால் தொடர்ந்து பயிற்சி எடுக்க முடியாது. எனவே நாளை மாலைக்குள்ளாக இராணுவம் கிளைமிங் டவுனுக்கு வந்துவிடும்'' என்பதாக செய்தி வந்துள்ளது!

இந்த செய்தியைக் கேட்டதும் அங்கிருந்த அதிகாரிகளுக்கு மிகுந்த ஆச்சரியம்! ஒரு தடவையும் பயிற்சி காலத்தைப் பாதியில் நிறுத்தி விட்டு இராணுவத்தினர் வந்தது கிடையாது. இந்த ஆண்டில் இது விசேஷமாய் காணப்படுகிறது. இங்கே தேவனுடைய ஊழியர்கள் வந்திருப்பதால், அந்த தேவனே இராணுவ வீரர்களை நாளைக்கு அழைத்து வருகிறார். இது மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறதே! என்று ஒருவரோடொருவர் பேசியிருக்கிறார்கள்.

மறுநாள் அதிகாலையில் ஒரு அதிகாரி சகோதரர் பால்மணியை

அழைத்து, ‘‘உண்மையாகவே நம் மத்தியில் வந்திருப்பவர்கள் தேவனுடைய மனிதர்கள். அவர்களை தேவனே நமது மத்தியில் அனுப்பியிருக்கிறார் என்பதை அதிகாரிகள் எல்லோரும் நம்புகிறார்கள்’’ என்பதாக கூறினார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக, நாங்கள் வெள்ளிக்கிழமை மாலையில் அங்கு போய் சேர்ந்தோம். மறுநாள் சனிக்கிழமை மாலைக்குள்ளாக எல்லா இராணுவத்தினரும் வந்து சேர்ந்து விட்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

கர்த்தருக்குள் பிரியமானவர்களே, நம்முடைய தேவனின் அற்புத செயல்களை எண்ணி அவரை ஸ்தோத்தரிக்கிறேன். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை, அவர்கள் வழக்கமாய் ஆராதித்துக் கொண்டிருக்கும் இடத்துக்கு அங்குள்ள கிறிஸ்தவ மக்கள் திரளாய் வந்து சேர்ந்தார்கள். நாங்களும் குறித்த வேளையில் கலந்து கொண்டோம். ‘‘விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்’’ (ரோமர் 1:7) என்ற வசனத்தைக் கொண்டு பேசும்படி தேவன் கட்டளையிட்டார். விசுவாசத்தினாலே தேவனிடத்திலிருந்து எப்படிப்பட்ட ஆசீர்வாதங்களையெல்லாம் பெறமுடியும். கடந்த காலத்தில் பரிசுத்தவான்கள் எப்படி பெற்றார்கள் என்பதை வேதவாக்கியங்களை கொண்டும், எங்களுடைய ஊழியக்காலத்தில் தேவன் நடப்பித்த அற்புத செயல்களை விளக்கியும் பேசின பொழுது விசுவாசித்தவர்களுடைய உள்ளங்கள் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. சோர்ந்திருந்த உள்ளங்களை தேவன் திடப்படுத்தினார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

இவர்களில் பலர் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்றார்கள். அபிஷேகம் பெற்றவர்களில் ஒரு சகோதரரைக் கர்த்தர் தம்முடைய ஊழியம் செய்ய அழைத்தார். இவர் தஞ்சாவூர் பக்கமுள்ள புதுக்கோட்டையைச் சேர்ந்தவர். இவர் உடனடியாகத் தேவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படித்து மறுநாளில் ஞானஸ்நானமும் பெற்றுக் கொண்டார். இவர் பெயர் அங்கப்பன். இப்பொழுது இவர் வட இந்தியாவில் கர்த்தருடைய சேவையைச் செய்து வருகிறார்.

சகோதரர் அங்கப்பனை சபையின் மூப்பனாக அதிகாரப்படுத்தி அங்குள்ள மக்களை கர்த்தருக்குள் வழிநடத்தும்படி ஆலோசனை கூறி கர்த்தருக்கும், அவருடைய கிருபையுள்ள வசனத்துக்கும் அவர்களை ஒப்படைத்துவிட்டு கடந்து வந்தோம்.

பின்னர் அடுத்த ஆண்டு டிசம்பர் திங்களில் மீண்டும் டேராடூன் சென்று அங்குள்ள மக்களைப் பெலப்படுத்த வேண்டும் என்று கர்த்தர் எங்களை அனுப்பினார். டேராடூனில் ரூம் எடுத்துப் பொருட்களை வைத்துவிட்டு

ஊழியர் அங்கப்பனோடு சுமார் 6.கி.மீ. தொலைவிலுள்ள ராணுவ முகாமை சந்திக்கப் போனோம். தேவனுடைய பிள்ளைகள் யாவரும் கர்த்தருக்குள் உற்சாகமாய் காணப்பட்டார்கள். இவர்களுடைய விசுவாசத்தின் வளர்ச்சியின் மூலம் அநேக குடும்பங்கள் கிறிஸ்துவினிடமாய் சேர்க்கப்பட்டிருந்ததை அறிந்து கர்த்தரை ஸ்தோத்தரித்தோம்.

உத்தரப்பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம் விக்கிரகத்தை ஆராதித்து வந்தவர்கள். பில்லி சூனியக் கட்டினாலும், அசுத்த ஆவியினாலும் தாக்கப்பட்டு, குழந்தைகளை சாகக் கொடுத்து, பிள்ளையின் தாயாருக்கு பைத்தியம் போன்ற நிலையும் உருவாகி வேதனைப்பட்டுக் கொண்டிருந்த குடும்பத்துக்கு நமது விசுவாசிகள் ஆலோசனைக் கூறி ''கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை நீங்கள் உங்கள் தெய்வமாக ஏற்றுக் கொண்டால், அவர் உங்களுடைய குடும்பத்தில் காணப்படும் சாபங்களை போக்கி, உங்கள் கண்ணீரை அவர் துடைத்து விடுவார்'' என்று கூறியிருக்கிறார்கள்.

வேதனையோடு வாழ்ந்த அந்த குடும்பத்தினர் தாங்கள் வணங்கி வந்த விக்கிரகங்களை வீட்டை விட்டு அப்புறப்படுத்தி விட்டு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தங்களுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்கள். என்ன அற்புதம்! அற்புத நாதர் இயேசு கிறிஸ்து அந்த மக்களின் கண்ணீர்கள் யாவையும் துடைத்து விட்டார்.

ஆம், இயேசு கிறிஸ்து நேற்றும், இன்றும், என்றும் மாறாதவர். அன்று ஆகாரின் கண்ணீரையும், நாயினூர் விதவையின் கண்ணீரையும், மார்த்தாள், மரியாள் ஆகியோரின் கண்ணீரையும் மாற்றினவர், இன்றைக்கும் அவரை உண்மையாய் தேடுகிற யாவருடைய கண்ணீரையும் மாற்றுவதற்கு அவர் போதுமானவராகவே இருக்கிறார்.

மேற்படி குடும்பத்தாருக்கு இரட்சிப்பின் சுவிஷேத்தை அறிவிக்க தேவன் உதவி செய்தார். மற்றுமொரு சகோதரி கோயில்பட்டி அருகேயிருந்து சென்ற மாதம் குழந்தைகளுடன் இங்கே அவருடைய கணவனிடம் வந்திருந்தார்கள். சில நாட்களுக்குள்ளாக அந்த சகோதரியை அசுத்த ஆவி தாக்கி மிகவும் கஷ்டப்படுத்தியிருக்கிறது. ''நாங்கள் உங்களுக்கு கடிதம் எழுதி உங்களை வரவழைத்தால் நல்லதென்று அந்த சகோதரியின் கணவனிடம் கூறினோம். அவரும் சரி, அதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறேன் என்று கூறினார், அதற்குள்ளாக கர்த்தர் உங்களையே இங்கு அனுப்பிவிட்டாரே'' என்று நமது சகோதரர்கள் ஆச்சரியப் பட்டார்கள். அந்த அசுத்த ஆவி பிடித்த சகோதரியின் வீடு எந்த பக்கம் இருக்கிறதென விசாரித்தோம். ''நீங்கள் இனி அடுத்து சந்திக்கப் போகிற நமது விசுவாசியின் வீட்டுக்கு எதிர் வீடு தான்''

என்றார்கள். ''சரி அப்படியானால் நாம் அவர்களுக்காக ஜெபிக்கலாம். அவர்கள் விசுவாசித்தால் தேவன் அவர்களுக்கும் இரக்கம் செய்வார்'' என்று கூறி விசுவாசிகளுடன் நாங்கள் சந்திக்க வேண்டிய ஒரு விசுவாச குடும்பத்துக்குப் போனோம். நாங்கள் அந்த வீட்டினுள் பிரவேசித்ததும், எதிர் வீட்டிலிருந்து ஒரு சகோதரி தலைவிரிகோலமாக ஐயா! என்று அலறிக் கொண்டு எங்களை நோக்கி ஓடி வந்து எங்கள் முன்பாக வந்து விழுந்து விட்டது.

இந்த சகோதரியின் அலறல் சத்தம் கேட்டு பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் ஓடி வந்து விட்டார்கள். எதிர் வீட்டிற்குள் ஓடுகிறாளே என்ன ஆகுமோ என்று கலக்கத்தோடு கணவனும் பின்னாலே ஓடிவந்தார். இந்த சகோதரி எங்கள் முன்னால் வந்து விழுந்ததும் ''இதுதான் அந்த அசுத்த ஆவி தாக்கின சகோதரி'' என்று சகோதரர்கள் கூறினார்கள். சில விநாடிகளுக்குள் அந்த சகோதரி மயக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தது. தலைமுடிகளைச் சரிசெய்து கொண்டு எங்களைப் பார்த்து, ''ஐயா! ஸ்தோத்திரம்'' என்று சொன்னது. எங்களுக்கு ஆச்சரியமாக தோன்றினது. காரணம் சுமார் இரு மாதங்களுக்கு முன்பு இதே சகோதரியைக் கோயில்பட்டிக்கு அருகாமையிலுள்ள வெங்கடாசலபுரம் என்ற கிராமத்தில் பார்த்திருக்கிறோம்.

அங்கு நாங்கள் ஊழியத்திற்குச் சென்றிருந்தபொழுது அந்த சகோதரியை முதலாவது சந்தித்தோம். சி.எஸ்.ஐ. சபையைச் சேர்ந்த அந்த சகோதரி, 'தன்னுடைய கணவர் இராணுவத்தில் இருப்பதாகவும், அவர்களுடன் விரைவில், போய்விடுவோம் என்றும், எங்களுக்காக கர்த்தரிடம் வேண்டிக் கொள்ளுங்கள்'' என்றும் கேட்டுக் கொண்டார்கள். அதே சகோதரியைத்தான் இங்கே நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

கணவனும் அருகே நிற்கிறார். ''ஐயா! நான் குழந்தைகளுடன் போன மாதம்தான் இங்கே வந்தேன். இந்த இரு தினங்களுக்குள்ளாக எனக்கு ஒருவித மயக்கம் உண்டாகி வாயில் வந்தவாறு உளர ஆரம்பித்து விட்டேன். ராணுவ மருத்துவமனைக்கும் அழைத்துச் சென்றார்கள். அவர்கள் என்னை ஊருக்கு அனுப்பச் சொல்லி விட்டார்கள். நான் என் கணவரிடம் ஊரில் தங்களைச் சந்தித்ததையும் அவர்களை இங்கே அழைத்து வந்தால் சுகம் கிடைக்கும் என்று கூறினேன்.'' கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

''அவர்கள் இவ்வளவு தூரத்திற்கு எப்படி வருவார்கள்''? என்றார்கள். என் கணவரிடம் போன வாரம் தான் பேசினேன். அப்படியே, என்னை ஊருக்கு அனுப்பினாலும், உங்களை அழைத்து வந்து ஜெபம் பண்ணினால் தேவன் சுகம் தருவார் என்றும் நான் எண்ணியிருந்தேன்.

சிறுமைபட்டவளாகிய என்னுடைய ஜெபத்தைக் கேட்டு என் ஆண்டவர் உங்களையே இங்கு அழைத்து வந்துவிட்டரே என்பதை எண்ணும் பொழுது என் ஆண்டவருக்கு நான் எப்படி நன்றி கூறுவேன்? உங்களை இந்த வீட்டு முன்னே கண்டதும் நான் என்னை அறியாமலே ஐயா! என்று கதறி விட்டேன். அந்தக் கணமே என்னைப் பிடித்து இருந்த அசுத்த ஆவியும் என்னைவிட்டுப் போய்விட்டது'' என்று அந்த சகோதரி பேசிக்கொண்டிருந்தார்.

தன்னுடைய கணவரிடம் ''நான் உங்களிடம் சொன்ன ஊழியக்காரர்கள் இவர்கள் தான்'' என்று எங்களை அறிமுகப்படுத்தி வைத்தார். அங்குள்ள மக்களுக்கெல்லாம் மிகுந்த ஆச்சரியமாய் காணப்பட்டது.

தேவன் செய்கிற மகத்துவ செயல்களுக்காக தேவனை மகிமைப்படுத்துகிறேன். பைத்தியமாயிருந்த இந்த சகோதரிக்கு இந்த அற்புத சுகம் எப்படிக் கிடைத்தது? ஊழியர்கள் இன்னமும் ஜெபிக்க கூட செய்யவில்லையே! என்று வந்திருந்த எல்லாரும் ஆச்சரியப்பட்டு காரியங்களைக் கவனித்தார்கள்.''

அந்நாட்களில் ''பிணியாளிகளைப் படுக்கையின் மேலும், கட்டில்களில் மேலும் கிடத்தி, பேதுரு நடந்து போகையில் அவனுடைய நிழலாகிலும் அவர்களில் சிலர் மேல் படும்படிக்கு, அவர்களைவெளியே வீதிகளில் கொண்டு வந்து வைத்தார்கள்.'' (அப் 5:15) என்ற வேத வாக்கியத்தின்படியே கர்த்தர் இந்நாட்களிலும் கிரியை செய்து வருவதை எண்ணி கர்த்தரை ஸ்துதிக்கிறேன். இதற்கு ஆதாரமாக அன்மையில் நடந்த ஒரு சம்பவத்தையும் குறிப்பிட விரும்புகிறேன்.

நெல்லை மாவட்டத்தில் கள்ளிகுளம் என்ற ஊரில் கல்லூரி ஒன்று உள்ளது. கயத்தாறு அருகேயிருந்து இந்தக் கல்லூரியில் முதலாமாண்டு படிக்கும் மாணவர் ஒருவர் அசுத்த ஆவியினால் தாக்கப்பட்டு மிகவும் கஷ்டப்பட்டு கல்லூரியில் வகுப்பு நேரங்களில் மிகுந்த கலாட்டா செய்து, படிக்க முடியாத நிலையில் வீட்டுக்கு அனுப்பப்பட வேண்டிய சூழ்நிலையில் இருந்தார். நமது சபை விசுவாசி ஒருவர் ஒரு பரிசுத்த ஆராதனையின் போது அருகேயிருக்கும் மகிழ்ச்சிபுரம் சபைக்கு இவரை அழைத்துக்கொண்டு வந்தார். நாங்கள் அன்றையதினம் வள்ளிபூரிலிருந்து மகிழ்ச்சிபுரம் சபைக்கு ஆராதனை நடத்தும் படி காலை 10 மணியளவில் அங்கு போனோம். இந்த சகோதரன் யார்? எப்படிப்பட்டவர் என்பதை நாங்கள் அறியோம்.

நாங்கள் ஆலயத்திற்குள் பிரவேசித்து, அந்த சகோதரனைத் தாண்டி

எங்கள் இருக்கைக்குச் சென்றோம். அந்நேரத்தில் அத்த சகோதரனிடம் இருந்த அகத்தஆவி அவரைவிட்டு விலகிச் சென்றதை அந்த சகோதரன் உணர்ந்து, பின்னர் ஆராதனை முடித்த பிறகு தன்னுடைய அனுபவங்களைக் கூறினர். தேவன் தம்முடைய சித்தத்தை இன்றைக்கும் நிறைவேற்றிக் கொண்டே இருக்கிறார் என்பதை அறிந்து என் தேவனை மகிமைப்படுத்துகிறேன். மேற்படி சகோதரன் இப்பொழுது பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே ஞானஸ்தானமும் பெற்று கல்லூரியில் ஒரு சாட்சியாய் ஜீவித்து வருகிறார்.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, அற்புதநாதர் இயேசுகிறிஸ்து இன்றைக்கும் அற்புதங்களை நடத்திவருகிறார். அவருக்கே மகிமை உண்டாவதாக! நாங்கள் டேராடூன் அருகேயுள்ள கிளைமிங்டொன் என்ற இடத்திலுள்ள இராணுவ முகாமுக்குள் சென்று, அங்குள்ள தேவனுடைய பிள்ளைக்களை சந்தித்து ஆலோசனை கொடுத்து, அசுத்த ஆவிகளை துரத்தி, இவ்விதமாய் கர்த்தருடைய நாமத்தை மகிமைப்படுத்திவிட்டு, நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு (டேராடூனுக்கு) போக புறப்பட்டோம்.

இரவு சுமார் 10 மணி இருக்கும் அங்குள்ள விசுவாசிகள் அங்கு தங்கி காலையில் செல்லுமாறு எங்களைக் கேட்டு கொண்டார்கள். நாங்களோ மறுநாளில் அங்கிருந்து ரிஷிகேஷம், அரிதுவார் போன்ற இடங்களுக்கு கர்த்தருடைய வேலையாகச் செல்ல வேண்டியிருந்ததால், இரவிலேயே விடைபெற்றுக் கொண்டு கடைசி பஸ் பிடித்து சென்றுவிடுவோம் என்று கூறி அவசரமாய் பஸ்நிலையம் வந்தோம். சுமார் 8 கி.மீ. உண்டு நாங்கள் ‘‘ஜெபித்துக் கொண்டே நடந்தோம். வழியில் ஏதாவது லாரிகள் வந்தால் ஏறிப்போகலாம் என்று எண்ணிக்கொண்டே நடந்தோம். பனிகாலமாயிருந்தபடியால் நடப்பதற்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. இமயமலையின் அடிவாரம் நாங்கள் சென்றிருந்த இடமாகும், மழை பெய்வது போல் பனி பெய்து கொண்டே இருந்தது. நாங்கள் உடுத்தி இருந்த வஸ்திரமெல்லாம் நனைந்து விட்டது, சூடாக தேநீர் குடித்தாலாவது சென்றுவிடலாம் என்றால், எல்லா கடைகளும் மூடப்பட்டு விட்டது. மெதுவாய், மெதுவாய் நடந்து சென்றோம். என்னோடு வந்த உடன் ஊழியர்கள் இருவரும் பேசிக்கொண்டே விரைவாக நடந்தார்கள். என்னால் நடக்க முடியவில்லை. என்னுடைய கண்களிலும், நாசியிலும் நீர் வடிய ஆரம்பித்தது. கைகளும் கால்களும் குளிரால் நடுங்கியது. நான் என் ஆண்டவரிடம் ஆண்டவரே! இப்படி தாங்கக்கூடாத குளிருக்குள் எங்களைக் கொண்டு வந்து விட்டீரே! நாங்கள் எப்போது டேராடூன் செல்வோம்? நாளையதினம் ஊழியத்திற்கு நாங்கள் எப்படிப் போகமுடியும்? என்றெல்லாம்

சொல்லிக் பேசிக் கொண்டே நடந்தேன், சில விநாடிக்குள் எனக்குள்ளிருந்த பரிசுத்த ஆவியானவர் உரந்த குரலில், நானும் உன்னோடு கூட இந்த பனிக்குள் நனைகிறேனே!'' என்று பேசினார் என் உடலெல்லாம் நடுங்கினது.

என் உள்ளமெல்லாம் கொழுத்துவிட்டு எரிந்தது. (லூக் 24:32) என் உடலிலுள்ள குளிர் எங்கேயோ ஓடி மறைந்துவிட்டது. எனக்கு ஒரு புதுபெலன் கிடைத்தது. நான் தீவிரமாய் நடந்தேன். உடன் ஊழியர்களும் தீவிரமாய் நட்ததுவந்து இரவு சுமார் 12 மணி அளவில் டேராடூன் வந்து சேர்ந்தோம்.'' (ஏசா 43:1,2) வசனங்களில் எழுதியிருக்கிற அனுபவம் வழியிலே என்னிலும் நடந்தது. என்று உடன் ஊழியர்களிடம் கூறி தேவனை மகிமைப்படுத்தினோம். மறுநாள் காலையில் எவ்வித சிறு பெலவீனங்கூட குளிரினிமித்தம் ஏற்படவில்லை.

இப்படியே மற்றொருமுறை டிசம்பர் மாதத்தில் கொடைக்கானலுக்கு கர்த்தருடைய வேலையாகச் சென்றிருந்தோம். பெருமாள்மலை என்ற இடத்திலுள்ள புதிய எருசலேம் சபையில் அன்றிரவு கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள். குளிர் மிகுதியாய் இருந்தபடியால் எங்கள் சரீரம் நடுங்க ஆரம்பித்து விட்டது. வாயைத் திறந்தால் பற்கள் ஒன்றோடொன்று அடிக்க ஆரம்பிக்கிறது என்ன செய்வதென்றே தெரியாது. எப்படியும் கர்த்தரிடம் சிறிது காத்திருந்து ஜெபிப்போம். கர்த்தர் பெலன் தருவார் என்ற விசுவாசத்தோடு கர்த்தருடைய சமுகத்தில் காத்திருந்தோம்.

'நான் உங்களுக்கு ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன் என்னிலும் வல்லவர் ஒருவர் வருகிறார் அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் ஞானஸ்நானம் கொடுப்பார் (லூக் 3:16) என்று யோவான் ஸ்நானகன் சொன்ன வார்த்தையை அன்று நினைவு கூறதேவன் உதவி செய்தார். சிறிது நேரம் தேவ சமுகத்தில் காத்திருந்ததும் உள்ளேயிருந்து உஷ்ணமான காற்று எங்கள் காதுகளில் வழியாக வெளியேறி முகத்தையெல்லாம் குடாக்கி சில வினாடிக்குள் உடலெல்லாம் உஷ்ணமாயிருக்கும்படி எங்கள் இருவருக்குமே தேவன் உதவி செய்தார். என்ன ஆச்சரியம்! கர்த்தரால் கூடாத காரியம் ஒன்றுமே இல்லை. பின்னர் கர்த்தருடைய பெலத்தினால் ஆராதனை நடத்தினோம். வந்திருந்த யாவரையும் பரிசுத்த ஆவியின் அக்கினி ஆட்கொண்டது அவருக்கே மகிமையுண்டாவதாக!'

## "இயேசு என்றும் மாறாதவர்"

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே, கர்ததராகிய தேவனுடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தையினால் உண்டான வல்லமை பெரியது

இன்னும் சமயம் வாய்க்கவில்லை. காரணம் அந்த சகோதரியின் கணவர் நன்றாக மது அருந்துபவர். ஆகையால் நாங்கள் அவருடைய வீட்டில் வந்து ஜெபிப்பதை அவர் விரும்பவில்லை. அவருடைய உள்ளத்தில் தேவன் கிரியை செய்வதற்காக நாங்கள் ஜெபித்தோம். மூன்றாவது நாளில் மாமனாருக்கு ‘‘ஊழியர்களை அழைத்து வாருங்கள்’’ என்று போன் பண்ணினார். Mr. மாணிக்கம் ரொம்ப மகிழ்ச்சியடைந்து இரவு 8 மணியிருக்கும் எங்களை மகளுடைய வீட்டிற்கு அழைத்துப்போனார். எங்களைக் கண்டதும் அந்த சகோதரி மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்கள். சில வினாடிக்குள் டெலிபோன் மணி அடித்தது. ஓடி வந்து ஆவலோடு செய்தியைக் கேட்ட சகோதரியின் முகம் வாடிவிட்டது. தகப்பனார் கலக்கத்தோடு, ‘‘என்னம்மா விஷயம்?’’ என்று கேட்டார். ‘‘கணவர் ஜெபத்திற்கு வரமாட்டாராம். வந்தவர்களை ஜெபித்துவிட்டு போகச் சொல்’’ என்று கூறிவிட்டார் என்று அழுகையோடு கூறினது.

Mr. மாணிக்கம் சோகம் நிறைந்தவராய் எங்களை நோக்கினார். நாங்கள் கர்த்தரை துதித்துக் கொண்டேயிருந்தோம். சில வினாடிகளுக்குப் பின் மாணிக்கம் அவருடைய மருமகனுக்குப் போன் பண்ணி, ‘‘பாஸ்டர்கள் உங்களைப்பார்க்க வாஞ்சையாய் இருக்கிறார்கள், ஆகவே, தயவு செய்து சீக்கிரம் வாருங்கள்’’ என்று வருந்தி அழைத்தார். ‘‘சரி! வருகிறேன்’’ என்று அவர் சொல்லி சிறிது நேரத்திற்குள் காரில் வந்து சேர்ந்தார். இருவருக்கும் சில ஆலோசனை கூறி கர்த்தருடைய கட்டளையின்படி தலையில் கை வைத்து ஜெபித்தோம். ஒரு உற்பவ காலதிட்டத்திற்குள் ஓர் குழந்தையைக் கட்டளையிடுவேன் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இதை அவர்களிடம் கூறிவிட்டு திரு. மாணிக்கம் வீட்டிற்கு இரவு வந்து சேர்ந்தோம்.

## கோலாலம்பூரில் கர்த்தரின் பணி

மறுநாள் காலையில் அங்கிருந்து கோலாலம்பூருக்குப் பிரயாணம் செய்தோம். அந்த நாள் ஒரு முக்கியமான நாள், உலகசரித்திரத்தில் பெரியதொரு மாறுதல் உண்டாகும் என்று மக்களெல்லாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாள் (1972 மார்ச் மாதம்) அதாவது கோளங்களெல்லாம் ஒன்றோடொன்று மோதி உடைந்து விடும். பெரிய அழிவு ஏற்படும் என்று விஞ்ஞானிகளும் வானிலை ஆராய்ச்சியாளர்களும் அறிவித்திருந்த நாள், ஆனால் அந்நாளிலே மனிதர்கள் எதிர்பார்த்திருந்தபடி அழிவுகள் ஏற்படாது போனாலும், பலத்த சேதங்கள் பல இடங்களில் நடந்துவிட்டது. அன்று காலை முதல் மாலை வரையிலும் சூரியனைக் காணவில்லை. ஆங்காங்கு பெருங்காற்றும் கல்மழையும் பெய்து கொண்டிருந்தது. நாங்கள் கர்த்தருடைய ஆலோசனைப்படிப் பிரயாணப்பட்டு விட்டோம்.

திரு. சந்தோசம் என்பவர் ரயில்வேயில் வேலை பார்க்கிறார். இவருக்கு செய்தி கொடுத்து விட்டு நாங்கள் பஸ்ஸிலே பிரயாணம் செய்தோம். அன்றைய காலநிலை சரியில்லாத படியால் எங்கள் பஸ் காலதாமதமாகவே கோலாலம்பூரைச் சேர்ந்தது. Mr. சந்தோஷம் இருக்கும் ரெயில்வே குடியிருப்பின் அருகே பலத்த புயல் வீசி ஏராளமான வீடுகள் அழிந்துவிட்டது. எங்கு பார்த்தாலும் வெள்ளக்காடு Mr. சந்தோசத்தின் கார் தண்ணீரைத் தாண்டி வரமுடியாமையால் காரை வழியில் விட்டு விட்டு Mr. சந்தோஷமும், அவர் பையனும் எங்களைப் பார்க்க பஸ் நிலையத்திற்கு வந்தார்கள். நாங்கள் வந்த பஸ் வந்துவிட்டு போய்விட்டது என்று அறிந்து மிகவும் துக்கத்தோடு இருவரும் வந்து கொண்டிருந்தார்கள்.

எங்களை இதற்கு முன்பு இவர்கள் பார்த்ததில்லை. ஆனாலும் எங்கள் உடையைக் கண்டு இவர்கள் அந்த தேவனுடைய ஊழியர்கள் தான் என்று எண்ணி எங்களை கண்டு கொண்டார்கள். மிகவும் மகிழ்ச்சியோடு தங்கள் வீட்டிற்கு அழைத்துப் போனார்கள். வழக்கமாக அவர்கள் வீட்டில் வாரத்தில் ஒர்நாள் அங்குள்ள விசுவாசிகள் கூடி ஜெபிப்பது வழக்கம். அப்படியே அன்றைய தினத்தில் அவர்கள் கூடி வந்திருக்கையில் நாங்களும் போய் சேர்ந்தோம். அது அங்குள்ள மக்களுக்கு ரொம்ப மகிழ்ச்சியாய் இருந்தது. எங்களுடைய அனுபவ சாட்சிகளை அங்கு கூடி வந்த மக்கள் மத்தியில் கூறினோம். கர்த்தர் மிகுந்த ஆசிர்வாதத்தைக் கட்டளையிட்டார் அவருக்கே மகிமையுண்டாவதாக.

நாங்கள் முதலாவது கோலாலம்பூரில் இறங்கிதான் தெலுக் அன்சன் Mr. மாணிக்கம் வீட்டுற்குப்போனோம். இதை அறிந்த Mr. சந்தோஷமும் அவர் வீட்டாரும் ''நீங்கள் கோலாலம்பூரில் இறங்கினது எங்களுக்குத் தெரிந்திருந்தால் நாங்கள் இங்கே முதலாவது உங்களை அழைத்து வந்திருப்போமே'' என்று கூறினார்கள். பல இடங்களுக்கு எங்களை அழைத்துக் கொண்டு போய் கர்த்தருடைய வார்த்தைகளைக் கூறவைத்தார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

மலேஷியாவில் தமிழர்களில், பெரும்பகுதி மக்கள் லுத்தரன் சபையைச் சேர்ந்தவர்களே, சத்தியத்தை வாஞ்சிக்கும் மக்கள் ஏராளமாய் இருக்கிறார்கள். கர்த்தர் தம்முடைய இருதயத்துக்கேற்ற மேய்ப்பர்களைக் கொடுத்து இவர்களைத் தமது மந்தையாய்கூட்டிச் சேர்ப்பாராக.

இந்த நாட்டில் (மலேஷியாவில்) பூர்வீகத் தேவாலயங்கள் உடைக்கப்பட்டு, தேவாலயம் இருந்த இடத்தில் மசூதிகள் கட்டப்பட்டு வருகிறது. வெளியரங்கமாய் சுவிசேஷம் அறிவிக்கக்கூடாது. மலேஷிய மொழியில் வேதாகமம் அச்சடிக்கக்கூடாது. இது போன்று சட்ட திட்டங்களை

அரசு அறிவித்துள்ளது. இந்த நாட்டின் இரும்புத்திரை சட்டங்களைத் தேவன் உடைப்பாராக! சீக்கிரம் உடைத்து ஏராளமான மக்கள் கர்த்தராகிய இயேசுவைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ள தேவன் வாசலைத் திறப்பாராக.

பூர்வீகத் தேவாலயங்கள் இடிக்கப்பட்டப் பல இடங்களுக்கு Mr. மாணிக்கம் எங்களை அழைத்துப் போய் காண்பித்தார். எங்கள் உள்ளம் கலங்கினது. தெலுக் அன்சன் என்னும் இடத்தில் ஒரு பெரிய தேவாலயம் இருக்கிறது. அதன் அருகே பள்ளிவாசல் கட்டப்பட்டு வருகிறது. மேற்படி ஆலயத்துக்கு நோட்டீஸ் கொடுத்து ஆராதனை நிறுத்தப்பட்டுவிட்டது. ஆனால் இன்னமும் அந்த ஆலயம் இடிக்கப்பட்வில்லை. நாங்கள் அதைப் பார்த்து வந்து இரவில் மிகவும் பாரத்தோடு ஆண்டவரிடம் வேண்டுதல் செய்தோம். அன்று நடுஇராத்திரியில் கர்த்தர் பேசினார்.

''அந்த ஆலயம் இடிக்கப்படமாட்டாது. இந்த நாட்டில் எனக்குப் பிரியமான ஆட்சியை ஏற்படுத்தி என்னுடைய நாமத்தை மகிமைப்படுத்துவேன்'' என்றார் மறுநாளில் Mr. மாணிக்கம் அவர்களிடம் விவரத்தைக் கூறினோம். அவர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம் அரசு ஆணையை யார் மாற்ற முடியும் என்று அவர் எண்ணினார். (ஆனால் 1985ல் இந்தியாவுக்கு வந்த Mr. மாணிக்கம் கூறினார். நீங்கள் சொன்னபடி அந்த தேவாலயம் இன்னமும் உடைக்கப்படவில்லை என்று கர்த்தர் நம்முடைய வார்த்தைகளில் ஒன்றையும் தரையிலே விழுந்து போகவிடவில்லையே அவருக்கே மகிமையுண்டாவதாக.)

நாங்கள் கோலாலம்பூரில் கர்த்தருடைய வேலையை முடித்துவிட்டு 17-03-82ல் அங்கிருந்து சிங்கப்பூர் வழியாக விமானத்தில் இந்தியா வந்து சோந்தோம். தேவன் அருளிய சொல்லிமுடியாத ஈவுகளுக்காகத் தேவனைத் ஸ்துதிக்கிறேன். நாங்கள் இந்தியா வந்து சேர்ந்ததும் Mr. மாணிக்கம் அவர்களிடமிருந்து வந்த கடிதத்தில் தன்னுடைய இரண்டாவது மகள் மனந்திரும்பி வீட்டிற்கு வந்து விட்டாள். அவளுக்கு திருமணத்திற்காக ஒரு மாப்பிள்ளையைத் தேவன் ஆயத்தம் செய்துதரும்படி வேண்டிக்கொள்ளுங்கள் என்பதாக எழுதியிருந்தார். அப்படியே கர்த்தர் அந்த சகோதரிக்கு திருமணம் நடக்க ஏற்பாடு செய்தார். குறித்த காலத்தில் அவருடைய மூத்த மகளுக்கு ஓர் ஆண் மகனைத் தேவன் கட்டளையிட்டார். இளைய மகளும் பட்டப்படிப்பில் வெற்றி பெற்றுள்ளார். திரு. மாணிக்கம் அவர்களும் கர்த்தருடைய பணிக்காகத் தன்னை ஒப்புக் கொடுத்திருக்கிறார். அவரைக் கொண்டு கர்த்தர் தம்முடைய நாமத்தை மகிமைப்படுத்துவராக.

''தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை'' - லூக் 2:18.

அத்தியாயம் 12

# புதிய எருசலேம் சபையில் தேவன் வாசமாயிருக்கிறார்

நம்முடைய தேவன் நேற்றும், இன்றும், என்றும் மாறாதவராய் இருக்கிறபடியால் அவரை ஸ்துதிக்கிறேன். கடந்த இரு மாதங்களுக்கு முன் தலைமை மேய்ப்பரின் உத்தரவுப்படி கோயில்பட்டி சபை ஊழியத்தை பாஸ்டர் பி. ஜோசப் அவர்களிடம் ஒப்படைப்பதற்காக கோயில்பட்டி சென்றிருந்தோம். பரிசுத்த ஆராதனையின் வேளையில் சுமார் 65 வயதுடைய ஒரு பெரியவரை ஒரு பாட்டியம்மா கைத்தாங்கலாக அழைத்து வந்து அமரச் செய்தார்கள். அவருக்கு இரண்டு கால்களும் நடக்க முடியாத ஒரு பெலவீனம். பல மருந்துவர்களை அணுகியும் உலக பிரகாரமாய் தங்களுக்குத் தெரிந்த எல்லா சிகிச்சைகளையும் செய்தும் சுகம் கிடைக்கவில்லை. ''புதிய எருசலேம் சபையில்'' தேவன் வாசமாய் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு சுகம் பெற்றுப்போக வந்திருந்தனர்.

ஆராதனை முடிந்ததும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை முழு இருதயத்தோடு விசுவாசிக்க வேண்டும் என்று அந்த பெரியவருக்கு ஆலோசனைக் கொடுத்து இறைவன் இயேசுவின் நாமத்தினால் அவருக்கு எண்ணெய் பூசி ஜெபித்தோம். நம்பிக்கையோடு கடந்து போனார். வழியில் செல்லும்போதே அவருடைய கால்களுக்குப் பூரணமான சுகம் கிடைத்து விட்டது. அவரும் அவருடைய மனைவியும் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஊர் போய் சேர்ந்தனர்.

ஊருக்கு போய் சேர்ந்ததும் அவர்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கக்கூடிய சம்பவம் என்னவென்றால், அந்தப் பெரியவருடைய முதுகில் ஒரு தேங்காய் பருமனான ஒரு கட்டி இருந்திருக்கிறது. இது இவருடைய ஐந்தாவது வயதில் சரீரத்தில் சிறிதாக உருவாகி இவருடைய 65-வது வயதில் பெரிய ஒரு கட்டியாக மாறிவிட்டதாம். உடம்பிலே சட்டைப் போட்டிருந்தால் அது ரொம்ப புடைப்பாக வெளியே தெரியுமாம்.

எங்களிடத்தில் அந்த கட்டிக்காக ஜெபிக்கச் சொல்லவில்லை. அது வளர்ந்து வரும் ஒரு உறுப்பைப் போல் உடலோடு ஒட்டிவிட்டது. ஆனால்! நம் அதிசயமானவர் செய்த அற்புதம் என்ன தெரியுமா? சரீரத்திலுள்ள எல்லா பெலவீனங்களும் மாறிப்போகட்டும் என்று கர்த்தரிடம் வேண்டினபடியால் இந்தக் கட்டியையும் தேவனாகிய கர்த்தர் இவருடைய உடம்பை விட்டு மாற்றிவிட்டார்.

இவர் ஆலயத்துக்கு வரும் போது முதுகில் கட்டி இருந்தது. கஷ்டப்பட்டு சட்டையைப் போட்டுக்கொண்டு வந்தவர் வீட்டில் போய்

சட்டையை கழற்றிய பொழுது கட்டியை காணவில்லை. அவர் வீட்டாரும் அந்தக் கிராமத்தில் யாவரும் இந்த அற்புதத்தைக் கண்டு அற்புதநாதர் இயேசுவை மகிமைப் படுத்தியிருக்கிறார்கள் அல்லேலூயா.

அவர் நீண்ட நாள்களாக கால் நடக்க முடியாதிருந்தவர் இப்பொழுது இவர் தன்னுடைய ஊர் சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலையில் உள்ளது. அங்கிருந்து நடந்தே ஆலயத்துக்கு வருகிறார். இவரைக் காணுகிற எல்லாரும் இவரிடம் ஆச்சரியமாய்! ''நீங்கள் எப்படிக் குணமானீர்கள்?'' என்று கேட்கிறார்கள்.இவரிடம் கேட்கிற எல்லாரிடமும் என் கால்களுக்கு கிடைத்த சுகம் மட்டுமல்ல, என் முதுகிலிருந்த கட்டியும் மாறிவிட்டது. நான் கர்த்தருடைய ஆலயத்துக்குப் போனேன். கர்த்தர் எனக்கு சுகம் கொடுத்தார்'' என்று கூறிவருகிறார். சபையில் சாட்சி கொடுக்கும் பொழுது ''இது கர்த்தருடைய ஆலயம், கர்த்தர் இங்கே வாசமாய் இருக்கிறார்'' என்றே கூறுகிறார்.

ஆம்! கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு மலைகளுக்கு மேலாய் உயர்த்தப்படும் எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடிவருவார்கள். (ஏசா 2:2)

ஒரு நாள் தேவ சமூகத்தில் ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள அழகப்பபுரத்துக்குப் போகும்படி கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு வந்து பேசவேண்டியதெல்லாம் பேசி முடித்தாகிவிட்டது. அவைகளெல்லாம் பரிசுத்த ஆவியானவர் தம்முடைய ஊழியக்காரர்களைக் கொண்டு புத்தகமாய் எழுதி நம்முடைய கைகளில் தந்துவிட்டார். இனி ஆவியானவர் பேச வேண்டிய அவசியமில்லை என்று வாதாடுகின்ற வாயாடிகள் மலிந்துபோன காலத்தில் நாம் காணப்படுகிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு இம்மானுவேல் என்ற ஒரு பெயரும் உண்டு. ''இம்மானுவேல் என்பதற்கு தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தமாம். (மத். 1:23) என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. நம்மோடு வாசம் பண்ணுகிற தேவன் ஊமையான தெய்வமானால் பேசமாட்டார் அவர் பேசுபவர். ஆம்! அவர் பேசுவார். பேசிக் கொண்டே இருக்கிறார். அல்லேலூயா!

அந்த அழகப்பபுரத்தில் புதிய எருசலேம் சபையின் ஊழியர் குரூஸ் மைக்கேல் என்ற ஓய்வு பெற்ற ஆசிரியர் ஒருவர் இருக்கிறார். திடீரென்று அவர் எதிர்பாராத வேளையில் அங்கு போய் சேர்ந்தோம். அவர் ரொம்ப ஆச்சரியப்பட்டார். ''திடீரென்று வந்து விட்டீர்களே!'' என்றார். ''கர்த்தருடைய

ஆவியானவர் அனுப்பினார். ஆகையால் வந்தோம்'' என்று கூறினோம்.

அந்த ஊரிலுள்ள ஒரு சகோதரர் இவர் பெயர் புண்ணியமுத்து இவர் C.S.I சபையில் போதகராக வேலை பார்ப்பவர். இவருக்கு ஒரு பயங்கரமான பெலவீனம் தாக்கி நாகர்கோவில் அருகே உள்ள புத்தேரி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு அங்குள்ள எல்லா டாக்டர்களும் பரிசோதனை பண்ணியும் வியாதி இன்னதென்பதைக் கண்டு கொள்ள முடியவில்லை. இவருக்கு பைத்தியமான நிலைமை உண்டாகி விட்டது. உடனே மருத்துவமனையிலிருந்து இவரை டிஸ்சார்ச் பண்ணி விட்டார்கள்.

முந்தின நாள் தான் இவரை தன்னுடைய ஊருக்கு கொண்டு வந்துள்ளார்கள். நாங்கள் போயிருந்த அன்று காலையில் நமது ஊழியரை ஜெபிப்பதற்காக அழைக்க வந்திருக்கிறார்கள். இவர் போய் அந்த நோயாளியைப் பார்த்ததும் நிலைமை பரிதாபமாக இருப்பதைக் கண்டு ''நீங்கள் இவரை வள்ளியூருக்கு புதிய எருசலேம் சபைக்குக் கொண்டு போவது நல்லது. ஆனால்! அங்கே தேவனுடைய பரிசுத்தவான்கள் இருந்தால் நல்லது. நான் கேட்டுக் சொல்லுகிறேன்'' என்று ஆலோசனை கூறி வந்திருக்கிறார்.

நாங்கள் திடீரென்று அந்த ஊருக்குப் போனதும் நம்முடைய ஊழியருக்கு அது ரொம்ப ஆச்சரியமாயிருந்தது. எங்களிடம் இந்த நோயாளியின் நிலையை கூறினார். நாங்கள் அந்த ஊருக்கு அனுப்பப்பட்டதின் நோக்கத்தை ஆவியானவரிடம் கேட்டறிந்து அந்த நோயாளிக்காக ஜெபிக்கச் சென்றோம். அவர் யாரிடமும் அதிகம் பேசமாட்டார். ஆகாரம் சாப்பிட்டு அநேக நாட்கள் ஆகிவிட்டது.

அவரை உட்கார வைத்து நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் பிசாசை கடிந்து கொண்டோம். அவருடைய தலையை ஒரு சர்ப்பம் (பாம்பு) சுற்றியிருப்பதுபோல் காட்சியில் தெரிந்தது. அந்தச் சர்ப்பம் கீழே விழுந்து மறைந்து விட்டது. அவருடைய வியாதி, தலையில் எப்பொழுதும் வேதனை, எதையும் சிந்திக்க முடியாத நிலைமை, இப்பொழுது வேதனை மாறிவிட்டது. நன்றாக ஆகாரம் சாப்பிட்டார். வீட்டாரும் உறவினர்களும், விசேஷமாய் அவருக்கு சிகிச்சை செய்த மருத்துவர்களும் ஆச்சரியப்படுகிறார்கள். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக தேவனுக்கே மகிமையுண்டாவதாக!''

நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு அதிசயமானவர் என்றொரு பெயருமுண்டு அவர் இன்றைக்கும் அதிசயங்களை நடப்பிக்கிறபடியினால் கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

## "மரித்த குழந்தை உயிர் பெற்றது"

மதுரை ஜில்லாவில் பள்ளப்பட்டி என்ற ஊரில் புதிய எருசலேம் சபை (கிளை) ஒன்று இருக்கிறது. இந்த கிளை சபை உருவான வரலாறு பெரிது. அதைப் பின்னல் அறிந்து கொள்ளலாம். கடந்த மாதத்தில் திடீரென்று நடந்த ஓர் சம்பவத்தை மட்டும் கீழே தருகிறேன்.

மேற்படி ஊரிலுள்ள ஒரு இந்து விவசாயக் குடும்பத்தில் இரண்டு வயதுள்ள ஒரு குழந்தை உண்டு. அவர்கள் வீட்டில் மாட்டுக்குத் தண்ணீர் ஊற்றுவதற்காக தொட்டியண்டைசென்ற பிள்ளையின் தாயார் தொட்டியினுள் தன்னுடைய குழந்தை தலைகிழாய் நிற்பதைக் கண்டு அவசர அவசரமாய்ப் பிள்ளையைத் தூக்கினார்கள். பிள்ளை கட்டையாக விறைத்து விட்டது. பிள்ளையின் வயிறு தண்ணீரால் உப்பியிருந்தது. தாயாரின் கூக்குரலைக் கேட்ட பக்கத்து வீட்டுக்காரறெல்லாம் வந்து கூடி விட்டார்கள். பிள்ளையை வண்டியின் சக்கரத்தில் வைத்து சுழற்றி வயிற்றினுள்ளிருக்கும் நீரை வெளியேற்ற முயற்சித்தனர். முயற்சியால் பலன் ஒன்றுமில்லை.

உடனே அவ்வூர் மருத்துவரிடம் குழந்தையைக் கொண்டு போனார்கள். குழந்தை மரித்துவிட்ட படியால் மருத்துவருடைய பிரயாசமும் வீணாகி விட்டது. தாயாரின் கதறுதலைக் கண்ட மருத்துவர் உங்கள் பிள்ளைக்கு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவால் மட்டுமே ஜீவனைக் கொடுக்க முடியும். ஆகையால், ''புதிய எருசலேம் சபைக்கு'' குழந்தையைக் கொண்டு போய் அங்குள்ள தேவனுடைய மனிதர்களிடம் முறையிடுங்கள். அவர்கள் உங்களுடைய பிள்ளைக்காய் ஜெபிப்பார்கள் என்று கூறி மேற்படி ஆட்களை சபைக்கு அனுப்பிவிட்டார்.

இப்பொழுது ஊரிலுள்ள பெரும்பகுதி மக்கள் கூடிவிட்டார்கள். ஒரு பெரிய கூட்டம் தேவனுடைய ஆலய ஸ்தலத்துக்குள் பிரவேசித்து உயிரற்ற குழந்தையை ஆராதனை ஸ்தலத்தின் நடுவில் படுக்க வைத்து விட்டு பிள்ளைக்கு அருமையானவர்களெல்லாரும் உரத்த குரலில் ''கடவுளே! நீ தான் எங்கள் குழந்தையை காப்பாற்ற வேண்டும்'' என்று கண்ணீரோடு வேண்டினார்கள்.

பள்ளப்பட்டி புதிய எருசலேம் சபையின் Pastor Isac Gnanaiah என்பவர், ''யாரும் அழாதீர்கள். கர்த்தர் இங்கே இறங்கி வந்து பிள்ளைக்கு உயிரூட்டும்படி எல்லோரும் கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்'' என்று கூறி, தாசனும், விசுவாசிகளில் சிலரும், வந்திருந்த கூட்டத்தினரும் பரலோகத்தின் தேவனை உரத்த குரலில் ஸ்தோத்தரிக்கவே, எலியாவின் பலியில் அக்கினி மயமாய் இறங்கின தேவன் தம்முடைய பக்தர்களின் ஜெபத்தைக் கேட்டு வல்லமையோடு இறங்கினார். என்னே அதிசயம்! என்னே அதிசயம்! உயிரற்ற

குழந்தை இரண்டு தடவை தும்மி எழுந்துவிட்டது. (II இரா 4:35). கூடி வந்திருந்த எல்லோரும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தை மகிமைப்படுத்தினார்கள்.

இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும், மாறாதவர், அவருக்கே மகிமை உண்டாவதாக.

''மேலும் நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள் என்றார்'' - (மத் 21:22).



அத்தியாயம் 13

# சக்கரைப் புலவரின் மனம்திரும்புதல்

நாங்கள் சங்கரன் கோயிலிருந்து ராஜபாளையம் செல்லும் பஸ்ரூட்டில் கரிவலம் வந்த நல்லூர் அதாவது யானை ஊர்வலமாக வந்த ஊர் என்று கூறுவார்கள். இந்த ஊரிலிருந்து மேற்கே இராயகிரிக்குச் செல்லும் வழியில் துரைச்சாமிபுரம் என்றொரு ஊர் இருக்கிறது. இந்த ஊருக்கும் கரிவலத்திற்கும் சுமார் 10 கிலோ மீட்டர் தூரம் உண்டு. நாங்கள் வள்ளியூரிலிருந்து கரிவலம் வந்த நல்லூர் வரையிலும் பஸ்ஸில் வருவோம். இங்கிருந்து துரைச்சாமிபுரத்திற்கு கால் நடையாகவே செல்லுவோம். அநேகமாக இரவு 10 மணியளவில் தான் இந்தக் கரிவலம் வந்த நல்லூர் வந்து சேருவோம்.

அங்கு வழக்கமாக ஒரு டீக்கடையில் டீ குடித்துவிட்டு அங்கிருந்து இரவில் மேற்சொன்ன துரைசாமிபுரத்திற்கு நடந்து செல்லுவோம். ஒருநாள் அந்த டீக்கடைக்காரர்; ‘‘ஐயா, நாங்களே இரவு 10 மணிக்கு மேல் இந்த ரோட்டிலே நடந்து செல்ல மாட்டோமே, நீங்கள் அயலூர்காரர்கள். நீங்கள் இப்படி இரவில் செல்வது நல்லதல்ல’’ என்று கூறினார். அவரிடம் எங்கள் தேவன் எங்களை தனிமையாகப் போக விடமாட்டார். அவர் எங்களுடனே வருகிறார். ஆகையால் தான் நாங்கள் தைரியமாய் செல்கிறோம்’’ என்று கூறிவிட்டுக் கடந்து சென்றோம்.

இந்த துரைச்சாமிபுரத்தைச் சேர்ந்த சகோதரர் இராஜசுந்தர் என்பவர், இவர் நெல்லை மாவட்டத்தில் நாங்குநேரி என்ற ஊரில் சர்வேடிப்பார்ட்டமெண்டில் (Survery Department) வேலை பார்த்து வந்தார். இவரை நாங்கள் ஏற்கனவே சந்தித்து கர்த்தருடைய சத்தியத்திற்குள் வழிநடத்தியிருந்தோம். இவர் ஒரு நாள் எங்களைத் தன்னுடைய சொந்த ஊராகிய துரைச்சாமிபுரத்திற்கு அழைத்துச் சென்றார்.

இவருடைய தாயார் பெயர் இரஞ்சிதம்மாள் அந்த அம்மா எங்களை ரொம்ப அன்புடன் ஏற்றுக் கொண்டு கர்த்தருடைய வார்த்தைக்கு முற்றிலும் தன்னை ஒப்புக்கொடுத்தார்கள். லீதியாளை போன்று தேவன் இந்த அம்மாவின் இருதயத்தையும் திறந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

இந்த அம்மாவின் கணவர் ஏழுகோவில்களுக்கு பூஜை செய்வார். இவர் ஒரு பேர்பெற்ற மந்திரவாதியுடன் கூட. இவர் பெயர் சர்க்கரைப் புலவர் என்பது. இவரும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தன்னுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார். இவர்கள் தங்களுடைய ஊரில் ஒரு கன்வென்ஷன் வைக்கவேண்டும். அதற்கான எல்லாச் செலவுகளையும் நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள். அதன்படி பம்பாயிலிருந்து

புதிய எருசலேயின் தலைமை மேய்ப்பர் அவர்களை வரவழைத்தோம்.

முதலாம் நாள் கன்வென்ஷனில் மனந்திரும்புதலைக் குறித்து ஐயா அவர்கள் பேசினார்கள். பாவிகளுடைய சாவைத் தேவன் விரும்புகிறதில்லை அவன் மனந்திரும்பி பிழைக்க வேண்டுமென்பதையே தேவன் விரும்புகிறார். ஆகையால்! சாக வேண்டுமென்று விரும்புகிற சகோதரனே! சகோதரியே! உன்னைக் கர்த்தர் அழைக்கிறார். நீ சாகவேண்டாம். நீ மனந்திரும்பு, கர்த்தரிடத்துக்கு உன் மனதை திருப்பு. அவர் உன்னை மன்னிப்பார். உன் கவலைகள் எதுவாயிருந்தாலும் அவர் தீர்ப்பார். என்று வல்லமையோடு கர்த்தருடைய வார்த்தையைக் கூறினார்கள். ஏராளமான மக்கள் கர்த்தரிடமாக சேர்க்கப்பட்டார்கள்.

சில வினாடிகளுக்குப் பின்பு நாங்கள் கூட்டத்தை முடித்துவிட்டு நாங்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றோம். சிறிது நேரத்தில் பக்கத்திலுள்ள மீனாட்சிபுரம் என்ற ஊரைச் கோந்த ஒரு வாலிபன் வந்தார். இவர் பெயர் செல்வராஜ். C.S.I சபையைச் சேர்ந்தவர், நல்ல வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவருங்கூட. கையில் ஒரு விஷப்பாட்டிலுடன் கண்ணீர் சிந்திக்கொண்டே ஓடிவந்து பெரிய ஐயாவின் கால்மாட்டில் விழுந்தார். ‘‘ஐயா! நீங்கள் இன்று எங்கள் ஊரில் வந்து கர்த்தருடைய வார்த்தையைக் கூறாது போனால், நான் இப்பொழுது பிணமாகியிருப்பேன்.

என் கையிலிருக்கும் இந்த விஷப்பாட்டில் என் உயிரைக் குடித்திருக்கும். என்னைப் பிழைக்க வைப்பதற்காகவே கர்த்தர் உங்களை இந்த ஊருக்கு அனுப்பியிருக்கிறார்’’ என்று விம்மி விம்மி அழுது கொண்டே கூறினார். ‘‘சகோதரனே, அழாமல் என்ன நடந்தது என்று தெளிவாக கூறுங்கள்’’ என்று ஐயா கேட்டார்கள்.

ஐயா நான் ஒரு கொடிய பாவி. என் வாழ்க்கையில் அமைதி இல்லை. எனக்கு மனைவி பிள்ளைகள் உண்டு. எனக்குப் போதிய வசதிகளும் உண்டு. என்றாலும் அவைகள் எனக்குச் சமாதானம் அருளவில்லை. ஆகையால், இனி இந்த உலகத்தில் சமாதானமின்றி வாழக் கூடாது. என எண்ணி என் வாழ்க்கையை முடித்துக் கொள்வதற்காக இந்த விஷப்பாட்டிலை வாங்கிக் கொண்டு என்னுடைய தோட்டத்திற்குச் சென்று, பாட்டிலைத் திறந்து விஷத்தைக் குடிக்க வேண்டுமென்று தீர்மானித்து பாட்டிலை திறக்கும் வேளையில் நீங்கள் மைக்கில் பேசிய தேவனுடைய வார்த்தை ஒலி பெருக்கியின் மூலம் சுமார் ஒரு மைல் தூரத்திலிருந்த என் காதில் வந்து விழுந்தது.

அந்த வார்த்தை என்னை பார்த்தே சொன்னதாக நான் உணர்ந்தேன்.

பாவியே, நீ ஏன் சாக வேண்டும்? பாவியினுடைய சாவைத் தேவன் விரும்பவில்லை என்ற வார்த்தை என் உள்ளத்தை உடைத்தது. ஆண்டவரே! நான் சாக வேண்டாமா? என்னை மன்னிப்பீரா? நான் இனி சாகமாட்டேன். உம்மண்டை வருகிறேன் என்னை ஏற்றுக் கொள்ளும் என்று புலம்பிக் கொண்டே வந்தேன். ஐயா! எனக்காக என் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக ஜெபியுங்கள். நான் சாகமாட்டேன், தற்கொலை செய்ய மாட்டேன்'' என்று சொல்லி மீண்டும் கதறினார். ஐயா அவர்கள் இந்த சகோதரனுக்காக ஜெபித்தார்கள். கர்த்தர் இவருக்கு சமாதானம் அருளினார். தேவன் தம்முடைய பரிசுத்த ஆவியினால் இவரை அபிஷேகம் செய்தார். மனவேதனையோடு வந்த சகோதரன் மன மகிழ்ச்சியை அடைந்தார். தேவன் அருளிய சொல்லி முடியாத ஈவுக்காக தேவனை ஸ்துதிக்கிறேன்.

இரண்டாவது நாள் நற்செய்தி கூட்டம் முடிந்ததும் (சனி இரவு) ஞானஸ்நானத்திற்கு ஒப்புக் கொடுத்தவர்களுக்கு ஆலோசனை கொடுக்கும்படியாக ஒரு கூட்டம் நடந்தது. அக்கூட்டத்தில் சகோதரன் செல்வராஜ் கடந்த நாளில் தான் அடைந்த ஆசீர்வாதங்களைக் குறித்தும், தனக்கு தேவன் அனுப்பிய வார்த்தைகளைக் குறித்தும் சாட்சி கூறினார்.

இவருடைய துணைவியும் அந்தக் கூட்டத்தில் கலந்திருந்தார்கள். இவர் விஷம் குடிக்கச் சென்றதும், இப்பொழுது மனந்திரும்பி இருப்பதும் அந்த சகோதரிக்குத் தெரியாது. இவர் தன்னுடைய அனுபவங்களைக் கண்ணீரோடு கூறினதும் அவருடைய மனைவி மிகவும் உணர்ந்தப்பட்டார்கள். நேற்று என் கணவர் விஷம் குடித்து மரித்திருந்தால் என் வாழ்வு எப்படியிருக்கும்? என் பிள்ளைகளுடைய எதிர்காலம் எப்படியிருக்கும்? என் ஆடம்பரங்கள் எப்படியிருக்கும்? என்று சிந்தனை செய்தார்கள்! உடனே தன்னுடைய ஆபரணங்களைக் கழற்றிவிட்டு, என் கணவனுடைய ஜீவனை பாதுகாத்த தேவனுக்கு நன்றி கூறி நானும் என் கணவரோடே ஞானஸ்நானம் பெறப்போகிறேன் என்று அந்த சகோதரியும் கண்ணீரோடு சாட்சி அளித்தார்கள். இந்த சம்பவம் கூடிவந்த யாவருடைய உள்ளத்தையும் உருக்கினது. தேவனுடைய அடிமைகளாகிய நாங்கள் தேவனை மகிமைப் படுத்தினோம்.

மறுநாள் காலையில் சுமார் பனிரெண்டு பேர்கள் மனந்திரும்பி, பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள். இவ்விதமாய் கர்த்தருடைய சபை அந்த பிரதேசத்தில் உருவாக்கப்பட்டதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

''மாயவித்தைக் காரராயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக்

கொண்டு வந்து எல்லோருக்கும் முன்பாக சுட்டெரித்தார்கள். இவ்வளவு பலமாய் கர்த்தருடைய வசனம் விருத்தி அடைந்தது. (அப் 19:19,20)''

பொய்யுரையாத தேவனுடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளெல்லாம் ஜீவனுள்ளவைகளாய் இன்றும் செயல்பட்டு வருவதற்காக என் தேவனை ஸ்துதிக்கிறேன். 'அவர் தம்முடைய எல்லா வார்த்தைகளிலும் ஒன்றையாகிலும் தரையிலே விழுந்து போக விடவில்லை' (1 சாமு 3:19) என்று வேதம் கூறுகிறது. தேவன் தம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றுவதில் வாஞ்சையும் வைராக்கியமுமாய் இருக்கிறார் என்பதை அறிந்து அனுபவித்து கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

சங்கரன் கோயில் தாலுகாவிலுள்ள துரைசாமியாபுரம் என்ற ஊரில் 'புதிய எருசலேம் சபை' உருவான விபரத்தை சுருக்கமாய் அறிந்தீர்கள். அடுத்த தடவை நாங்கள் துரைசாமிபுரத்திற்கு சென்றிருந்த பொழுது சகோதரர் செல்வராஜ், தன்னுடைய ஊராகிய மீனாட்சிபுரத்திற்கு எங்களை அழைத்துப் போனார்.

மாலை சுமார் 4 மணியளவில் நாங்கள் அந்த ஊருக்குச் சென்று அங்குள்ள C.S.I ஆலயத்தில் தங்கியிருந்தோம். ஊரிலுள்ள மக்களில் அநேகர் வயல் வேலைகளுக்குச் சென்றிருந்தார்கள். சில நோயாளிகள் வந்து ஜெபித்து விடுதலை பெற்றுப் போனார்கள். மாலை 6 மணி அளவில் ஊரிலுள்ள ஆண்களும், பெண்களும் ஆலயத்திற்கு வந்தார்கள். எல்லோரையும் வரவைத்து கர்த்தருக்கு ஆராதனை செய்தோம்.

அன்று பேதுருவின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த கொர்நேலியுவின் வீட்டார் அனைவர் மேலும் பரிசுத்த ஆவியானவர் இறங்கினது போல் (அப் 10:44) இந்த ஆராதனையில் கலந்து கர்த்தரை ஸ்துதித்து மகிமைப்படுத்தின எல்லார் மேலும் கர்த்தருடைய ஆவியானவர் வல்லமையாய் இறங்கினார். கர்த்தருடைய வல்லமை ஆலயத்தை அதிரச் செய்தது. மந்திரவாதியாகிய சர்க்கரைப் புலவரும் பரிசுத்த ஆவியினால் அந்நிய பாஷை அடையாளத்துடன் அபிஷேகிக்கப்பட்டார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

மறுநாளில் முன்னால் மந்திரவாதியாயிருந்த சகோதரன் ''நான் இனி என்ன செய்ய வேண்டும் எனக்கு ஆலோசனை கூறுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார். ''நீங்கள் உங்களுடைய மந்திரவாத தொழிலை முற்றிலுமாய் விட்டுவிட வேண்டும், மந்திரவாத தொழிலுக்காய் பயன்படுத்திய பொருட்களையும், படித்த ஏடுகளையும், புத்தகங்களையும் தீயிலிட்டு எரித்துவிட்டு இதுவரையிலும் செய்த பாவங்களைத் தேவ சமுகத்தில்

அறிக்கையிட்டுப் பாவ மன்னிப்பிற்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும்'' என்று ஆலோசனை கூறினோம்.

அவர் ஞானஸ்நானம் எடுப்பதற்கு ஒப்புக்கொண்டார். ஆனால் தன்னுடைய மந்திரவாத நூல்களைச் சுட்டெரிப்பதற்கு அவர் விரும்பவில்லை. அவைகளை ஒரு பெரிய மரப்பெட்டிக்குள் அடைத்து கிணற்றிற்குள் போட்டு விடுகிறேன். இல்லையேல் வேறு யாருக்கும் விலைக்குக் கொடுத்துவிடுகிறேன் என்றார். அப்படிச் செய்யக் கூடாது வேதவாக்கியம் இப்படித்தான் கூறுகிறது ''மாய வித்தைக்காரர்கள் தங்கள் புத்தகங்களைக் கொண்டு வந்து எல்லோருக்கும் முன்பாகச் சுட்டெரித்தார்கள். (அப் 19:18,19) என்ற வசனத்தை வாசித்துக் காண்பித்ததும் ஒத்துக்கொண்டார். நாங்கள் தங்கியிருந்த அறைக்கு எல்லா ஏடுகளையும், புத்தகங்களையும் கொண்டு வந்து கட்டுக்கட்டாக போட்டார். அவைகள் ஒருபெரிய அம்பாரமாக குவித்து கிடந்தது. அன்று நாங்கள் ஒரு இரகசியத்தைக் கண்கூடாக கண்டோம்.

மேற்படி புத்தகங்களையும், ஏடுகளையும், வெளியே கொண்டுபோய் நெருப்புக் கொளுத்த வேண்டும். அதற்கு முன்னால் அந்த புத்தக அம்பாரத்தின் மேல் கைகளை வைத்து ஜெபித்து அவைகளில் அடங்கியிருந்த அகத்த ஆவிகளைத் துரத்திவிட்டு அவைகளைத் தீக்கொளுத்த வேண்டும் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

சர்க்கரைப் புலவர் எங்கள் அருகாமையில் அறையில் நின்று கொண்டிருந்தார். நானும் உடன் ஊழியருமாக மேற்படி புத்தக அம்பாரத்தின் மீது எங்கள் கைகளை வைத்து கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் அதிலுள்ள அசுத்த ஆவிகளை அதட்டினோம். அந்த ஆவிகள் அந்தப் புத்தகங்களை விட்டு வெளியேறி சர்க்கரைப் புலவரை தாக்கியது. அவர் மிக சத்தமாக அலறிவிட்டார். பின்னர் அந்த ஏடுகளையும், புத்தகங்களையும் கொண்டு போய் தீயிலிட்டு எரித்தோம்.

பரிசுத்த ஆவியானவர் பரிசுத்தவான்களைக் கொண்டு எழுதிய வார்த்தைகள் ஆவியாயும், ஜீவனாயும், இருக்கிறது. பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு எழுதிய புத்தகங்களையோ, வேதாகமத்தையோ வாசிக்கும் பொழுது நம்முடைய உள்ளங்களிலே பரிசுத்த ஆவியின் உணர்வையும் நிறைவையும் நாம் பெறுகிறோம்.

அதுபோலவே அசுத்த ஆவியினால் ஏவப்பட்டு எழுதிய ஏடுகளையும் நூல்களையும் ஒரு மனிதன் படிக்கும் பொழுது, தீய சிந்தனைகளும், தீய பார்வைகளும் உண்டாகி தீமை செய்ய பெலனுமுண்டாகி விடுகிறது.

‘‘எழுத்து சொல்லுகிறது. ஆவியோ உயிர்ப்பிக்கிறது. (2கோரி 3:16)

இவருடைய எல்லாப் புத்தகங்களையும், ஏடுகளையும் இரண்டு சகோதரர்கள் கொண்டு போய், பல மணி நேரங்கள் தீயிலிட்டு கொளுத்தி சாம்பலாக்கிவிட்டு வந்தார்கள். அன்று மாலை வழக்கம் போல் வாரத்தின் இடைநாள் கூட்டத்தை நடத்தினோம். மக்கள் ஏராளமாய் கர்த்தரிடத்தில் மனம் திரும்பினார்கள். சர்க்கரைப் புலவருடைய பள்ளிக் கூடத்திலேயே ஆராதனை நடந்து வந்தது.

அன்றைய ஆராதனையில் கர்த்தர் ஒரு சகோதரனைக் கொண்டு பேசினார். சர்க்கரைப் புலவர் எல்லா ஏடுகளையும் தந்துவிட்டு தன்னுடைய பாதுகாவலுக்கென்று ஒரு சின்ன ஏட்டை வைத்துக்கொண்டார் என்பதாகக் கூறினார். ஆராதனை முடிந்ததும் சர்க்கரைப் புலவர் மிகவும் வருத்தப்பட்டார். ‘‘எல்லாப் பத்தகங்களையும் நான் உங்களிடம் தந்து விட்டேனே இன்னும் ஒரு புத்தகத்தை மறைத்து வைத்திருப்பதாக இவர் எப்படிக் கூறலாம்?’’ என்று கேட்டார். அது அவர் சொன்னது அல்ல, பரிசுத்தாவியானவர் பேசியிருக்கிறார். ஆகையால் எங்காவது மறைந்து கிடக்கும், அமைதியாகப் பார்த்து எடுத்துக் கொடுங்கள்’’ என்று கூறினோம்.

மறுநாள் காலையில் ஒரு மஞ்சள் கயிற்றினால் கட்டப்பட்டு மஞ்சள் பூசிய சிறு ஏடு ஒன்றை அவருடைய பெட்டியிலிருந்து எடுத்துவந்தார். ‘‘இந்த ஏடு என்னிடத்தில் இருப்பது யாருக்குமே தெரியாது. கர்த்தர் அதைப் பார்த்துக் விட்டார் என்பதை நான் இப்பொழுது உணருகிறேன். மற்ற கிறிஸ்தவ சபைகள் போலத்தான் இந்தச் சபையும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அப்பாடா! இங்கே ஒன்றையும் மறைந்து வைக்க முடியாது என்பதை உணர்ந்தேன். எல்லாவற்றையுமே கொடுத்து விட்டோமே, இந்த ஒன்றாவது ஆபத்து வேளையில் நம்மைப் பாதுகாக்க உதவும் என எண்ணிப் மனப்பூர்வமாகத் தான் மறைத்து வைத்தேன். ஆனால்! கர்த்தர் காண்பித்துக் கொடுத்துவிட்டார்.

இந்த ஏட்டிலுள்ள ஓலைச் சுவடிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பயங்கரமான சுலோகமுண்டு ஒரு சுலோகத்தை வாசித்தால் நான் மனதில் நினைத்த அந்த நபருக்கு அந்தக் காரியம் நடைபெறும். ஆகையால் தான் அதை வைத்துக் கொண்டேன். இனிமேல் இதை வைத்துக் கொள்ள மாட்டேன். கர்த்தர் இனிமேல் என்னைப் பாதுகாத்துக் கொள்வார்’’ என்று கூறி அந்த ஏட்டினையும் தந்தார். அதையும் தீயிலிட்டுக் கொளுத்திவிட்டோம். பின்னர் சர்க்கரைப் புலவரும், பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

இவ்விதமாய் கர்த்தருடைய நாமம் இந்தப் பிரதேசங்களில் மகிமைப்பட்டது. அதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறோம். இந்தப் புலவருக்குச் சொந்தமான பூமி ஒன்றை இவரும் இவருடைய துணைவியாரும், கர்த்தருடைய ஆலயம் கட்டுவதற்காக இலவசமாய் கொடுத்தார்கள். அந்த இடத்தில் ஒரு மகிமையான தேவாலயத்தை தேவனாகிய கர்த்தர் கட்டி தந்தார். கர்த்தருடைய நாமம் அங்கே மகிமைப்பட்டுக் கொண்டிருக்கிறது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

''விசுவாசித்தவர்களில் அநேகர் வந்து தங்கள் செய்கைகளை

வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள்'' (அப் 19:18)



### அத்தியாயம் 14

# மலையடிப்பட்டியில் தேவ ஊழியம்

நம்முடைய தேவனாகிய கர்த்தர், இந்த சங்கரன் கோவில் தாலுகாவில் தம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தினார். இப்பொழுதும் மகிமைப்படுத்திக் கொண்டிருக்கிறார். இந்த துரைசாமியாபுரம் ஊழியத்தில் சந்திக்கப்பட்ட ஒரு சகோதரருடைய ஊர் மலையடிப்பட்டி என்று ஒரு கிராமம், இது கரிவலம் வந்த நல்லூருக்கு கிழக்கே சுமார் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. அதே சகோதரர் தன்னுடைய ஊருக்கு வரவேண்டும் என்று எங்களை அழைத்திருந்தார். நாங்கள் கர்த்தருடைய உத்தரவின்படி ஓர் நாள் அங்கு சென்றிருந்தோம்.

அவ்வூரில் பிரதரன் மிஷனைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் கொஞ்ச பேர்கள் உண்டு. ஒரு பள்ளிக்கூடத்தில் ஆராதனை செய்துகொண்டு வந்தார்கள். இந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரும் மானேஜருமானவரே இந்த சபையின் போதகராயிருந்தார். இந்தப் போதகரின் மகன் ஒருவர் எம்.ஏ.பட்டதாரி. இவர் எங்களுடன் பேச வேண்டுமென்று விரும்பி மேற்படி பள்ளிக்கூடத்துக்கு எங்களை அழைத்துப் போனார்.

வேதத்திலுள்ள அநேக சத்தியங்களைக் குறித்துப் பேசினோம். இறுதியில், ''கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த உடனே ஒரு ஆத்துமா பரிசுத்தாவியினால் முத்திரை போடப்பட்டாகிவிட்டது. ஆகையால் கர்த்தரை விசுவாசிக்கிற ஒருவரை மீண்டும் பரிசுத்தாவி பெற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்லக்கூடாது'' என்று கூறி (எபே 1:13ல்) உள்ள வசனத்தை வாசித்துக் காண்பித்தார்.

அவருக்கு பிரதியுத்தரமாக அப்படியல்ல சகோதரனே, இந்த எபேசு சபையின் விசுவாசிகளின் ஆரம்ப அனுபவத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். இவர்கள் ஞானஸ்நானத்தை மாத்திரம் பெற்று பரிசுத்தாவியின் அபிஷேகம் பெறாதவர்களாயிருந்தார்கள். இவர்கள் பரிசுத்தாவி உண்டென்று கேள்விப்படவில்லை. காரணம் இவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தவர் பரிசுத்தாவி பெறாதவர். ஆகையால் அப்போஸ்தலனாகிய பவுல், பரிசுத்தாவி உண்டென்றும், அதைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும் அவர்களுக்குப் பிரசங்கித்து இவர்களுக்கு மீண்டும் ஞானஸ்நானம் கொடுத்து இவர்களுக்காக ஜெபித்த பொழுது இவர்கள் பரிசுத்தாவியைப் பெற்று அந்நிய பாஷைகளைப் பேசி தீர்க்கதரிசனம் உரைத்தார்கள் (அப் 19:1-7) என்று கூறியிருக்கிறதே என்று வேத வசனங்களை விளக்கிக் காண்பித்தோம்.

அதுமட்டுமல்ல கவிசேஷகனாகிய பிலிப்பு சமாரியாவில் கவிசேஷம் அறிவித்த பொழுது ஏராளமான ஜனங்கள் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டார்கள். ஆனால் அவர்களில் ஒருவரும் பரிசுத்தாவியைப் பெற்று கொள்ளவில்லை என்பதை அப்போஸ்தலனாகிய பேதுருவும், யோவானும் கண்டு அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெறும்படி அவர்கள் தலை மேல் கைகளை வைத்து ஜெபித்த பொழுது பரிசுத்தாவியானவர் அவர்கள் மேல் இறங்கினார். (அப் 8:12-17) என்று எழுதியிருக்கிறதே என்று விளக்கினபொழுது அவர் ஒத்துக்கொண்டார்.

''நானும் பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ள விரும்பி அநேக கன்வென்ஷன்களுக்கும், ஆவிக்குரிய கூட்டங்களுக்கும் சென்றேன் எனக்கு ஏன் பரிசுத்தாவி கிடைக்கவில்லை?'' என்று கூறினார். ''நீங்கள் தாகத்தோடு தேவனிடம் கேட்டால் கட்டாயம் அவர் உங்கள் தாகத்தைத் தீர்ப்பார்'' என்று கூறினோம். ''எனக்கு பரிசுத்தாவி வேண்டும். எனக்காக நீங்கள் ஜெபியுங்கள்'' என்று கேட்டுக் கொண்டு முடிங்காலில் நின்றார்.

நாங்கள் அவருக்காக தலையில் கை வைத்து ஜெபம் பண்ணினோம். பரிசுத்தாவியானவர் அவர் மேல் இறங்குகிற வேளை நெருங்கி விட்டது. திடீரென்று ஒரு பலத்த கரம் எங்கள் கரங்களை அவருடைய தலையிலிருந்து பிடித்து இழுத்துவிட்டது. ''எழுந்திருடா முட்டாள்! படித்தும் மூளை இல்லையே'' என்று பலத்த குரலில் உறுமினது. நாங்கள் கண் விழித்துப் பார்த்தோம்.

ஒரு பெரிய உருவம் நின்று கொண்டிருந்தது. அடுத்து என்ன நடக்குமோ என்று எதிர்பார்த்தோம். இவர்தான் இந்தப் பள்ளியின் உரிமையாளர். மேற்படி சபையின் போதகர் முழுங்காலில் நின்ற பையனின் தகப்பனார். தகப்பனாரின் கோப முகத்தைக் கண்ட பையன் ஒன்றும் பேசாமல் எழுந்து போய்விட்டார். எங்களுக்கு மிகுந்த துக்கமாகி விட்டது. ஒரு சகோதரன் கர்த்தருடைய அன்பைப் பெற்றுக் கொள்ளும் வேளையில் சாத்தான் மனித உருவில் வந்துதடை செய்துவிட்டானே என்று கலங்கி ஜெபம் செய்தோம்.

கர்த்தருடைய ஆவியானவர் எங்களைத் தேற்றினார். ''இந்தப் பையன் பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளாதபடி தடை செய்வதற்கு காரணமாய் இருந்தவர்களை நான் தண்டிப்பேன் அப்படிப்பட்டவர்கள் மூலமாக இந்த ஊரில் என்னுடைய சபை எழும்பும், கலங்காமல் கடந்து போங்கள்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். கர்த்தர் மேல் எங்கள் பாரத்தை வைத்துவிட்டு நாங்கள் அவ்வூரை விட்டுக் கடந்து வந்துவிட்டோம்.

அடுத்த சிலமாதங்கள் கழிந்ததும் ''மேற்படி மலையடிப்பட்டியில் ஒரு

கன்வென்ஷன் நடத்தி அங்கே என்னுடைய சபையை உருவாக்க வேண்டும் நான் ஆத்துமாக்களை சந்திப்பேன்'' என்று கர்த்தர் பேசினார். அவ்வூரில் ஒரு சகோதரன் மாத்திரமே உண்டு. அவர் மூலமாய் அவ்வூரில் கன்வென்ஷன் ஒழுங்கு செய்யப்பட்டது. பம்பாயிலிருந்து தலைமைமேய்ப்பர் அவர்கள் வருகை தந்து மூன்று நாட்கள் கர்த்தருடைய செய்தியை மிகவும் ஆழமாகவும், அருமையாகவும் பேசினார்கள். அநேக மக்கள் கர்த்தரிடம் மனம் திரும்பினார்கள். கூட்டத்தின் கடைசி நாள் இரவில் கூட்டம் முடிந்த பிறகு, அவ்வூரிலுள்ள பிரதரன் சபையைச் சேர்ந்த சில வாலிபர்கள் மேய்ப்பரிடம் வந்து, ''நாங்கள் பல கேள்விகள் கேட்டு உங்களை மடக்க நினைத்தோம். ஆனால் செய்திகளில் எங்களுக்கு பதில் கிடைத்துவிட்டது. இப்போதும் எங்கள் ஊரில் சபையை உருவாக்குங்கள்'' என்று கேட்டுக் கொண்டனர். ''கர்த்தர் எங்களுக்கு இடம் தரும்போது ஆராதனை நடத்துவோம்'' என்று ஐயா சொன்னார்கள்.

அப்போது சாமுவேல் ராஜையா என்ற ஆசிரியர் தன் வீட்டில் சபையை ஆரம்பிக்க வேண்டிக் கொண்டார். கர்த்தர் ஏற்கனவே வெளிப்படுத்தினபடி அந்த வீட்டில் சபை ஆரம்பமானது. முதல் நாள் கூட்டத்தில் சாமுவேல் ராஜையா அவர்களின் மனைவி சொன்ன சாட்சி, கடந்த நாட்களில் எங்கள் வீட்டில் யாவருக்கும் அம்மை நோய் கண்டு மிகவும் வேதனைப் பட்டோம். ஒரு நாள் நான் கண்ணீரோடே, ''ஆண்டவரே, நாங்கள் என்ன தவறு செய்தோம். எங்கள் தவறை காண்பித்தால் சரி செய்து கொள்வோம்'' என்று ஜெபித்தேன்.

அன்று இரவில் தரிசனத்தில் வெள்ளையங்கி தரித்த ஒருவர் தோன்றி, ''உங்கள் ஊருக்கு என் ஊழியர்கள் இரண்டு பேரை அனுப்பினேன். அவர்கள் என் சித்தம் செய்யாதபடி நீங்கள் தடை செய்ததால் உங்களைத் தண்டித்திருக்கிறேன்'' என்றார். அதற்கு நான் ''ஆண்டவரே அவர்கள் உம்மால் அனுப்பப்பட்டவர்கள் என்று எங்களுக்குத் தெரியாமல் அப்படி செய்துவிட்டோம். இந்த குற்றத்தை எங்களுக்கு மன்னிக்க வேண்டும் என்று வேண்டினேன். மேலும், இனிமேல் அவர்கள் வந்தால், நாங்கள் ஏற்றுக்கொண்டு, நாங்களும் அவர்களுடன் சேர்ந்து கொள்கிறோம்'' என்றேன்.

அதிகாலையில் எழுந்த பொழுது வீட்டிலுள்ள யாவரும் சுகமடைந்து விட்டார்கள். நான் கண்ட தரிசனத்தை வீட்டில் யாவருக்கும் சொன்னேன். அது முதல் அந்த ஊழியர்களின் வரவை எதிர் பார்த்தோம்.

இப்போது நாங்கள் ''புதிய எருசலேம் சபை, கர்த்தருடைய சபை'', அதன் ஊழியர்கள் தேவனால் அனுப்பப்பட்டவர்கள். அவர்கள் மூலம் கர்த்தர்

செய்யும் ஊழியத்தை நடை செய்ய விரும்புகிறவர்களை கர்த்தர் தண்டிப்பார் என்பது நாங்கள் கண்டு அனுபவித்த காரியம்'' என்று சாட்சி சொல்லி முடித்தார்கள்.

மேற்படி பள்ளியில் நாங்கள் பள்ளி மேலாளருடைய பையனுக்காக ஜெபிக்கும் போது, இந்த அம்மாவினுடைய வீட்டார்கள் தான் அந்த பையனின் தகப்பனாரிடம் போய், உங்கள் பையன் தலையில் பெந்தகோஸ்துகாரர்கள் கை வைத்து ஜெபிக்கிறார்கள். சீக்கிரம் வந்து தடை செய்யுங்கள் என்று சொல்லி அவரை அழைத்து வந்தார்கள். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக.

இந்த மலையடிப்பட்டி ஊழியத்தை மிகவும் பாரத்தோடு செய்து வந்தோம். ஞாயிறு காலை துரைசாமிபுரத்தில் பரிசுத்த ஆராதனை நடத்திவிட்டு மாலை சுமார் 5-மணியளவில் அங்கிருந்து சில வாலிபர்களோடு கரிவலம் வரையிலும் பஸ்ஸில் வருவோம். அங்கிருந்து வாடகை சைக்கிள் எடுத்துக் கொண்டு மலையடிப்பட்டிக்குப் போய் சேருவோம். இரவு 7 மணிக்கு ஆராதனை ஆரம்பித்து சுமார் 9.30 மணிக்கு கூட்டத்தை முடித்துக் கொண்டு இராத்திரியே ஊருக்குப் புறப்பட்டு விடுவோம். இரவில் அங்கே தங்கிப் போகச் சொல்லுவார்கள். புதிதாய் சந்திக்கப்பட்ட மக்கள் அவர்களுக்கு நாம் பாரமாய் இருந்துவிடக் கூடாதே என எண்ணி நாங்கள் புறப்பட்டு விடுவோம்.

அதற்குப் பின்பு கரிவலத்திலிருந்து துரைசாமி புரத்திற்கு பஸ் கிடையாது. கரிவலத்திலும் நாங்கள் தங்கிச் செல்வதற்குரிய இடமும் கிடையாது. இந்த மலையடிப்பட்டிக்கும் கரிவலத்திற்கும் இடையில் கரிவலம் ஊரின் இரயில் நிலையம் இருக்கிறது. நாங்கள் சகோதரர்களுடன் அங்கே வந்து இரயில் நிலையத்தில் எங்கள் சைக்கிளை வைத்துக்கொண்டு, அங்கே திறந்த வெளியில் தங்கிவிட்டு அதிகாலையில் எழுந்து கரிவலத்தில் சைக்கிள்களைக் கொடுத்துவிட்டு அங்கிருந்து பஸ்ஸில் துரைசாமிபுரம் செல்வோம்.

அப்பொழுதெல்லாம் அந்த இரயில் நிலையத்தில் விடியும் வரையிலும் ஜெபித்துக் கொண்டேயிருப்போம். ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் மாத்திரமே அந்த ஸ்டேஷனில் இருப்பார். வேறு யாரும் இரவில் அங்கே வரமாட்டார்கள். அப்பொழுது, ''ஆண்டவரே! இந்த ஸ்டேஷன் மாஸ்டர் உம்முடைய பிள்ளையாக இருந்தால் எங்களை உள்ளே தங்க வைத்து அனுப்புவாரே'' என்று நாங்கள் ஆண்டவரை நோக்கி ஜெபித்ததுண்டு. மெய்யாகவே தேவன் எங்கள் ஜெபத்திற்கு செவி கொடுத்தார். (சங் 66:19-29) அடுத்து சில

மாதங்களுக்குள்ளாக நமது சகோதரர் ஒருவர் அதே ஸ்டேஷன் மாஸ்டராகப் பணியாற்ற வந்தார். கர்த்தருக்கே மகிமை செலுத்துகிறோம்.

நாங்கள் இவ்விதமாய் இரவில் இரயில் நிலையத்தில் தங்கி போகிறோம். என்பதை அறிந்த மலையடிப்பட்டி சபை விசுவாசிகள் ''நீங்கள் இரவில் ஆகாரம் அருந்திதான் போக வேண்டும். நீங்கள் இரவிலேயே ஊருக்கு போய்விடுவீர்கள் என்று எண்ணியல்லவா நாங்கள் உங்களை உணவு அருந்த வற்புறுத்தாமல் விட்டுவிட்டோம். இனி அப்படிச் செல்ல வேண்டாம்'' என்று வேண்டிக் கொண்டார்கள். இவ்விதமாய் இந்த ஊழியம் பலப்பட ஆரம்பித்தது. ஆத்துமாக்கள் பலரைக் கர்த்தர் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார்.

ஊழியம் விரிவடைய ஆரம்பித்ததும், சாத்தானும் தன்னுடைய வேலையைச் செய்ய ஆரம்பித்துவிட்டான். நாங்கள் ஆராதிக்கிற வீட்டின் அடுத்த காம்பவுண்டுக்குள் ஒருமனிதன் ஒரு பெரிய தகர டப்பாவைப் போட்டுஅடிப்பான். நாங்கள் பாட்டு பாடி முடித்ததும் அவன் ஆரம்பித்து விடுவான். ரொம்ப சந்தடியாக இருக்கும். ஊரிலுள்ள சில பெரியவர்கள் அவனைக் கடிந்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு தெய்வத்தைத் தொழுதுகொள்கிறார்கள். உனக்கு அது பிடிக்காது போனால் அமைதியாக இருக்க வேண்டியதுதானே. ''இப்படி ஏன் டப்பாவை அடித்து இடையூறு செய்கிறாய்'' என்று கேட்டிருக்கிறார்கள். ''நீங்கள் யாரும் என்னிடம் பேசாதிருங்கள். அவர்களுடைய தெய்வத்துக்கு வல்லமை உண்டென்று சொல்லுகிறார்களே, அந்த தெய்வம் வந்து என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்து நிறுத்தி அடிக்காதே என்று சொல்லட்டுமே.''

அப்படியானால், நான் அடிப்பதை நிறுத்துகிறேன்'' என்று கேட்கிறவர்களிடம் கூறியிருக்கிறான். இவ்விதமான பதிலைக் கேட்ட பெரியவர்களில் ஒருவர் எங்களிடம் வந்து, ''இவனைப் போலீசில் மனுக்கொடுத்து உள்ளே தள்ளுங்கள். அவர்கள் இவன்முதுகில் நாலு போட்டால் தான் இவன் சரி படுவான்'' என்று கூறினார்கள். ''நாங்கள் போலீசிடம் போகமாட்டோம். ஆண்டவரிடமே சொல்லுவோம்'' என்று கூறி ஆண்டவரிடம் ஜெபம் பண்ணினோம்.

சில நாட்களுக்குப் பிறகு அந்த டப்பா அடிக்கும் சத்தம் கேட்கப்படவில்லை. வெளியூருக்குப் போயிருப்பார் ஆசாமி என்று நாங்கள் எண்ணியிருந்தோம். ஒரு மாதம் கழித்து நாங்கள் அங்கே ஆராதனை முடித்துவிட்டு நோயாளிகளுக்காக ஜெபம் பண்ணிக் கொண்டிருக்கும்பொழுது ஒரு நடுத்தரமான வயதுடைய ஒருவர் ஒட்டிய

வயிறுடன் நடக்க முடியாமலும், பேச முடியாமலும் வந்து முழங்கால் படியிட்டார். ‘‘நீங்கள் யார்? உங்களுக்கு என்ன செய்கிறது?’’ என்று கேட்டோம் விம்மி விம்மி அழுதார்.

‘‘ஐயா! என்னை மன்னித்து விடுங்கள். உங்களுக்கு விரோதமாய் தீமை செய்த பாவிநான். உங்கள் ஆராதனைக்கு இடையூறு செய்யும்படி என்னுடைய இருகரங்களினால் டப்பாவை அடித்தேன். இப்பொழுதோ என்னுடைய இரண்டு கைகளும் விளங்காமல் போய்விட்டது. நீங்கள் ஆவியில் நிறைந்து சப்தம் போடுவது போல் நானும் குடித்து விட்டு சப்தம் போடுவேன். இப்பொழுதோ பேச முடியாதபடி என் தொண்டை அடைத்துவிட்டது. நான் பிழைக்கும்படியாக எனக்காக ஜெபம் பண்ணுங்கள். நான் இனி ஒருக்காலும் ஆண்டவனுக்கு விரோதமாய் பாவம் செய்ய மாட்டேன்,’’ என்று மன்றாடினார்.

அந்த ஊர்விசுவாசிகளுக்கே அவருடைய உருவத்தைக் கண்டு அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவ்வளவுப் பரிதாபமான நிலைமையில் காணப்பட்டார். தீமை செய்பவர்களுக்கோ கர்த்தருடைய முகம் விரோதமாய் இருக்கிறது (I. பேது3:12) என்ற வேத வாக்கியத்தை எண்ணி கர்த்தரை ஸ்தோத்தரித்தோம். பிறகு அவர் அந்த ஊரைவிட்டே வெளியேறி வேறு ஊருக்குச் சென்றுவிட்டார்.

இன்றைக்கு நீங்கள் காண்கிற எகிப்தியரை இனி என்றைக்கும் காணமாட்டீர்கள் (யாத் 14:13) என்ற வசனம் எங்களுக்கு ஞாபகம் வந்தது.

இந்த சங்கரன் கோயில் வட்டாரங்களில் கர்த்தருடைய வேலை வளருகிறதைக் கண்ட சாத்தான் இந்த வேலையைத் தடைசெய்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு பலவிதமான போராட்டங்களை உண்டு பண்ணினான். முக்கியமாக என்னையும் உடன் ஊழியரையும் அந்த பிரதேசங்களுக்கு வரவிடாமல் தடை செய்ய வேண்டும். சந்தர்ப்பம் கிடைத்தால் எங்களை கொன்றுவிட வேண்டும் என்றும் பெரிய வேலைகள் செய்யப்பட்டது. ‘‘உன்னை அனுப்புகிறவர் நான் அல்லவா’’ (நியா 6:14) என்று கிதியோனோடே அன்று சொன்ன ஆண்டவர் இன்றும் எங்களோடு பேசி தம்முடைய காரியமாய் எங்களை அனுப்ப வேண்டிய இடத்துக்கு எங்களை அனுப்பி வருகிறார். அதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறோம்.

நாங்கள் சங்கரன் கோயில் வட்டாரத்துக்குப் புறப்படுவதற்காக கர்த்தரிடம் உத்தரவு பெற்று இன்ன நாளில் நாங்கள் அங்கு வருகிறோம் என்று அங்குள்ள ஊழியருக்கு கடிதம் எழுதி அவர் அங்குள்ள விசுவாசிகளுக்கு செய்தி அறிவிப்பது வழக்கம். இப்படிப்பட்ட நாட்களில்

அங்குள்ள மந்திரவாதி ஒருவர் தன்னிடமுள்ள தீய சக்திகளை அனுப்பி எங்களுடைய பிரயாணங்களைத் தடைசெய்யப் பிரயாசப் படுவதுண்டு. ஆனால் அவைகள் எங்கேயிருந்து? யாரால் அனுப்பப்படுகிறது என்பதை நாங்கள் அறிந்து கொண்டு அவைகளைக் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கடிந்து துரத்தி விடுவதுமுண்டு.

இப்படிக் காலங்கள் கடந்து போனது. சில ஆண்டுகளுக்கு பிறகு நாங்கள் ஒரு நாள் மதுரை ஜில்லா ஊழியத்தை முடித்துக் கொண்டு இந்த சங்கரன் கோயில் வட்டத்திலுள்ள துரைசாமிபுரம் சபைக்கு வந்து கொண்டிருந்தோம். நாங்கள் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சிவகிரி வழியாக இராயகிரி வந்து இந்த துரைசாமிபுரத்துக்கு வந்தோம்.

ஒருநாளும் இந்தப் பாதை வழியாக நாங்கள் வந்ததில்லை. அன்று ஆவியானவர் எங்களை இந்தப் பாதை வழியாக அழைத்து வந்தார். இராயகிரி வந்ததும் இரவு சுமார் 9.30 மணியிருக்கும். அதற்கு அப்புறம் துரைசாமியாபுரம் செல்ல பஸ் கிடையாது என்று அறிந்து கொண்டோம். அங்கிருந்து சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்தில் இந்த துரைசாமிபுரம் உள்ளது. இரவு 10 மணிக்குமேல் நாங்கள் எங்கள் கைப்பைகளையும் தூக்கிக் கொண்டு கால்நடையாய்க் சென்றோம். அமாவாசை தினம் மிகுந்த இருட்டாகவே இருந்தது. கர்த்தரை மகிமைப்படுத்திக் கொண்டே கால்நடையாக சென்று கொண்டு இருந்தோம். பாதிதூரம் நடந்து வந்ததும் எங்கள் இருவருக்குள்ளும் கர்த்தருடைய வல்லமை இறங்கியது (நியா 14:6) இருவரும் அதற்கு மேல் நடக்க முடியாதபடி நின்று விட்டோம்.

வலது புறத்தில் உங்களைத் தாக்குவதற்காக நிறுத்தியிருக்கும் தீய சக்தியை அதட்டுங்கள் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். உடனே கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினால் அந்த ஆவியைக் கடிந்து கொண்டோம். அந்த ஆவி அந்த இடத்தை விட்டு உடனே வேகமாய் கடந்து போய், எங்களுக்கு விரோதமாய் அந்த ஆவியை அனுப்பின மந்திரவாதியைப் போய் ஒரு இமைப்பொழுதில் தாக்கிவிட்டது. அந்த மந்திரவாதியின் அபயக்குரல் ஆவிக்குள்ளாயிருந்த எங்கள் காதுகளில் தொனித்தது.

மறுபடி நாங்கள் கர்த்தருடைய பெலத்தினால் தொடர்ந்து பிரயாணம் பண்ணி இரவு சுமார் 11 மணிக்கு துரைசாமிபுரம் வந்து சேர்ந்தோம். அங்குள்ள ஊழியர் ராஜசுந்தரிடம் நடந்த சம்பவத்தைக் கூறினோம். மந்திரவாதி தான் பயன்படுத்திய சக்தியினாலேயே தாக்கப்பட்டு விட்டார். காலையில் செய்தி கிடைக்கும் என்று கூறினோம்.

மறுநாள் பரிசுத்த ஆராதனை நடந்தது. அன்று மாலையில்

மந்திரவாதியை மருத்துவமனையில் சேர்த்திருப்பதாக செய்தி வந்தது. சில நாட்களுக்குள்ளாக மரித்துப் போனார். பிசாசானவன் கொல்லவும் அழிக்கவுமே வருகிறான். இதை அறியாத அநேக ஆயிரம் மக்கள் பிசாசையே தெய்வமென்றெண்ணி வணங்குகிறார்கள்.

தம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவையும் விடுதலை செய்கிறார். (அப் 10:38)

சர்ப்பங்களையும், தேள்களையும் மிதிக்கவும், சத்துருவினுடைய சகல வல்லமையையும் மேற்கொள்ளவும் உங்களுக்கு அதிகாரம் கொடுக்கிறேன். ஒன்றும் உங்களைச் சேதப்படுத்த மாட்டாது - (லூக் 10:19.)

## தடை செய்கிறவன் சாத்தான்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, நம்முடைய தேவன் நமது மத்தியில் எப்பொழுதும் அற்புதங்களை செய்து நம்முடைய விசுவாசத்தைப் பலப்படுத்த விரும்புகிறார். நம்முடைய வாழ்க்கையில் ஓர் அற்புதம் நடக்கவிருக்கிறதென்றால் அதற்கு பின்னால் ஒரு நெருக்கடியான. கலக்கமான, பயங்கரமான, குறைவான ஒரு சூழ்நிலையை காணுகிறோம்.

முன்னாலே சிவந்த சமுத்திரத்தையும் பின்னாலே பார்வோனின் சேனைகளையும் பார்த்ததும் இஸ்ரவேலர்களுக்கு பெரிய பயம் உருவானது. அடுத்து நடந்த அற்புதத்தில் இந்தப் பயம் மாறினது. அப்படியே மாராவில் தண்ணீர் கசப்பானது உள்ளத்திற்கெல்லாம் வெறுப்புண்டானது. தண்ணீர் நல்ல தண்ணீரானதும் அந்த கசப்பு மாறிவிட்டது. சீஷர்களோடு ஆண்டவர் படகில் பயணம் செய்தார். கடல் கொந்தளித்து படகு அமிழ்ந்து போகும் சூழ்நிலையில் சீஷர்கள் பயந்து அலறினார்கள். இயேசு காற்றையும், கடலையும் அதட்டினார். பெரிய அமைதி உண்டானது. அப்படிப் போல தேவனுடைய வேலை தீவிரமடையும் போது சாத்தானும் கோபாவேசம் கொண்டு தேவனுடைய வேலையை தடை செய்ய பல உபாயங்களை கையாள்வதுண்டு.

பவுலும், சீலாவும் கர்த்தர் சொல்லுகிற இடங்களுக்குப் போய் கர்த்தருடைய வேலைகளை திட்டமாய் செய்து வந்ததை பொறுக்க முடியாத சாத்தான் பவுலையும், சீலாவையும் அடித்து இரத்த கறையாக்கி உட்காவலறையிலே கால்களை தொழு மரத்தில் மாட்டி சித்ரவதைச் செய்ய ஏற்பாடு செய்தான். தேவன் தம்முடைய ஊழியக்காரர்களைக் கைவிட்டது போல் காணப்படலாம். அங்கேயும் கர்த்தர் பலத்த அற்புதம் நடப்பித்து தம்முடைய ஊழியக்காரர்களோடு தாம் வாசம் பண்ணுவதை வெளிப்படுத்தினார்.

எங்களுடைய ஊழியக்காலங்களிலேயும் புதிதாக ஆத்துமாக்கள் சந்திக்கப்படும்பொழுது புதிய இடங்களுக்கு ஊழியம் செல்லும் பொழுது அவைகளை தடை செய்யும் பொருட்டு வீட்டில் குழந்தைகளை பெலவீனப்படுத்தி என்னுடைய ஆத்துமாவைச் சோர்ந்து போகச் செய்வதற்கு பலமுறை பல காரியங்களை செய்து சாத்தான் தோல்வியடைந்து போனான்.

நடந்த ஒரு சம்பவத்தை கூறிகிறேன். ஆகஸ்ட் மாதம் (1986). நாங்கள் மதுரை மாவட்டத்திலுள்ள கிளை சபைகளை சந்திக்க கடந்து போனோம். அங்கே ஞானஸ்நானம் பெறுவதற்கு ஒப்புக் கொடுத்திருந்த ஆத்துமாக்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும், என்று கர்த்தருடைய ஆலோசனை பெற்று 2-9-1986 அணைப்பட்டி என்ற இடத்தில் ஞானஸ்தானம் கொடுக்கப்படும், சபை மக்களும் ஞானஸ்தானம் பெறு விரும்புகிறவர்களும், வைகை ஆற்றுக்கு வந்து சேரும்படி 31-8-1986 பரிசுத்த ஆராதனையில் மதுரை மாவட்டத்திலுள்ள எல்லா கிளை சபைகளிலும் அறிவிப்புக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அநேகமாக காலை ஆராதனை பிற்பகல் 2 மணிக்குள் எல்லா சபைகளிலும் நடந்து முடியும், அதே நேரத்தில் இந்த ஞானஸ்நான அறிவிப்புகளும் ஏக காலத்தில் கொடுக்கப்பட்டிருக்கும்.

ஆனால் நடந்ததென்ன தெரியுமா? எனது இரண்டாவது பையன் +2 படிப்பவன், பெயர் சாதுசுந்தர்சிங், இவனும் இன்னொரு சகோதரனுமாக வள்ளியூரிலிருந்து பக்கத்திலுள்ள மகிழ்ச்சிபுரம் என்ற ஊரிலுள்ள ஆராதனைக்குப் போய் விட்டு ஆராதனை முடித்து வீடு வரும்பொழுது பையனுக்கு இரண்டு கால்களும் இடுப்புக்கு கீழே பெலஹீனப்பட்டு கால் நடக்க முடியாமல் ஆகிவிட்டது.

உடன் சென்றிருந்த சகோதரர் மெதுவாக தாங்கி வீட்டில் கொண்டு வந்து சேர்த்துவிட்டார். இரவில் நிலைமை மோசமாகவே நாகர்கோவில் அருகேயுள்ள புத்தேரி ஆஸ்பத்திரியில் பையனை சேர்த்துவிட்டு 1-9-1986ல் எனக்கு மதுரை மாவட்டத்திலுள்ள பள்ளப்பட்டிக்கு தந்தி கொடுத்திருக்கிறார்கள்.

ஏன் இதை எழுதுகிறேன் என்றால், சாத்தான் ஆதியிலிருந்தே தேவனுடைய திட்டத்தை தடை செய்கிறவன் ஆகையால், அப்: பவுல் சாத்தானுக்கு 'தடை செய்கிறவன்' என்ற பெயரை வைத்திருக்கிறார். (II தெச: 2:7) இதிலே கர்த்தரின் செயலை பாருங்கள். திங்கள் அதிகாலையில் கொடுத்த தந்தி அன்று மாலையில் எனக்கு கிடைத்திருக்க வேண்டும். கிடைக்கவில்லை. மறுநாள் காலை 9-30 மணிவரையிலும் நாங்கள்

பள்ளப்பட்டியில் இருந்தோம். தந்திவரவில்லை. ஞானஸ்நான ஆராதனையை முடித்துவிட்டு 38பேர் ஞானஸ்தானம் பெற்று கிறிஸ்துவுடன் சேர்க்கப்பட்டார்கள். மாலை 5 மணிக்கு பள்ளபட்டி வந்து சேர்ந்தோம். அப்பொழுது தான் தந்தியை எங்கள் கையில் தேவன் கிடைக்கச் செய்தார்.

கர்த்தருடைய ஊழியத்தை வெற்றியோடு முடித்துவிட்டோம். கர்த்தர் குழந்தைக்கு சுகம் கொடுப்பார் என்று சபை மக்கள், ஊழியர்களிடம் கூறிவிட்டு, வள்ளியூர் வந்து, பின்னர் மருத்துவமனை சென்றோம். பையனை பார்க்கும் பொழுது மிகவும் கவலையாகத் தான் இருந்தது. ஆனாலும் இதிலும் தேவனுடைய சித்தம் ஒன்றுண்டு என்பதை எண்ணி கர்த்தரை மகிமைப் படுத்தினேன். பையனுக்காக ஊக்கமாக ஜெபித்தோம். இரு கால்களும் அசைக்க முடியாதிருந்த பையன் இரு கால்களையும் அசைக்க ஆரம்பித்தான். மறுநாள் டாக்டர் வந்து பையன் சுகமாகி விட்டதை கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். நாங்கள் எல்லா பரிசோதனையையும் செய்தும் வியாதியைக் கண்டுபிடிக்க முடியாத நிலையாகி விட்டது. ஆனால்! கர்த்தர் பையனுக்கு பெலன் கொடுத்திருக்கிறார்'' என்றார்.

பையனுக்காக தினமும் ஜெபித்து வரும்பொழுது பெங்களுருக்குச் செல்ல வேண்டும் என்று கர்த்தர் பேசினார். கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனாலும் நம்முடைய பிள்ளையை கர்த்தர் பாதுகாத்துக் கொள்வார் நாம் அவருடைய சித்தப்படி செய்வோம் என முடிவு செய்து கொண்டு 12-9-1986 நள்ளிரவில் புறப்பட்டு 13-9-86 பிற்பகலில் பெங்களூர் போய்ச் சேர்ந்தோம். தலைமை மேய்ப்பரின் உத்தரவின்படி பெங்களூரில் புதிதாக ஓர் இடத்துக்கு ஆராதனை ஸ்தலம் மாற்ற வேண்டியது இருந்ததால் அங்கு சென்றோம். 14-9-86 பரிசுத்த ஆராதனையை அந்தப் புதிய இடத்தில் ஆரம்பித்து நடத்தினோம். கர்த்தருடைய மகிமை எருசலேம் தேவாலயத்தை நிரப்பினது போல் அந்த ஆராதனை ஸ்தலத்தை கர்த்தருடைய மகிமை நிரப்பினது கர்த்தருக்குகே மகிமையுண்டாவதாக!

அன்று புதிதாக ஒரு வாலிபன் ஆராதனைக்கு வந்திருந்தார். அவர் பெயர் ஜேக்கப். இவருக்கு நீண்ட நாள்களாய் குடல்வியாதியால் மிகவும் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார். மருத்துவரால் குணமாக்க முடியவில்லை. அந்த ஆராதனையின் போது, அந்த சகோதரனிடம் ஒரு அசுத்த ஆவி குடிகொண்டிருந்து, அவனைப் பெலவீனப் படுத்துகிறது. அவன் தன்னுடைய பாவங்களை அறிக்கையிட்டால் விடுதலையுண்டாகும் என்று தேவன் வெளிப்படுத்தினார். அவருக்கு ஆலோசனைக் கொடுத்தோம். தன்னுடைய பாவங்களை தேவ சமூகத்தில் அறிக்கையிட்டார். அவரிடம் குடி கொண்டிருந்த ஒரு அசுத்த ஆவி மிகவும் ஆவேசமாய் சத்தமிட்டு

அவரை கீழே தள்ளிவிட்டு ஓடிவிட்டது. பின்னர் அந்த வாலிபன் எழுந்து மிகவும் சந்தோஷப்பட்டார். அவருடைய வியாதி நீங்கிவிட்டது. வாழ்க்கையில் என்றுமில்லாத மகிழ்ச்சியை அவர் அடைந்து அநேகரை திருச்சபைக்கு கொண்டு வருகிறார். தேவனுக்கு மகிமையுண்டாவதாக!

பின்னர் அங்கிருந்து வள்ளியூர் வந்து மீண்டும் மருத்துவமனைக்குப் போய் பையனுக்காக ஜெபித்தோம். அற்புதமாய் பையன் தெய்வீக சுகமடைந்து காலூன்றி நடக்க பெலன் பெற்றான். அநேக நோயாளிகளும் கர்த்தருடைய வல்லமையால் குணமடைந்து தேவன் குணப்படுத்தினார் என்று படுக்கைகளைக் காலிபண்ணிவிட்டு கடந்து போனார்கள். பவுனும், சீலாவும் சிறைச்சாலை சென்றபடியால் சிறைச் சாலை தலைவன் சந்திக்கப்பட்டது போல இந்த நாட்களிலும் சாத்தான் குழந்தையை பெலவீனப்படுத்தி மருத்துவமனைக்கு அனுப்பினாலும் கர்த்தர் அங்கேயும் தம்முடைய நாமத்தை மகிமைப் படுத்தினார். அநேகரை சந்தித்துள்ளார். அல்லேலூயா!

அத்தியாயம் 15

# கர்த்தரின் சபை பள்ளப்பட்டியில்

பிரியமானவர்களே, தேவனாகிய கர்த்தர் எங்களைக் கொண்டு சொன்னவைகளையும் செய்தவைகளையும் எழுதப்போனால் ஏடு போதாது. எனினும் தேவனாகிய கர்த்தர் புதிய எருசலேம் சபையைக் கட்டி எழுப்புகிறார். எருசலேமில் தேவன் வாசம் பண்ணுகிறார். (சக. 8:3) என்பதை நீங்களும் அறிந்து மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்பதற்காகவே சிலவற்றைத் தொடர்ந்து உங்களுக்கு எழுதுகிறோம்.

மதுரை மாவட்டம், கொடைரோடுக்கு அருகே அம்மைய நாயக்கனூர் என்ற ஊரில் பலசரக்கு கடை ஒன்றில் வேலை பார்க்கும் ஐசக்ஞானையா என்ற வாலிபருடைய சகோதரன் கிளாரன்ஸ் மருதையா என்பவர். இவர் தற்பொழுது 'அசெம்ப்ளீஸ் ஆப் காட்' சபையில் பாஸ்டராகப் பணியாற்றுபவர். கிளாரன்ஸ், ஐசக்குனையாவை வள்ளியூருக்கு அழைத்து வந்தார். அவருடைய பழைய பெயர் சண்முகம். இவர் இளம் வயதிலேயே தன்னுடைய சொந்த குலதெய்வத்துக்கு பூசை செய்பவர். இவருடைய தகப்பனார் ஓர் பேர் பெற்ற வைத்தியர். இவருடைய சொந்த ஊர் சிங்கம்புனரியாகும்.

இவரை அழைத்து வந்த சகோதரர் கிளாரன்ஸ் மருதையா ஏற்கனவே எங்களுக்கு அறிமுகமானவர். இவனுடைய வியாதிக்காக நீங்கள் ஜெபிக்க வேண்டும் என்று கூறி அவரை எங்களிடம் விட்டுவிட்டு அவர் போய்விட்டார்.

சகோதரர் ஐசக்ஞானையாவை நாங்கள் வள்ளியூரில் தங்க வைத்து அவருக்காக உபவாசித்து ஜெபித்தோம். அவருடைய சரீரம் மிகவும் வீங்கிவிட்டது. கை கால்கள் வெடித்து நீர் வடிய ஆரம்பித்தது. அவர் தரையிலே படுத்திருந்தால் அரைப்படிவரை தண்ணீர் பெருகி நிற்கும் ஆராதனையில் உட்கார்ந்தால் மூன்று வஸ்திரங்களை ஒன்றின் மேல் ஒன்றாக கட்டிக்கொள்வார். ஆனாலும் அவைகள் சீக்கிரமாய் நனைந்துவிடும். தன் பாவங்களையெல்லாம் தேவ சமூகத்தில் அறிக்கையிட்டார். தேவன் அவரைக்குறித்த சித்தத்தை வெளிப்படுத்தினார்.

''இவனை நான் சீக்கிரம் குணமாக்குவேன். இவன் தனியாக வீடு எடுத்து சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஜெபிக்க வேண்டும். சொந்த ஊருக்குப் போகக்கூடாது. சீக்கிரமாய் இவனைப் பரிசுத்த ஆவியினால் நிரப்பி சாட்சியாக நிறத்துவேன் இவனுடைய வியாதியை நான் குணமாக்குவேன். விசுவாசத்தோடு இவன் கடந்து போகட்டும்'' என்று கர்த்தர் பேசினார்.

நாங்கள் இவருக்கு ஆறுதல் கூறி அனுப்பிவிட்டோம். திருநெல்வேலியிலிருந்து இரயில் ஏறி கொடை ரோட்டில் இறங்கி இவர் வேலைப்பார்க்கும் கடைக்குப்போனார். இவர் ரயிலில் பிரயாணம் செய்யும் பொழுது கால்களைக் தொங்கவிட்டுப் போனதால் இரண்டு கால்களும் மிகப்பருமனாய் வீங்கிவிட்டது. சரீரமும் ரொம்ப பெரிதாக ஊதிவிட்டது. இவரைக் கண்ட கடையில் வேலை பார்க்கும் நண்பர்கள் மிகவும் கவலைப் பட்டிருக்கிறார்கள்.

''என்ன ஐசக் அண்ணே! போகும் பொழுது இருந்ததைவிட ரொம்ப மோசமாய் வந்திருக்கிறீர்களே. அங்கு என்ன சொன்னார்கள் என்று கேட்டிருக்கிறார்கள். ''சீக்கிரம் சுகம் கிடைக்கும் என்று கர்த்தர் பேசினார். வண்டியில் பிரயாணம் செய்தபடியால் சரீரம் மிகவும் ஊதிவிட்டது'' என்பதாக இவர் கூறியிருக்கிறார். கடையிலுள்ள முதலாளியும், வேலைக்காரர்களும் சாப்பிடுவதற்கு கடையிலே ஒரு மெஸ் வைத்திருக்கிறார்கள். இரவு சாப்பாடு வேளை வரவே, ''ஐசக் அண்ணே! சாப்பிட வாங்க'' என்று நண்பர்கள் இவரை மெஸ்சுக்கு அழைத்துப் போயிருக்கிறார்கள். முதலாளியும் சாப்பிட வந்திருக்கிறார். திடீரென்று முதலாளியின் பார்வை இந்த சகோதரர் ஐசக்ஞானையாவின் மீது விழுந்தது. ''யார் இந்த ஆள்?'' என்று கேட்டிருக்கிறார். இது நம்ம அண்ணன் சண்முகம் தான்'' என்று கூறியிருக்கிறார்கள். ''யார்? ஐசக்ஞானையாவா? என்னப்பா! இப்படி உன்னைப்பார்க்க ரொம்ப பயமாக இருக்கிறது. இப்படி ஒரே மெஸ்சில் சாப்பிடுவது நல்லதல்ல. நாளைக்கே உன் சொந்த ஊருக்குப் போய்விடு. வியாதி சுகமான பிறகு வந்தால் போதும்'' என்று கடை முதலாளி ரொம்ப வெறுப்பாகவும் கண்டிப்பாகவும் சொல்லிவிட்டார். கஷ்டப்பட்டு சாப்பிட்டுவிட்டு கடையை விட்டு வெளியே வந்து தெரு ஓரத்தில் ஓர் ஒட்டுத்திண்ணையில் அமர்ந்து இனி என்ன செய்வது என்று சிந்தித்துக் கொண்டேயிருந்திருக்கிறார்.

இவர் வள்ளியூரிலிருந்து வந்துவிட்டாரா என்று இவரைப் பார்ப்பதற்காக இவருடைய கிறிஸ்தவ நண்பர் ஒருவர் அந்த வழியாக வரவே, ''சகோதரரே, எங்கே போகிறீர்கள்?'' என்று ஐசக்ஞானையா கேட்டிருக்கிறார். ''சகோதரரே! யார் நீங்கள் ஐசக் ஞானையாவா? ஏன் இங்கு வந்து இருக்கிறீர்கள்?'' வள்ளியூரிலிருந்து எப்போ வந்தீர்கள் உடல் நிலை எப்படி இருக்கிறது? என்று கேட்டுக் கொண்டே கிட்ட வந்திருக்கின்றார். இவருடைய உருவத்தைப் பார்த்ததும், அவரும் பயந்துபோய் விட்டார். ''என்ன சகோதரரே? போகும் பொழுது நன்றாகப் போனீர்களே! இப்பொழுது ஏன் இப்படி ஆகிவிட்டது?'' என்று கேட்டிருக்கிறார்.

‘‘சகோதரரே, நாளைக் காலையில் உங்களைப் பார்க்க வரவேண்டும் என்று எண்ணினேன். எனக்கு வியாதி சுகமாகும். சொந்த ஊருக்குப் போகக்கூடாது. தனியாக இடம் எடுத்து சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஜெபம் செய்யவேண்டும் என்று, ஆலோசனை சொல்லி அனுப்பினார்கள். ஆனால்! கடை முதலாளியோ என்னை வெளியே அனுப்பிவிட்டார். சொந்த ஊருக்குப் போய் சுகமாக்கி கொண்டு வா’’, என்று கூறிவிட்டார். கர்த்தருடைய வார்த்தையோ நீ சொந்த ஊருக்குப் போகக் கூடாதென்றிருக்கிறது.

எனவே நான் ஒரு தீர்மானம் செய்திருக்கிறேன். கர்த்தர் என் வியாதியைக் குணமாக்கும் வரையிலும் பகல் முழுவதும் அருகிலுள்ள காடுகளில் தங்கிக் கொள்வது. இரவு உங்களைப் போன்ற நண்பர்களின் வீடுகளில் சென்று சிறிது ஆகாரம் பெற்று சாப்பிட்டுக் கொள்வது என்று முடிவு செய்துள்ளேன். உங்கள் வீட்டிற்கு வந்தால் என்னை ஏற்றுக் கொள்வீர்களா?’’ என்று தழுதழுத்த குரலில் கேட்டிருக்கிறார். இவருடைய நண்பர் உள்ளம் உடைந்து, ‘‘என்ன சகோதரனே, இப்படி கேட்டுவிட்டீர்கள், உங்களுக்கு நல்ல சுகம் கிடைக்கும் வரையிலும் எங்கள் வீட்டிலேயே இருங்கள். என் பிள்ளைகளில் ஒன்றைப் போல் நான் உங்களை நேசிப்பேன்’’ என்று அனுதாபமாய் கூறியிருக்கிறார். ‘‘சரி, நாளை காலை உங்களை வந்துப் பார்க்கிறேன்’’ என்று இவர் கூற, நண்பரும் தன்னுடைய வீட்டிற்கு கடந்து போய்விட்டார்.

இவர் (ஐசக் ஞானையா) இரவு முழுவதும் அந்தத் திண்ணையிலேயே உட்கார்ந்து ஆண்டவரே! நீர் என்னை தனிமையாய் வீடு எடுத்துக் தங்கி இருக்கச் சொன்னீர். ஆனால், நான் இப்பொழுது வேலையை விட்டே வெளியேற்றப்பட்டு விட்டேன். என்னுடைய சொந்த ஊருக்கு தான் போகக்கூடாது என்று கூறினீர். நான் அங்கு போனால் பழைய விக்கிரகங்களுக்கு மீண்டும் என்னை பூசைப் பண்ணச்சொல்லி விடுவார்கள். இதையெல்லாம் நீர் அறிவீர். நான் உம்முடைய சித்தப்படியே நடக்க எனக்கு வழிகாட்டும் என்று வேண்டிக் கொண்டே இரவு வேளையைக் கழித்திருக்கிறார்.

இவர் வேலை பார்க்கும் கடைக்கு மூன்று முதலாளிகள் உண்டு. அதில் மூத்தவர்தான் இவரை வெளியே போகச் சொன்னவர். இவர்களில் இளையவர் இந்த ஐசக் ஞானையாமேல் மிகவும் பாசம் உள்ளவர். அவர் குடும்பத்துடன் வெளியே இருக்கிறார். அவருக்கு இவரை வெளியேற்றின விஷயம் தெரிந்து அதிகாலையில் மூத்த அண்ணனிடம் வந்து சத்தம் போட்டிருக்கிறார்.

‘‘நம்மிடத்தில் நம்பிக்கையாய் வேலைபார்த்த ஒரு பையனை வியாதி வந்ததற்காக நாம் வெளியேற்றினால் நல்லதா? நம்முடைய பிள்ளைகளில் ஒன்றுக்கு இப்படிபட்ட வியாதி வந்தால் வீட்டைவிட்டு வெளியே தள்ளி விடுவோமா? அப்படி செய்யமாட்டோமே.

எனவே மெஸ்ஸில் ஒன்றாக வைக்க முடியாமல் போனாலும் தனியே ஒரு ரூம் எடுத்து அவனைத் தங்கவைத்து ஆவன செய்யலாம் தானே’’ என்று அவர் அண்ணனிடம் பேசி, உடனே கடைக்கு அருகாமையில் ஒரு சின்ன அறை ஒன்றை வாடகைக்கு எடுத்து அதிலே ஐசக் ஞானையாவைத் தங்கவைத்து மெஸ்ஸிலிருந்து ஆகாரம் அனுப்பிக் கொடுக்க ஏற்பாடு செய்தார். ஆனாலும் சரீரத்திலிருந்து அதிகமாகத் தண்ணீர் வெளியேறிக் கொண்டிருந்தது. இவரைப் பார்க்க வருகிற யாவரும் வாயில் கைவைத்த வண்ணமாய் பார்த்து சென்று இனி அவ்வளவுதான் என்று பேசிக் கொள்வார்களாம்.

நாங்கள் இவருக்காக ஓர் நாள் வள்ளியூரில் உபவாசித்து ஜெபித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது கர்த்தர் இவரைப் பற்றி ‘‘இவனுக்கு நான் சீக்கிரம் சுகம் அளிப்பேன். இவனைக் காணுகின்ற அனேகர் என்னை விசுவாசிக்கும்படியாக இந்த வியாதி வந்துள்ளது. இவனை சீக்கிரமாய் என்னுடைய ஊழியக்காரனாக்குவேன். இவன் மூலம் ஏராளமான மக்கள் மீட்கப்படுவார்கள். இவன் மூலம் அனேக ஊழியக்காரர்களை எழுப்புவேன். இவனுக்கு ஆறுதல் கூறி கடிதம் எழுத வேண்டும் என்று தேவன் வெளிப்படுத்தினார்.’’

தேவன் வெளிப்படுத்தின செய்தியை இவருக்கு தெரிவிப்பதற்காக ஒரு கடிதம் எழுத ஆரம்பித்தேன். தபால்காரர் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தார். எங்கிருந்து வந்திருக்கிறது என்று முகவரியைப் பார்த்தேன். ஐசக் ஞானையா, அம்மையநாயக்கனூர் என்று எழுதியிருந்தது. மிகுந்த மகிழ்ச்சியுடன் கடிதத்தை பிரித்து வாசித்தேன். தேவன் இவரைப் பற்றி வெளிப்படுத்திய செய்திக்கு முற்றிலும் மாறான செய்தி கடிதத்தில் இருந்தது.

மௌனமாக கடிதத்தை வாசித்தேன். என் ஆத்துமா எனக்குள்ளே வியாகுல மடைந்தது. என் மாமிசக் கண்களும் கண்ணீர் சொரிந்தது. என்னால் கண்ணீரை அடக்க முடியவில்லை. ஏற்கனவே வந்த லெட்டர் தண்ணீர்பட்டு எழுத்துக்கள் அழிந்திருந்தது. இப்பொழுது என்னுடைய கண்களிலிருந்து வடித்த நீரும் கடிதத்தின் எழுத்துக்கள் சிலவற்றை அழித்தது.

எழுதியிருந்த வாசகமாவது: ‘‘ஐயா! நான் உங்களை அதிகமாக

நேசிக்கிறேன். எனக்காக தாங்களும், உடன் ஊழியரும் செய்த தியாகத்தை ஒருபோதும் மறந்துவிடமாட்டேன். நான் வேலைபார்த்த கடையை விட்டு வெளியேற்றப்பட்டு விட்டேன். என்னுடைய சரீரத்திலிருந்து நீர் வழிந்துகொண்டே இருக்கிறது. என்னைக் காணுகின்ற யாவருக்கும் நான் அரோசிகமாகிவிட்டேன். நான் உங்களுக்கு எழுதும் கடைசி கடிதம் இது. என் கண்களிலிருந்து வடிந்த கண்ணீரால் கடிதமும் நனைந்து விட்டது. என்னுடைய ஆத்துமா இந்த சரீரத்தில் நீண்ட நாட்கள் தங்கிருக்காது. நான் சீக்கிரமாய் ஆண்டவரிடம் போய் விடுவேன். அங்கு சென்று புதிய எருசலேம் சபையின் மேன்மையையும், உங்கள் தியாகங்களையும் ஆண்டவரிடம் கூறுவேன். இத்துடன் முடிக்கிறேன். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக என்று எழுதியிருந்தது.

.... துக்கம் தாளாமல் கையிலிருந்த கடிதத்தை மேஜையின் மீது வைத்துவிட்டு சிறிது நேரம் கண்ணீரோடு ஜெபித்தேன். ஆ! கர்த்தாவே நீர் இந்த சகோதரனைக் குறித்து மேன்மையான காரியங்களை வெளிப்படுத்தினீரே. அவரிடமிருந்து நேர்மாறான செய்தி வந்திருக்கிறதே என்று இறைவனிடம் வேண்டினேன். கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். ‘‘மகனே! கலங்காதே, அவனுடைய சரீர வேதனையின் மிகுதியினால் இவ்வாறு எழுதியுள்ளான். உனக்கு நான் வெளிப்படுத்திய காரியங்களை நீ அவனுக்கு எழுது அதிசீக்கிரமாய் நான் அவனைக் குணமாக்குவேன். சீக்கிரமாய் அவனிடமிருந்து நல்ல செய்திகள் வரும்’’ என்று.

உடனே என்னுடைய மனக்கலக்கங்களை மாற்றிக் கொண்டு கர்த்தர் வெளிப்படுத்திய செய்தியை அவருக்கு எழுதி அனுப்பினேன். சில நாட்களுக்குப் பின் சகோதரர் ஐசக் ஞானையாவிடமிருந்து மீண்டும் கடிதம் வந்தது. ‘‘ஐயா! தேவன் எனக்கு அற்புதமான சுகம் தந்தார். என்னுடைய சரீரத்திலுள்ள ரணங்களெல்லாம் மாறி நல்ல பெலனடைந்து மீண்டும் நான் வியாபாரத்தைக் கவனித்துவருகிறேன். நான் நல்ல சுகமடைந்துள்ளதைக் கண்ட என் கடை முதலாளி, ‘‘மீண்டும் நீ கடையில் வந்து தங்கிக் கொள்ளலாமே’’ என்று கேட்டார்.

நான் அதற்கு சம்மதிக்கவில்லை. நான் தனிமையாய் வீடு எடுத்து தங்க வேண்டும். நீண்ட நேரம் ஜெபிக்க வேண்டுமென்று கர்த்தர் எனக்குக் கொடுத்த கட்டளையின்படி இப்பொழுது கிடைக்கும் சமயங்களை ஜெபத்தில் கழித்து வருகிறேன். இங்குள்ள சில சகோதரர்களும் என்னோடு ஜெபித்து வருகிறார்கள். மீண்டும் உங்களுடைய வரவை நாங்கள் எதிர்பார்க்கிறோம். எங்களுக்காக வேண்டிக் கொள்ளுங்கள்’’ என்று எழுதியிருந்தார்.

சில நாட்களுக்குப் பின் தேவ உத்தரவு பெற்று நாங்கள் அம்மை நாயக்கனூர் (கொடைரோடு) சென்றோம். அங்கே சகோதரரை சந்தித்து அவருக்காக ஜெபித்தோம். கர்த்தர் இவரைத் தம்முடைய பரிசுத்தாவியினால் அபிஷேகித்தார். அவரை மாத்திரமல்ல அவர் மூலமாய் இயேசுகிறிஸ்துவிடம் வந்திருந்த சில சகோதரர்களையும் தேவன் அபிஷேகித்தார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!''

சகோதரர் ஐசக் ஞானையாவைக் கர்த்தர் தம்முடைய சேவையைச் செய்வதற்காக அழைத்திருந்தபடியாலும் மருத்துவர்களால் தீர்க்கமுடியாத கொடிய வியாதியினின்று இவர் விடுதலைப் பெற்றுக் கொண்டபடியாலும் போகிறவருகிற எல்லா இடங்களிலும் தனக்கு அறிமுகமான யாவரிடமும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் அன்பை எடுத்துக்கூறி வந்தார்.

அம்மை நாயக்கனூருக்கு அருகே பள்ளப்பட்டி என்றொரு ஊர் இருக்கிறது. அங்கே ஆசிரியர் வேலை பார்க்கும் லாசரஸ் இம்மானுவேல் என்பவரும் அவரது துணைவியும் இருந்தார்கள். இவர்களுக்குப் புதிய எருசலேம் சபையின் உபதேசங்களையும் அங்கே கர்த்தருடைய ஆவியானவர் கிரியை செய்யும் முறைகளையும் எடுத்துக் கூறியிருக்கிறார். அந்த ஆசிரியர் குடும்பம் C.P.M சபையைத் சேர்ந்தவர்கள். இவர்களும் மேலான உபதேசங்களை அறிந்து கொள்ள விரும்பி எங்களுக்கு செய்தி அனுப்பினார்கள்.

நாங்கள் பள்ளப்பட்டிக்குப் போய் மேற்படி ஆசிரியர் குடும்பத்தை சந்தித்து மனிதன் பூரண மீட்படையும் வழிமுறைகளைக் கர்த்தருடைய வேதத்திலிருந்து எடுத்துக் காண்பித்த பொழுது அவர்களும் இந்த மேலான உபதேசங்களை ஏற்றுக்கொள்ள முன்வந்ததோடு, ''இந்த பள்ளப்பட்டியில் ஓர் கன்வென்ஷன் நடத்த வேண்டும். அதற்கான செலவுகளை நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம். இங்கே எங்களுக்கு ஒரு சபையை உருவாக்கித் தரவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்படியே கர்த்தரிடம் ஆலோசனைப் பெற்று பம்பாய்க்குத் தலைமை மேய்ப்பருக்கும் தெரிவித்து, அவர்களுடைய அனுமதியோடு பள்ளப்பட்டியில் ஒரு கன்வென்ஷன் கூட்டம் ஒழுங்கு செய்யப்பட்டது. தலைமை மேய்ப்பர் கடந்து வந்து தேவ செய்தியைக் கொடுத்தார்கள். கொடிய துன்மார்க்கர்கள் நிறைந்த ஊர். கர்த்தருடைய வார்த்தை கனமலையை நொறுக்கும் சம்மட்டியைப் போல் ஆத்துமாக்களின் உள்ளங்களை நெறுக்கினது. ஏராளமான மக்கள் கர்த்தரிடமாய் மனந்திரும்பினார்கள். இறுதிநாள் நடந்த ஞானஸ்நானக் கூட்டத்தில் 12 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று கர்த்தரோடு

உடன் படிக்கை செய்தனர். ஆராதனை ஆரம்பமானது. ஆசிரியர் லாசரஸ் இம்மானுவேல் அவர்கள் தங்கியிருந்த வீட்டை கர்த்தருடைய ஆராதனை நடத்துவதற்காகத் தந்துவிட்டு அவர்கள் வேறே வீட்டில் குடியேறி விட்டார்கள்.

இந்தப் பள்ளப்பட்டியில் நற்செய்தி கேட்ட மக்களில் சிலர் அருகேயிருக்கும் எங்கள் ஊரிலும் ஒரு நாள் நற்செய்தி அறிவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அதன்படி மறுநாளிலே சாண்ட்லாபுரம் என்ற ஊரில் கர்த்தருடைய நற்செய்தி அறிவிக்கப்பட்டது. சின்ன கிராமம்தான், மக்கள் மிகவும் வாஞ்சையோடு கர்த்தருடைய வசனத்தைக் கேட்டார்கள். அன்று லீதியாளின் இருதயத்தைத் தேவன் திறந்தது போல் இந்தக் கூட்டத்திலும் அநேகருடைய இருதயங்களை கர்த்தர் திறந்தார். இவர்களில் 8 பேர்கள் மறுநாளிலே பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று திருச்சபையுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். (அப் 2:37,38). இவ்விதமாய் மதுரை மாவட்டத்தில் பள்ளப்பட்டி என்ற ஊரில் ‘புதிய எருசலேம் சபை’ உருவானது. கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்து வந்தார். பின்பு சகோதரர் ஐசக் ஞானையாவை கர்த்தர் தம்முடைய சேவைக்காக அழைத்து அதிகாரப்படுத்தி இந்தப் பள்ளப்பட்டி சபைக்கு ஓர் ஊழியக்காரராக தேவன் ஏற்படுத்தினார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

அத்தியாயம் 16

# அந்தமான் தீவுகளில் தேவ ஊழியம்

1.8.87ல் கர்த்தருடைய சமுகத்தில் ஜெபம் செய்து கொண்டிருந்தபொழுது கர்த்தருடைய ஆவியானவர் அநேக காரியங்களைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார். அதே வேளையில், ''நீங்கள் சீக்கிரமாய் அந்தமான் தீவுக்கு செல்ல வேண்டும், அங்கேயும் என்னைத் தேடுகிற ஏராளமான மக்கள் இருக்கிறார்கள். அவர்களைச் சந்தித்து என் மந்தையில் சேர்க்க வேண்டும். இப்படியே எல்லாத் தீவுகளுக்கும் என்னுடைய வேலை கொண்டு செல்லப்பட வேண்டும்'' என்று கர்த்தர் பேசினார்.

தமிழ்நாட்டின் வேலைகள் விரிவடைந்து கொண்டிருக்கிறது. அதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறேன். இதன் மத்தியில் அந்தமானுக்கு தேவன் எப்பொழுது அனுப்புவார் என்று ஆவியில் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தோம். அதே சமயம் நமது சகோதரர் P.T.S. குமார் என்பவர் அந்தமானில் கடற்படை (Navy) யில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு கடிதம் எழுதினோம். ''சகோதரரே, கர்த்தர் அனுப்பும் பொழுது நாங்கள் கர்த்தருடைய வேலைக்காக அந்தமான் (Andaman) வருவோம்'' என்பதாக. அவர் மிகவும் சந்தோஷமடைந்து அடிக்கடி ''ஐயா, நீங்கள் எப்பொழுது அந்தமான் வருவீர்கள்? நீங்கள் வருவது கப்பலிலா? அல்லது விமானத்திலா? என்றெல்லாம் எழுதிக் கொண்டேயிருந்தார். 1987ல் போவதற்கு ஆண்டவர் உத்தரவு தரவில்லை. 1988 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஓர் நாள் ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது, ''இம்மாத இறுதிக்குள் அந்தமான் செல்ல வேண்டும். அங்கிருக்கும் P.T.S. குமாரை, சாத்தான் வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு திட்டமிட்டுள்ளான். எனவே சீக்கிரமாய்ப் போய் சந்திக்க வேண்டிய மக்களைச் சந்தித்து என் நாமத்தை மகிமைப்படுத்த வேண்டும் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.''

உடனே நாங்கள் சென்னை சபையாருக்கு விபரங்களை எழுதினோம். அங்குள்ள ஊழியர்களும் சபைமக்களும் 22-4-88ல் நாங்கள் அந்தமான் செல்வதற்கான இரண்டு விமான டிக்கெட்டுகளை வாங்கி வைத்திருந்தார்கள். நாங்கள் இங்கிருந்து (வள்ளியூர்) சென்னை சென்று 22-4-88 அன்று வெள்ளிக்கிழமை காலை 7 மணி அளவில் விமானம் ஏறி காலை சுமார் 9 மணியளவில் அந்தமான் போய் இறங்கினோம்.

தீவிற்கு சிறிது தூரத்திலிருந்தே விமானத்திலிருந்து அந்த தீவைப் பார்த்த பொழுது 'கடலின் மேல் படுத்துக் கிடக்கும் ஒரு நீளமான முதலையைப் போல' காட்சியளித்தது. விமானத்தை விட்டு இறங்கினதும்

கர்த்தரை ஸ்துதித்தோம். ''கால் மிதித்த இடத்தையெல்லாம் சொந்தமாக்கித் தருவேன் என்று கொள்ள வாக்கு மாறாத தேவனே, இந்த தீவுக்குள்ளே நாங்கள் கடந்து போகப் போகிறோம். நீர் அனுப்பின காரியங்களை செய்து முடிக்கப் பெலன் தாரும் பாதுகாவல் தாரும். தேவரீர் கூடவே வாரும்'' என்று ஜெபம் பண்ணிக் கொண்டு ஒரு மினி பஸ்ஸில் ஏறி வெளி வாசலை வந்தடைந்தோம். சகோ. P.T.S குமார் அவருடைய நேவி (Navy) உடையை அணிந்தவாறே எங்களை வரவேற்க வந்திருந்தார். எனவே கூட்டத்தில் எளிதில் அவரைக் கண்டு கொள்ள முடிந்தது. நாங்கள் வெளியே வந்ததும் வேறு இரு சகோதரர்கள் ஓடிவந்து 'PRAISE THE LORD' என்று கூறி எங்கள் கரங்களைப் பற்றிக்கொண்டார்கள். ஒருவர் பெயர் எலிசா மற்றவர் பெயர் சம்பத்குமார். இருவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள். மூவருமாக எங்களை அழைத்துக் கொண்டு போய் விருந்தினர்கள் விடுதியில் தங்க வைத்தார்கள்.

நாங்கள் அங்கே சென்றதும் காலைக் கடமைகளை முடித்துவிட்டு அன்று உபவாசநாளாய் இருந்ததால் மீண்டும் ஜெபிக்க ஆரம்பித்தோம். அந்தத் தீவின் நிலவரங்கள் பற்றியும் அங்குள்ள மக்களின் வாழ்க்கை நிலைமைப்பற்றியும், அவர்கள் எவ்விதமாய் தீயபழக்கமுடையவர்கள் என்றும், இங்குள்ள மக்களை எவ்வாறு அணுக வேண்டும் என்றும் கர்த்தருடைய ஆவியானவர் அநேக ஆலோசனைகளைத் தந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக! 23-4-88 சனிக்கிழமை வெளியே சென்று ஆத்துமாக்களைச் சந்தித்தோம்.

அன்றிரவு உபவாச வேளையானபடியால் நீண்ட நேரம் ஜெபித்தோம். 24-4-88 ஞாயிறு காலை பரிசுத்த ஆராதனையை நாங்கள் தங்கியிருந்த அறையிலேயே நடத்தினோம். சம்பத் குமார் என்ற புதிய சகோதரர் மட்டுமே எங்களுடன் ஆராதிக்க வந்திருந்தார். அந்த ஆராதனையில் சம்பத்குமாரைக் கர்த்தர் தம்முடைய தூய ஆவியினால் அபிஷேகம் பண்ணினார். அந்தமானிலும் தம்முடையவர்களைத் தெரிந்தெடுக்கிறார் என்பதைக் கண்டு கர்த்தரை மகிமைப்படுத்தினோம். அன்று மாலை, வேலையிலிருந்த வந்த சகோதரர், P.T.S குமார், தான் இன்று பரிசுத்த ஆராதனையில் பங்கு பெறமுடியாமல் போனதற்காகவும், தனக்கு பரிசுத்த ஆவி கிடைக்கவில்லையே என்றும் எண்ணி மிகவும் வருத்தப்பட்டார். மறுநாள் விடுப்பு (Leave) எடுத்துக் கொண்டு வந்துவிட்டார். ''நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய நான் உம்மைப் போக விடமாட்டேன்'' (ஆதி 32:26) என்று கூறின யாக்கோபைப் போல அன்று அவர் தேவனிடம் முறையிட்டார். நாங்களும் கர்த்தர் அவரை அபிஷேகிக்கும்படி அவருடைய தலையின் மேல்

கைகளை வைத்து ஜெபித்தோம். ‘‘தம்மைப்பற்றி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய வல்லமையை விளங்கப்பண்ணும்படி கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும் உலாவிக் கொண்டிருக்கிறது. (1 நளா. 16:9) என்று எழுதியிருக்கிறபடியே அந்தமான் தீவிலே நாங்கள் தங்கியிருந்த அறைவீட்டையும் கர்த்தருடைய கண்கள் நோக்கிப் பார்த்தது. ஆ! எத்தனை அதிசயம்! அவருடைய வல்லமை சகோதரனில் இறங்கினது. கர்த்தர் தாம் சொன்னபடியே சகோதரனை அபிஷேகித்தார். அவரோடு நாங்களும் கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூர்ந்தோம்!’’

இன்னும் பல குடும்பங்களுக்கு சகோதரர்கள் எங்களை அழைத்து சென்றார்கள். போன இடங்களிலெல்லாம் மக்கள் எங்களை மிகவும் வாஞ்சையாய் ஏற்றுக் கொண்டார்கள். சகோதரர் சேகரன் என்பவருடைய வீட்டிற்கும் நாங்கள் சென்றிருந்தோம். மிகவும் அன்புடன் எங்களை ஏற்றுக் கொண்டு உபசரித்தார்கள். இப்படி சத்தியத்தின் மேல் வாஞ்சையுள்ள மக்களை நாங்கள் கண்டபோது கர்த்தர் அந்தமானைக் குறித்துப் பேசிய வார்த்தைகளை நினைவு கூர்ந்து கர்த்தரை மகிமைப் படுத்தினோம்.

வெளியே கடந்து போய் அந்தமானின் சில பகுதிகளைப் பார்க்க தேவன் கிருபை செய்தார். 300க்கு அதிகமான தீவு கூட்டங்கள் உள்ளன. சுமார் 30 தீவுகளில் மட்டுமே மனிதர்கள் வசிக்கிறார்கள். காற்று அதிகமில்லையாதலால் கடல் அமைதலாய் அலையின்றி காணப்படுகிறது. மிகவும் அழகுவாய்ந்த இடம், கடல் நீர் பச்சை நிறத்தில் காட்சியளிக்கிறது. ஆண்டவரின் படைப்பில் இதுவும் ஓர் அற்புதமே.

இந்த தீவிலுள்ள மக்களைத் தீய பழக்கத்துக்கு வழி நடத்தும் சில தீய ஆவிகளைக் கர்த்தருடைய கட்டளையின்படி அதட்டி வெளியேற்றினோம். இதனால் பாதிக்கப்பட்ட ஆவிகள் எங்களுடைய பிரயாணத்தைத் தடைசெய்யவும், வழிப்பிரயாணத்தில் விபத்துக்களை உண்டு பண்ணவும், விசேஷமாக விமான விபத்தை உண்டு பண்ணி எங்களையே அழித்துவிட சாத்தான் திட்டமிட்டுள்ளான் என்று கர்த்தருடைய ஆவியானவர் எங்களுக்கு வெளிப்படுத்தித் தந்தார்.

எங்கள் மூலம் சந்திக்கப்பட்ட ஆத்துமாக்களைக் கூட்டி, சகோதரர் எலிசாவின் வீட்டில் ஓர் நாள் ஜெபக்கூட்டமாய் நடத்தினோம். நீங்கள் தொடர்ந்து ஜெபித்துக் கொண்டிருங்கள். நாங்கள் தமிழகத்திற்குப் போய் சீக்கிரமாய் ஒரு ஊழியக்காரரை உங்களுக்கு அனுப்பித்தருகிறோம் என்று கூறி நாங்கள் சென்னைக்கு மீண்டும் 29-4-88-ல் புறப்பட விமான டிக்கெட் வாங்கி விட்டோம்.

குறித்தநாளில் நாங்கள் விமான நிலையத்துக்கு சகோதரர்களோடு சென்றோம். விமானத்தில் மே மாதம் முழுவதற்குமே இருக்கைகள் முன் பதிவு செய்யப்பட்டு, முடிந்துவிட்டது. ஆகையால், நீங்கள் அவசரமாய் செல்வதானால் 30-4-88 கல்கத்தாவிற்கு விமானம் வழியாய்ச் சென்று அங்கிருந்து சென்னை வரலாம் என்று விமானநிலைய அதிகாரி ஒருவர் கூறினார். அந்தப் படியே கல்கத்தா செல்லும் விமானத்திற்கு டிக்கெட் வாங்கினோம். மறுநாள் 30-4-88 சனிக்கிழமை மீண்டும் சகோதரர்கள் எங்களை கல்கத்தா விமானத்திற்கு வழி அனுப்பி வைத்துவிட்டுச் சென்றுவிட்டார்கள்.

எங்களுக்குரிய டிக்கெட் சோதனைகள் முடிந்து விமானத்தில் ஏறப்போகும் சமயத்தில், விமானத்தில் சிறிது பழுது (Repair) இருக்கிறது. அதை சரிசெய்தபிறகு விமானத்தில் பயணிகள் ஏறலாம் என்று எங்களை ஒய்வு அறையில் தங்க வைத்துவிட்டார்கள். மத்தியானம் வரையிலும் விமானத்தின் பழுது நீக்கப்படவில்லை. அன்று எங்கள் எல்லோரையும் பே ஐலண்டு (Bay Island) லுள்ள பெரிய ஹோட்டல் ஒன்றில் தங்க வைத்து விட்டார்கள். எப்படியும் சாத்தானின் சதி கண்டு பிடிக்கப்பட்டு முறியடிக்கப்பட்டதற்காக கர்த்தரை அன்றிரவு அதிகமாய் ஸ்துதித்தோம்.

1-5-88 அன்று 10.00 A.M. மணியளவில் எங்களை மீண்டும் விமான நிலையத்துக்கு அழைத்துச் சென்று பழுதுபார்க்கப்பட்ட விமானத்தில் ஏற்றினார்கள். பலமுறை விமானத்தில் பயணம் செய்திருக்கிறோம். மிகுந்த மகிழ்ச்சியாகவே காணப்படும். இந்த நாள் மிகவும் கலக்கமாகவே காணப்பட்டது. வேத புத்தகத்தைப் படித்துக் கொண்டே பயணத்தைத் தொடர்ந்தோம். உள்ளத்திலிருந்து என்னை அறியாமலேயே ‘‘பிளவுண்ட மலையே புகலிடம் தருமே’’ என்று பாடலை யாரோ பாடுவது போல் தோன்றினது. என் உதடுகளும் சேர்ந்து பாடினது. என் கண்கள் இரண்டிலுமிருந்து நீர்த்தாரைகள் ஓடினது. விமானத்திலும் திடீரென்று ஓர் அசைவு உண்டானது. ஆ! கர்த்தாவே, நீர் அனுப்பின காரியத்தை நிறைவேற்றிவிட்டு நாங்கள் திரும்பி விட்டோம். மீண்டும் இந்த அந்தமானுக்கு நாங்கள் வரவேண்டும் என்பது உமக்குச் சித்தமானால் எங்களை பாதுகாத்துக்கொண்டு போய்ச் சேரும் என்று விண்ணப்பித்துக் கொண்டே கண்களை மூடினேன். விமானம் கல்கத்தாவின் கரைக்கு வந்துவிட்டது. நடுப்பகல் 12.30 மணிக்கு கல்கத்தா விமான நிலையத்தில் வந்து இறங்கினோம்.

அங்கிருந்து பஸ்பிடித்து ஊழியர் ஐசக் சுப்பராஜ் வீட்டை அடைந்தோம். கல்கத்தா சபையார் பரிசுத்த ஆராதனையை முடித்துவிட்டு, ஊழியர் ஐசக்

சுப்புராஜ் விசுவாசிகளுடன் பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் அந்தமானிலிருந்து சென்னை வழியாக ஊருக்கு போகிறோம் என்று இவர்களுக்கு தகவல் கொடுத்திருந்தோம். முத்தின நாள் இரவில் நாங்கள் இருவரும் அந்தமானிலிருந்து கல்கத்தா வந்து சென்னை போவதாக ஊழியர் ஓர் தரிசனம் கண்டு விசுவாசிகளிடம் கூறிக் கொண்டிருக்கிறார். அதே சமயம் நாங்களும் அங்கே போய் சேர்ந்தோம். எல்லாருக்கும் மிகுந்த ஆச்சரியம் உண்டாகிவிட்டது. அன்று மாலையிலேயே சென்னைக்குப் புறப்பட்டு தேவகிருபையால் சுகமாய் மெட்ராஸ் வந்து செர்ந்தோம். அவ்விதமாய் அந்தமானில் 'புதிய எருசலேம் சபை'யின் ஆரம்ப வேலை நடத்தி முடிக்க தேவன் கிருபை செய்தார் கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

## "12 வயது சிறுவன் உயிரடைந்தான்"

ஒரு நாள் நம்முடைய ஊழியர் ஒருவர் வள்ளியூர் பஜாரிலிருந்து நமது ஆலயத்துக்கு வந்து கொண்டிருந்தார். வழியில் 'ஜெயமணி மருத்துவமனை' என்ற பெயரில் ஓர் மருத்துவமனை உள்ளது. அங்கிருந்து ஒரு வாலிபப் பையன் நமது ஊழியரைப் பின் தொடர்ந்து ஆலயத்துக்குள் வந்தார். ''தம்பி! நீங்கள் யார்?'' என்று கேட்டோம். தழுதழுத்த குரலில் ''ஐயா! இங்கே நோயாளியை அழைத்து வந்தால் ஜெபிப்பீர்களா''? என்று கேட்டார். ''தம்பி! நோயாளி யார்? எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டோம்.

''என்னுடைய தம்பிதான் நோயாளி, என் அப்பா அம்மாவுடன் மருத்துவமனையில் இருக்கிறான். எங்கள் ஊர் கலந்தபனை. நாங்கள் C.S.I. கிறிஸ்தவர்கள். என்ன நோய் என்றே மருத்துவர்களால் கண்டுபிடிக்கமுடியவில்லை. ஒருவர் உங்களைப் போல் ஜிப்பாபோட்டுக்கொண்டு ரோட்டில் வந்து கொண்டிருந்ததைப் பார்த்து அந்த ஊழியரோடு போய் அவர்கள் ஜெப ஆலயம் எங்கே இருக்கிறது. என் தம்பியை அழைத்து வந்தால் ஜெபிப்பார்களா? என்று அவரிடம் கேட்டுவா, என்று என் பெற்றோர்கள் என்னை அனுப்பினார்கள்'', என்று மேற்படி தம்பி கூறினார். மாலை சுமார் 5 மணி நேரமிருக்கும், ''விசுவாசத்தோடு அழைத்து வந்தீர்களானால் கர்த்தர் உங்கள் தம்பிக்கு சுகம் அளிப்பார்'' என்று கூறி அனுப்பினோம்.

அன்றைய தினம் வெளியூரிலிருந்து கர்த்தருடைய ஆலோசனை பெறுவதற்காக சில புதிய ஆத்துமாக்கள் ஆலயத்திற்கு வந்திருந்தார்கள். அவர்களோடு பேசிக்கொண்டிருந்தோம். சுமார் அரை மணி நேரத்துக்குள் மேற்படி பையனும் அவனுடைய அம்மா, அப்பா, நோயாளியாயிருக்கிற தம்பி ஆகிய நால்வரும் ஆலயத்துக்குள் வந்தார்கள்.

பையனை உட்கார வைத்து இவனுக்கு என்ன வியாதி? வியாதி வந்து எவ்வளவு காலம் ஆகிறது? டாக்டர் என்ன சொன்னார்கள்? என்று சில காரியங்களை பையனுடைய பெற்றோர்களிடம் பேசி கொண்டிருந்தோம். அப்போது, பையன் கீழே விழுந்து கை, கால்களெல்லாம் வெட்டி வெட்டி இழுத்தது. பெற்றோர்கள் கைகளையும் கால்களையும் பிடித்தார்கள். சில வினாடிகளில் பையனின் ஆவி பிரிந்துவிட்டது.

பையனின் தாயார் கூக்குரலிட்டு ''ஐயோ என் மகனே! இவ்வளவு சீக்கிரமாய் எங்களை விட்டு போய்விட்டாயே!'' என்று சொல்லி அழுதார்கள். பையனின் தகப்பனார் மௌனமாய் இருந்து அழுதார் எங்களுக்கு பெரிய துக்கமாகிவிட்டது. வந்திருந்த புதிய ஆத்துமாக்கள் இது என்ன இப்படி நடந்துவிட்டதே என்று திகைக்கிறார்கள்.

ஆண்டவரே, இந்த பையனின் ஆவிவெளியே இருக்கும் பொழுதே பிரிந்திருந்தால் நலமாய் இருந்திருக்குமே. உம்முடைய சமூகத்தில் வந்த பிறகு இப்படியாகிவிட்டதே. இந்த இறந்து போன பாடியை உம்முடைய ஆலயத்துக்குள்ளிருந்து வெளியே எடுத்துக் கொண்டு போனால் அக்கம் பக்கத்திலிருக்கும் புறஜாதி மக்கள் என்ன நினைப்பார்கள்? தேவரீர் உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்த வேண்டும் என்று உள்ளத்தில் ஜெபித்தேன்.

''நான் அற்புதம் நடப்பிக்கப் போகிறேன். அதைக் கண்டு புதிதாய் வந்திருக்கும் யாவரும் என்னை விசுவாசிப்பார்கள். பையன் பிழைப்பான் என்று பெற்றோர்களிடம் கூறு'' என்று கர்த்தருடைய ஆவியானவர் உள்ளத்தில் பேசினார்.

பையனுடைய தகப்பனாரின் முதுகில் கை வைத்து, ''ஐயா, நீங்கள் அழவேண்டாம் கர்த்தர் உங்கள் பையனைப் பிழைக்க வைப்பார்'' என்று கூறினேன். அவருடைய முகத்தில் நம்பிக்கை தெரிய ஆரம்பித்தது. தன்னுடைய துணைவிக்கு ஆறுதல் சொன்னார். ''அழாதே, நம்முடைய பிள்ளை பிழைக்கும் என்று ஐயா கூறுகிறார்கள். கலங்காதே நாம் ஆண்டவருடைய சந்நிதானத்தில் அல்லவா இருக்கிறோம். ஆண்டவர் நம்மை ஒருபோதும் கைவிடமாட்டார்'' என்று கூறினதும் தன் மகனுடைய உயிரற்ற சரீரத்தை அணைத்துக்கொண்டு அழுத அந்த அம்மா, எழுந்து உட்கார்ந்தார்கள்.

கர்த்தர் சொன்ன வார்த்தையில் விசுவாசம் வைத்து உடன் ஊழியர்களோடு சேர்ந்து நின்று மீண்டும் பையனுடைய உயிர் அவனுக்குள் வரவேண்டும் என்று மிகவும் துயரமாய் கர்த்தரிடம் வேண்டினோம். கர்த்தர்

தம்முடைய ஊழியக்காரராகிய எங்களுடைய ஜெபத்தைக்கேட்டார். சில வினாடிகளுக்குள் பையனுடைய உயிர் மீண்டும் அந்த சரீரத்துக்குள் வந்தது. பையன் கண் திறத்தான். உடனே எழுந்து உட்கார்ந்தான். அல்லேலூயா! தாயாருடைய கண்கள் இப்பொழுது ஆனந்தக் கண்ணீர் வடித்தது.

இயேசுவே! இயேசுவே! என் பையன் பிழைத்துக் கொண்டான் என்று சத்தமிட்டு தன் பையனை வாரி அணைத்துக் கொண்டார்கள். அற்புதமாய் உயிர் பெற்ற பையனுக்கு 12 வயது இருக்கும்.

அருமையானவர்களே, கர்த்தர் அந்த ஏழைக் குடும்பத்தின் கண்ணீரைத் துடைத்தார். எங்கள் கலக்கங்களையும் போக்கினார். ''இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராய் இருக்கிறார்'' எபி :13:8.

### அத்தியாயம் 17

# அசுத்த ஆவியும் அந்நியபாஷை பேசும்

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே! ஓர் நாள் உடன் ஊழியரும் நானும் ஜெபித்துக்கொண்டிருந்தோம். அப்பொழுது கர்த்தருடைய ஆவியானவர் ''கன்னியாகுமரி மாவட்டத்தில் ஆரல்வாய்மொழியிலுள்ள நூற்பு ஆலையில் தேவராஜ் என்ற பெயருடைய ஓர் சகோதரன் வேலை பார்க்கிறான். இவனுடைய சொந்த ஊர் மணவாளக்குறிச்சி, இவன் இந்து மதத்திலிருந்து என்னுடைய மார்க்கத்திற்குள் வந்தவன். இவனுடைய துணைவி இன்னமும் என்னை ஏற்றுக் கொள்ளவில்லை. இவர்கள் இருவருக்கும் குழந்தைகள் இல்லை. இவன் ஆரல்வாய்மொழியில் தெற்கு பகுதியில் வசித்து வருகிறான். இவனை மில்லில் போய்பார்க்க வேண்டும் இவன் மூலமாய் ஆரல்வாய்மொழியில் என்னுடைய சபையின் வேலையை நான் உருவாக்குவேன் ஆரல்வாய்மொழியில் C.S.I காம்பவுண்டுக்குள் ஓர் வீட்டில் செவ்வாய்கிழமை மாலைதோறும் கூடி ஆராதனை செய்கிறார்கள். அங்கே குறிசொல்லும் தன்மையுடைய ஒரு பெண் வந்து போகிறாள். இவள் வெளியரங்கமாய் பக்தியுள்ளவளைப்போல் காணப்படுவாள். அவளுடைய நடக்கையால் பல வாலிபர்கள் கெட்டுப் போனார்கள். இவள் கூறும் பொய்யான தீர்க்கதரிசனங்களை நம்பி ஏமாற்றமடைந்த அநேக ஊழியர்களும் விசுவாசிகளும் உண்டு. மேற்படி சகோதரன் தேவராஜ் மூலமாய் இந்தக் கூட்டம் நடக்கும். இந்த இடத்துக்குக் கடந்துபோய் இந்தக்குறி சொல்லுகிற ஆவியையுடைய பெண்ணிடமிருந்து அந்த ஆவியை துரத்த வேண்டும். அந்த ஆவிக்குள்ளாய் கட்டப்பட்ட மக்கள் விடுதலை அடைவார்கள். அந்த வீட்டுக்கு உரிமையாளரான சகோதரனை என்னுடைய ஊழியக்காரனாக்கி அவனைக் கொண்டு ஆரல்வாய்மொழியில் என்னுடைய சபையை உருவாக்குவேன்'' என்றார். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக.

கர்த்தர் பேசிச்சொன்ன காரியங்களை டைரியில் எழுதி எடுத்துக்கொண்டு நானும் உடன் ஊழியருமாக ஆரல்வாய்மொழி நூற்பு ஆலைக்கு கடந்து போனோம். அங்கிருந்த வாடச்மேனிடம், ''மணவாளக்குறிச்சியிலிருந்து ஆரல்வாய்மொழியில் தங்கியிருந்து வேலைக்கு வரும் தேவராஜ் என்பவர் வேலைக்கு வருகிறாரா? அவருக்கு எந்த சிப்ட்?'' என்று கேட்டோம். ''தேவராஜா! அவர் எனக்கு சகலப்பாடி (co-brother) தானே, அவரை உங்களுக்கு எப்படிதெரியும்? என்று கேட்டார். ''அவரைப் பார்க்கும்படி ஆண்டவர் எங்களிடம் கூறினார். ஆகையால் வந்துள்ளோம்'' என்று கூறினோம். ''அப்படியா! ஆண்டவர் கூறினாரா? ஆச்சரியமாயிருக்கின்றதே. இப்பொழுது அவர் வேலை செய்து கொண்டுதான்

இருக்கிறார். வாருங்கள் அவரிடம் உங்களை அழைத்துப் போகிறேன்'' என்று கூறிவெளிக்கேட்டிலிருந்து மில்லின் நுழைவு வாசலுக்கு அழைத்து போய் எங்களை அங்கே விட்டுவிட்டு சகோதரர் தேவராஜ் என்பவரை அழைத்துக்கொண்டு வந்தார்.

எங்களைக் கண்டதும் சகோதரர் தேவராஜ் ஸ்தோத்திரம் கூறினார். ''என்னைப்பற்றி உங்களுக்கு எப்படித்தெரியும்?'' என்று கேட்டார். கர்த்தர் இவரைப் பற்றிக் கூறிய காரியங்கள் யாவையும் கூறினோம். அவர் மிகவும் ஆச்சரியப்பட்டார். ''என்னைப்பற்றி நீங்கள் சொன்ன காரியங்கள் யாவும் உண்மைதான். என்னுடைய துனைவி இன்னமும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளவில்லை. நீங்கள் எங்கள் வீடுவரைக்கும் வந்து ஜெபம் செய்து என் துணைவிக்கும் ஆலோசனை கூற வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். நாங்களும், ''சரி! வருகிறோம்!'' என்று பதிலுரைத்தோம். உடனே மேலதிகாரிகளிடம் சென்று லீவு வாங்கிக் கொண்டு எங்களை அவருடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அவருடைய துனைவியாகிய சகோதரியும் எங்களை அன்புடன் வரவேற்றார்கள்.''

''இவர்கள் கர்த்தரால் அனுப்பப்பட்டு வந்திருக்கிறார்கள். என்னுடைய பெயரையும் ஊரையும், நான் இப்பொழுதிருக்கிற இடத்தையும், நீ இரட்சிக்கப்படாதிருக்கிறதையும் நமக்கு குழந்தை இல்லாதிருப்பதையும் ஆண்டவர் இவர்களுக்கு வெளிப்படுத்தியிருக்கிறார்'' என்று துணைவியிடம் சகோதரர் கூறினார். அந்த சகோதரி இந்த வார்த்தைகளை மிகவும் பயபக்தியோடு கேட்டார்கள்.

அந்த சகோதரிக்கும் இயேசு கிறிஸ்துவின் அன்பைப்பற்றியும் அவர் உங்களுக்கு குழந்தைச் செல்வத்தைத் தருவார் என்றும் அவரை நீங்கள் ஏற்றுக்கொண்டால் வாழ்க்கையில் பெரிய சமாதானம் உண்டாகும் என்றும் கூறினோம். அவர்களும் ''நான் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை என்னுடைய தெய்வமாக ஏற்றுக்கொள்கிறேன்'' என்று வாக்கு கொடுத்தார்கள். நாங்கள் இவர்களுக்காக ஜெபித்தோம். கர்த்தர் இவர்களை ஆசீர்வதிப்போம் என்று கூறினார்.

பின்னர் சகோதரர் தேவராஜ் ஆரல்வாய்மோழி சி.எஸ்.ஐ. காம்பவுண்டில் தேவதாசன் என்பவருடைய வீட்டில் நடைபெற்று வந்த மாலை கூட்டத்திற்கு எங்களை அழைத்துப்போனார். கூட்டம் ஆரம்பமாகும் வேளையாயிருந்தது. ஒரு சிறிய அறைதான். சுமார் 30 பேர்கள் கூடியிருந்தார்கள். ஆவிக்குரிய சபையை சார்ந்த இரண்டு ஊழியர்கள் அன்று வந்திருந்தார்கள் கூட்டத்தை ஒரு அம்மாதான் முன்னின்று நடத்தினார்.

பாட்டுகள் எல்லாம் ரொம்ப எழுப்புதலாயிருந்தது. எங்களுக்கும் சமயம் கொடுத்தார்கள். நாங்கள் எங்கள் அனுபவ சாட்சிகளைக் கூறினோம். வந்திருந்த ஊழியர்கள் செய்தி கொடுத்தார்கள். கூட்டம் முடிந்து யாவரும் சென்றுவிட்டார்கள். கூட்டம் நடந்த வீட்டுக்காரர் தேவதாசன் என்பவர், ''நீங்கள் இன்று புதிதாக வந்திருக்கிறீர்கள். உங்கள் அனுபவங்கள் எங்களுக்கு ரொம்பப் பிரயோஜனமாயிருந்தது. சிறிது நேரம் எங்களிடம் உங்கள் அனுபவங்களை பகிர்ந்து கொண்டு போகலாமே!'' என்று கேட்டார். 'சரி' என்று நாங்கள் அமர்ந்தோம்.

''ஆண்டவர் அனுப்பி இன்று வந்ததாகக் கூறினீர்களே. இந்தக் கூட்டத்தைப் பற்றி ஆண்டவர் உங்களுக்கு என்ன சொன்னார்? என்று தேவதாசன் கேட்டார். இங்கே ஒரு அம்மா கூட்டத்தை முன்னின்று நடத்தினார்களே அவர்கள் யார்? அவர்கள் எங்கேயிருந்து வருகிறார்கள்? என்று கேட்டோம். இந்த அம்மா அங்குள்ள CSI சபையின் பைபிள் உமன் (Bible Women) இவர்கள் நாகர்கோவிலிலிருந்து வருகிறார்கள்'' என்று கூறினார்.

''இந்த அம்மாவிடம் இருப்பது பரிசுத்த ஆவி அல்ல. இது ஒரு அசுத்த ஆவி. இங்கு ஆராதிக்க வருகிற அநேகருக்குள் இந்த ஆவிதான் கிரியை செய்கிறது. இந்த அம்மாவிடமிருந்து அந்த ஆவி, அந்திய பாஷையில் (அகந்த ஆவியும் அன்னிய பாஷை பேசும்) நான் இங்கே அநேகரை கறைப்படுத்தியுள்ளேன். இன்னமும் கறை படுத்துவேன்'' என்று அன்னிய பாஷையில் பேசுகிறது. ஏற்கனவே இந்த அம்மாவின் மூலம் அநேகர் இடறலடைந்திருக்கிறார்கள்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் எங்களுக்கு சொன்ன செய்திகளை கூறினோம்.

அவர் ரொம்ப ஆச்சரியப்பட்டார். ''இதுவரையில் எத்தனையோ பெந்தகோஸ்து ஊழியர்கள் வந்து போயிருக்கிறார்கள். இந்த அம்மாவின் சீர்கேட்டை யாருமே கூறவில்லை. இந்த அம்மா சொல்லும் தீர்க்கத்தரிசனத்திற்கு ஆமென்! போடுவார்கள். நீங்கள் தான் இங்குள்ள காரியங்களை சரியாக சொன்னீர்கள். இனி நீங்கள் இந்தக் கூட்டத்திற்கு வருவீர்களா? இந்த அம்மாவின் ஆவியைத் துரத்துவீர்களா?'' என்று கேட்டார். ''நாங்கள் கண்டிப்பாய் வாரம்தோறும் வருவோம். இந்த ஆவியை துரத்தி விடுவோம்'' என்று கூறிவிட்டு நாங்கள் புறப்பட்டு வந்து விட்டோம்.

கர்த்தர் எங்களை அனுப்பின காரியத்தை வாய்க்க செய்ததற்காக கர்த்தரை ஸ்துதித்தோம். மீண்டும் அடுத்த வாரம் செவ்வாய்கிழமை ஆரல்வாய்மொழி செல்வதற்கான வேளை வந்தது. ''ஆண்டவரே! அந்த குறி

சொல்லுகிற ஆவியை எப்பொழுது துரத்த வேண்டும்?'' என்று கர்த்தரிடம் வேண்டினோம். ஜெபவேளையில் ''இன்று உங்களுக்கு அவள் தீர்க்கத்தரிசனம் சொல்லுவாள். அந்த வேளையில் அந்த ஆவியை அதட்டிவிட வேண்டும்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் ஆலோசனை தந்தார். ஆலோசனைப் பெற்றுக் கொண்டு இரண்டாவது நாள் கூட்டத்திற்கு நாங்கள் ஆரல்வாய்மொழி சென்றோம். மேற்படி அம்மா வந்திருந்தார்கள். வழக்கமாய் வரும் மக்கள் வந்திருந்தார்கள். 'பைபிள் உமன்' முதலாவது ஜெபம் பண்ணி பாட்டைத் துவக்கிப் பாடினார்கள். வந்திருந்த வாலிப பெண்கள், ஆண்களுக்குள் அந்த அசுத்த வல்லமை பிரவேசித்து, எல்லோரும் இரப்பர் பந்துபோல் துள்ள ஆரம்பித்து விட்டார்கள். யாரிடமும் அந்நிய பாஷையின் சத்தம் கிடையாது. அந்நிய பாஷை ஆளை அடையாளம் காட்டும். வெறும் (Jumping) ஜம்பிங் மாத்திரம் உண்டாகிறது. எதிரும், புதிருமாக ஆண்களும், பெண்களும் உட்கார்ந்து ஆராதித்து வந்தார்கள். எல்லோரிடத்திலும் அந்த அசுத்த வல்லமை புகுந்த உடனே பெண்கள் குதித்து குதித்து ஆண்கள் உட்காரும் இடத்திற்கு வந்து விடுவார்கள். ஆண்கள் குதித்து பெண்கள் உட்காரும் இடத்திற்கு வந்து விடுவார்கள். இதை வேடிக்கைப் பார்க்க வாசலில் ஒரு கூட்டம் மக்கள் கூடிவிடுவார்கள். இதனால், கூட்டம் ஆரம்பித்ததும் கூட்டம் நடக்கும் அறையினுடைய கதவையும் பூட்டிவிடுவார்கள்.

பாட்டு முடிந்ததும் எங்களை ஜெபம் பண்ணும்படி அந்த அம்மா கூறினார்கள். நாங்கள் ஜெபித்து முடித்ததும் அந்த அம்மா ஜெபம் பண்ணினார்கள். ஜெபத்தின் ஒரு பகுதி வேளையில் அந்த அம்மா அசுத்த ஆவியின் வல்லமையால் நிறைந்தார்கள். உடனே அந்த அம்மாள் தீர்க்கத்தரிசனம் சொல்ல ஆரம்பித்தார்கள். அதுவும் ஊழியக்காரர்களாகிய எங்களுக்குத் தீர்க்கத்தரிசனம் சொன்னார்கள். தேவன் சொல்லியிருந்தபடி இந்த ஆவியை கட்டும் வேளை வந்துவிட்டது என்பதை நாங்கள் உணர்ந்தோம். எங்கள் இருவருக்குள்ளிருந்தும் பரிசுத்த ஆவியானவர் அந்த அசுத்த ஆவிக்கு விரோதமாய் கிரியை செய்ய ஆரம்பித்து விட்டார். நாங்கள் இருவரும் ஆவியில் நிறைந்து ''அப்பாலே போ சாத்தானே'' என்று இயேசுவின் நாமத்தில் அதட்டினோம். உடனே அந்த அம்மாவின் தீர்க்கத்தரிசனம் நின்றுவிட்டது. ஆவியும் வெளியேறிவிட்டது.

அல்லேலூயா! தொடர்ந்து நாங்கள் செய்தி கொடுத்து இரண்டாவது நாள் கூட்டத்தை நடத்தி முடித்தோம். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக.

### அத்தியாயம் 18

# இலங்கையில் புதிய எருசலேம் சபை

1979-ம் ஆண்டிலும் 1981-ம் ஆண்டிலும் இரண்டு முறை தேவன் எங்களை இலங்கைத் தீவுக்கு அனுப்பினார். அங்கே ஒரு சில இடங்களுக்குச் சென்று தனித்த சில குடும்பங்களை சந்தித்து தேவனுடைய வார்த்தைகளைக் கூறிவந்தோம். ''பலவானை முந்திக் கட்டினாலொழிய பலவானுடைய வீட்டுக்குள் ஒருவன் புகுந்து, அவன் உடைமைகளை எப்படிக் கொள்ளையிடக்கூடும்? கட்டினானேயாகில், அவன் வீட்டைக் கொள்ளையிடலாம்'' (மத் 12:29) என்று கர்த்தரின் வார்த்தையின்படி கர்த்தர் அனுப்பிய சில இடங்களுக்குப் போய் அந்த இடங்களை அடிமைப்படுத்தி வைத்துள்ள அநேக அசுத்த ஆவிகளைக் கர்த்தருடைய வல்லமையால் கட்டி வந்தோம்.

இதற்குப்பின்னர் 1989ம் வருடம் முதல் நாள் அதாவது, புதுவருட ஆராதனை நடக்கும்போது, ''இந்த ஆண்டில் வெளிநாடுகளுக்கு என்னுடைய வேலை செல்ல வேண்டும். என் ஊழியக்காரர்கள் தங்கள் பகைவர்களின் தேசத்தை சுதந்தரித்துக் கொள்வார்கள்'', என்று தேவன் பேசினார். ஆனால் வெளிநாட்டில் எந்த நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்று கர்த்தர் கூறவில்லை. இதன்பிறகு 17-1-89ல் ''நீங்கள் இலங்கைக்குச் செல்ல வேண்டும் அங்கே போய் என்னுடைய சபையைக் கட்ட வேண்டும்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் தீர்க்கதரிசியைக் கொண்டு பேசினார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

1988ல் புதிய எருசலேம் சபையின் சென்னைக் கிளையிலுள்ள சகோதரர் பீட்டர் என்பவருக்கு இலங்கை செல்லும் ஓர் வாய்ப்பு உண்டானது. இவர், இலங்கையில் கலவரங்கள் நடப்பதால் இலங்கை செல்வது தேவ சித்தமா என்பதை அறிய வள்ளியூருக்கு வந்திருந்தார். இவருக்காக ஜெபித்த பொழுது, ''இவன் இலங்கைக்குச் செல்வது என்னுடைய விருப்பமே. இவன் அங்குச் சென்று, தான் பெற்றுக் கொண்ட பாவமன்னிப்பாகிய இரட்சிப்பைக் குறித்தும், தான் அறிந்த சத்தியங்களைக் குறித்து அங்குள்ள மக்களிடம் சாட்சியாக கூற வேண்டும். இவன் மூலம் அநேக ஊழியர்களை சந்திப்பேன். அவர்கள் மூலம் ''புதிய எருசேலம் சபை'' இலங்கையில் உருவாக வாசலைத் திறப்பேன்'' என்று தேவனாகிய கர்த்தர் பேசினார்.

அதன்படி 1988ல் சகோதரர் பீட்டர் இலங்கை சென்று யாழ்ப்பாணத்தில் குருநகர் என்ற இடத்தில் தங்கிருந்து பெயிண்டர் வேலை பார்த்துக்கொண்டு, போகிற வருகிற இடங்களில் கர்த்தருடைய வார்த்தைகளைக் கூறி துண்டுப்

பிரதிகளையும் கொடுத்து வந்தார். ஒருநாள் அங்குள்ள 'அப்போஸ்தல விசுவாச சபைக்கும்' சென்று அங்குள்ள ஊழியர் ஜான் பிள்ளையை சந்தித்து அவரிடம் தான் பெற்றுள்ள ஆவிக்குரிய மேலான அனுபவங்களைக் கூறியிருக்கிறார்.

அவரும் இந்த உபதேசங்களை ஏற்றுக்கொள்வதாக வாக்கு கொடுத்து தலைமைக்கும் எங்களுக்கும் கடிதங்களை எழுதினார். புதிய எருசேலம் சபையின் உபதேசங்களை நானும் என்னுடன் தேவனுக்கு ஆராதனை செய்யும் தேவனுடைய பிள்ளைகளும் ஏற்றுக்கொள்கிறோம். எனவே மேற்கொண்டு ஆலோசனையைக் கூறுங்கள் என்பதாக கடிதம் எழுதியிருந்தார்.

இதே காலத்தில் இலங்கையிலுள்ள வவுனியா என்ற இடத்தில் பாஸ்டர் கிதியோன் என்பவர் கர்த்தரால் வெளிப்பாடு பெற்று ''புதிய எருசலேம் சபை'' என்று தன்னுடைய சபைக்குப் பெயரிட்டு கர்த்தருக்கு ஊழியம் செய்துவந்தார். இவர் ஓர் நாள் இலங்கையிலுள்ள மலைப்பிரதேசங்களில் வாழும் மக்களுக்கு கர்த்தருடைய செய்தியை அறிவிப்பதற்காகப் போயிருக்கிறார்.

அங்கே ஓர் விசுவாச குடும்பத்தார் இவரைத் தங்கள் வீட்டிற்கு ஜெபிப்பதற்காக அழைத்து, ''நீங்கள் எந்த சபையைச் சேர்ந்தவர்கள், எங்கே இருக்கிறீர்கள்?'' என்று கேட்க இவர், ''நான் வவுனியாவில் இருக்கிறேன் என்னுடைய சபையின் பெயர் ''புதிய எருசலேம் சபை'' என்று கூறியிருக்கிறார். இப்படிக்கூறவே மேற்படி விட்டார். ''ஓ! நீங்கள் புதிய எருசலேம் சபையா! அது இந்தியாவில் இருக்கிறதே. அதன் தலைமை ஸ்தாபனம் பம்பாயிளுள்ளது (Mumbai). இந்தியாவில் பல மாநிலங்களில் அதன் கிளைகள் இருக்கிறது. இந்தியாவில் வேகமாய் பரவி வரும் மெய் சபையல்லவா அது! நாங்கள் தமிழ் நாட்டிலுள்ள வள்ளியூரில் ஞானஸ்நானம் பெற்றோம்'' என்பதாக கூறியிருக்கிறார்கள். ''அப்படியா! இந்தியாவில் இப்படி ஓர் சபை இருக்கிறது என்று எனக்குத் தெரியாது.

கர்த்தருடைய ஆவியானவர் 'புதிய எருசலேம் சபை' என்று பெயரிட்டு ஊழியம் செய்ய வேண்டும் என்று சமீபத்தில் உத்தரவிட்டார். நான் இனி இந்தியாவுக்கு தொடர்பு கொள்கிறேன். பம்பாயிலுள்ள Chief Pastor விலாசம் கொடுங்கள்'' என்று கேட்டு வாங்கிப் பம்பாய்க்கு கடிதம் எழுதினார். ''நான் கர்த்தருடைய உத்தரவின்படி ''புதிய எருசலேம் சபை'' என்ற பெயரில் ஊழியத்தை ஆரம்பித்துள்ளேன்.

ஆனால், இந்தியாவில் இதே பெயரில் கர்த்தருடைய சபை உருவாகி

பரவி வருவதாகவும் அதன் மேன்மை பற்றியும் நான் கேள்விப்பட்டேன். நீங்கள் தேவனால் கட்டளை பெற்றிருக்கிறீர்கள். உங்களுடன் இணைந்து கர்த்தருடைய சித்தம் செய்யும்படி கர்த்தரால் ஏவப்பட்டேன் மேற்க்கொண்டு நான் என்ன செய்யவேண்டும்? எனக்கு ஆலோசனை கொடுங்கள்'' என்று எழுதினார். ''எங்கள் ஊழியர்கள் சீக்கிரம் இலங்கை வருவார்கள். நேரில் வந்து ஆலோசனை தருவார்கள் அதன்படியே செய்யுங்கள்'' என்று பாஸ்டர் கிதியோனுக்கு தலைமை ஐயா கடிதம் எழுதினார்கள்.

இதற்கிடையில் இலங்கையிலுளள சி.பி.எம். (CPM) சபையைச் சேர்ந்த பாஸ்டர் தாமஸ் என்பவரும், பாஸ்டர். சுப்ரமணியம் தேவதாசன் என்பவரும், மேற்படி சி.பி.எம். சபையை, விட்டுவெளியேறி பாஸ்டர் கிதியோனிடம் 'புதிய எருசலேம் சபை'க்கு வந்திருக்கிறார்கள், இவருடன் சேர்ந்து ஊழியம் செய்வதாக.

''நான் பம்பாயிலுள்ள புதிய எருசலேம் சபையின் Chief Pastor அவர்களுக்கு கடிதம் எழுதியிருக்கிறேன். அவர்கள் என்ன சொல்லுவார்களோ அப்படியே இந்த சபையை நடத்தப் போகிறேன். நீங்களும் அப்படிச் செய்ய சம்மதித்தால் என்னுடன் சேர்ந்து இந்த ஊழியத்தைச் செய்யலாம்'' என்று பாஸ்டர். கிதியோன் கூறவே இவர்களும் எங்களுடைய வருகையை எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எங்களுக்கு கர்த்தர் வெளிப்படுத்தியபடி நாங்கள் 6.3.89ல் இலங்கை வருகிறோம் என்பதாக யாழ் நகரிலுள்ள பாஸ்டர். ஜான் பிள்ளை அவர்களுக்கும் சகோதரர் பீட்டருக்கும், வவுனியாவிலுள்ள பாஸ்டர் கிதியோனுக்கும் கடிதம் எழுதினோம்.

சகோ. பீட்டரும், பாஸ்டர் தாமஸும் எங்களை வரவேற்க கொழும்பிலுள்ள விமான நிலையத்துக்கு வந்திருந்தார்கள். இதற்கிடையில் எங்களுடைய பிரயாணத்தை தடை செய்ய எதிராளியாகிய பிசாசானவன் பல முறைகளிலும் போராடினான். நாங்கள் ஜெயித்தோம்.

3.3.89 வெள்ளிக்கிழமை விசா வாங்குவதற்காக சென்னையிலுள்ள இலங்கைத் தூதரகத்துக்குச் சென்றிருந்தோம். ஏராளமான கூட்டம், கர்த்தருடைய கிருபையால் பகல் 1 மணிக்கு உள்ளே செல்லும் வாய்ப்பு கிடைத்தது. எங்களுடைய பாஸ்போர்ட், டிக்கெட், அந்நிய செலாவணி ஆகியவைகளை சோதிப்பதற்கான தனி அதிகாரியிடம் சென்றோம்.

அவர் எங்களை அன்புடன் விசாரணை செய்து கொண்டிருந்தார். நாங்கள் கொடுத்திருந்த விசா பாரத்தில் இலங்கையில் யாழ்ப்பாணத்திலுள்ள குருநகரில் தங்குவோம் என்பதாக எழுதியிருந்த பகுதியை படித்ததும்,

மேற்படி அதிகாரியின் முகம் வேறுபட்டு யாழ்ப்பாணத்திற்கு யாரையும் அனுமதிக்க மாட்டேன் என்று கூறிவிட்டார். மறுநாள் சனிக்கிழமை ஆபீஸ் விடுமுறை, அதற்கு அடுத்த நாள் ஞாயிறு அன்று விசா கிடைக்காது போனால் 6.3.89 திங்கள் காலையில் நாங்கள் பிரயாணப்பட முடியாது. ஆனால், அந்த அதிகாரி எங்கள் பாஸ்போர்டுகளை எடுத்துக் கொண்டு மேலதிகாரியிடம் விசாரிக்கச் சென்றுவிட்டார்.

நாங்கள் மனதில் கர்த்தரைத் துதித்து கொண்டேயிருந்தோம். ''கவலைப்படவேண்டாம். காரியங்களை வாய்க்கப்பண்ணுவேன். உங்களை அனுப்புவது நானல்லவா''! என்று ஆவியானவர் உள்ளத்திலிருந்து பேசி எங்களை ஆறுதல் படுத்திக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் மேற்படி அதிகாரி புன்முறுவலுடன் வந்து ''உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டது'' என்று கூறினார். மனதுகுள்ளேயே அல்லேலூயா! என்று கர்த்தரை மகிமைப்படுத்தினோம்.

இன்று மாலை 2 மணிக்குள் விசா கிடைத்தால் தான் மாலை 4 மணிக்குள் இந்திய அரசின் பரிசோதனைகளை முடித்துவிட்டு நாங்கள் குறித்த வேளையில் புறப்பட முடியும். இலங்கைவிசா அலுவலகத்தாரிடம் மேற்படி காரியங்களைக் கூறவே, எங்களுக்கு உடனடியாக விசா கொடுக்க ஏற்பாடு செய்தார்கள். நாங்கள் இலங்கை செல்வதற்கான அனுமதி பெற்று, சென்னையிலுள்ள செனாய் நகருக்கு வந்து சேர்ந்தோம்.

அங்கே நமது ஊழியர்களும், சில சகோதரர்களும் இருந்தார்கள். ''பத்திரிக்கையில் ஓர் பரப்பரப்பான செய்தி வந்திருக்கிறதே, இலங்கை செல்ல முடியாது போல் இருக்கிறது'', என்று கூறி ஓர் பத்திரிக்கையை எடுத்துக் காண்பித்தார்கள். இலங்கையிலுள்ள சிங்கள தீவிரவாதிகள். ''5.3.89 முதல் 12.3.89 வரையிலும் எங்களுக்கு எதிராக ஓட்டுப் போட்டவர்களைக் கொலை செய்யப்போகிறோம். கடைகள் திறக்காது. வாகனங்கள் ஓடாது. இந்நாட்களை கொலைவாரமாக அனுஷ்டிக்கப்போகிறோம்'' என்று பத்திரிக்கையில் எழுதப்பட்டிருப்பதைப் பார்த்தோம். ''யாரும் கவலைப்பட வேண்டாம் தடைகளை நீக்குகிறவர் (தேவன்) நமக்கு முன்னே கடந்து போகிறபடியால் எல்லாத் தடைகளையும் அவர் நீக்கி போடுவார்'' என்று சகோதரர்களுக்கு ஆறுதல் கூறினோம்.

6.3.89 திங்கள் கிழமை காலை 6.30 மணிக்கு சென்னை விமான நிலையத்தில் ஊழியர்களும் சபை மக்களும் எங்களை ஜெபத்துடன் அனுப்பி வைத்தார்கள். சரியாக 7.30 க்கு எங்கள் விமானம் புறப்பட்டு சரியாக 8.30க்கு இலங்கைத் தீவில் வந்து இறங்கிற்று. விமானத்தில் பயணம் செய்த ஒரு

மணிநேரமும் கர்த்தருடன் உறவாடிக் கொண்டே வந்தோம்.

கொழும்பு விமான நிலையத்தில் பரிசோதனைகள் முடிந்து நாங்கள் வெளியே வந்தோம். சகோ. பீட்டரும், பாஸ்டர். தாமஸ் என்பவரும் எங்களை யாழ்ப்பாணத்திற்கு அழைத்துப்போக வந்திருந்தனர். அவர்களுடைய அன்பு முகங்களைக் கண்டதும் எங்கள் ஆத்துமா கர்த்தருக்குள் மகிழ்ச்சியடைந்தது.

அங்கிருந்து எங்களை மட்டக்குளியாவுக்கு அழைத்துச் சென்றார்கள். எங்களுக்காக ஆயத்தம் பண்ணியிருந்த இடத்தில் மாலைவரையிலும் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டு இரவு 9 மணியளவில் பஸ் ஏறி இரவு முழுவதும் பிரயாணம் செய்து மறுநாள் காலை 10 மணியளவில் யாழ்ப்பாணத்திலுள்ள குருநகர் வந்து சேர்ந்தோம். வேகமாக பஸ்ஸில் பிரயாணம் செய்ய முடியாது. வழியின் இருபுறமும் ஆங்காங்கு மரங்களை வெட்டிப் போட்டிருக்கிறார்கள். நான்கு, ஐந்து கிலோமீட்டருக்கு ஓர் இடத்தில் செக்போஸ்ட்டுகள் உள்ளது. பஸ்ஸிலுள்ள யாவரையும் கீழே இறக்கி பரிசோதனை செய்த பின்னரே பஸ்கள் ஓடுகிறது. எங்கு பார்த்தாலும் இராணுவமாகவே காட்சியளிக்கிறது. இலங்கை மக்கள் எல்லாரும் அமைதியோடு வாழும்படி கர்த்தர் தாமே உதவி செய்வாராக.

பாஸ்டர். ஜான் பிள்ளை எங்களை அன்புடன் விசாரித்தார்கள். நாங்கள் போகுமுன்பே பம்பாயிலிருந்து தலைமை மூலம் இவருக்கு செய்தி அனுப்பப்பட்டிருந்தது. அவர் தன் சபையின் மக்களிடம், ''இந்தசபை இனி புதிய எருசலேம் சபையில் கர்த்தர் அளித்துள்ள உபதேசத்தின்படி தான் நடக்கும், என்று தன் சபையின் விசுவாசிகளுக்கு சொல்ல எல்லோரும் ஒப்புதல் கொடுத்து ஏற்றுக்கொண்டனர். சபையின் மக்கள் எல்லோரும் பாவ அறிக்கை செய்தார்கள். இவர்களில் அநேகர் பரிசுத்த ஆவியைப் பெற்றார்கள்; சிலர் பிசாசின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டார்கள். அநேகர் தங்கள் உடைமைகளை (ஆபரணங்களை) கழற்றிவிட்டார்கள். ஊழியம் செய்வதற்காக தங்களை ஒப்புக் கொடுத்து இந்தியாவில் வந்து (வேத கலாச்சாலையில் வேதம் பயின்றவர்களும்) புதிய எருசலேமின் சிறப்புகளையும் தங்களுக்குத் தோன்றின சந்தேகங்களையும் கேட்டுத் தெளிவடைந்து அவர்களும் பாவஅறிக்கை செய்து பாவமன்னிப்பை பெற்றுக் கொண்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

12.3.89ல் யாழ்நகரில் பாஸ்டர். ஜாண் பிள்ளை 'புதிய எருசலேம் சபையின்' சட்ட புத்தகத்தைப் படித்துப் பார்த்து உடன்படிக்கை பத்திரத்திலும் கையொப்பமிட்டு 'புதிய எருசலேம் சபையின்' போதகராக அங்கீகாரம் பெற்றார். இவருக்கு உதவிக்காரராக சகோதரர். பீட்டரை புதிய எருசலேம்

ஊழியராக தேவன் அதிகாரப்படுத்தினார். அல்லேலூயா!

12.3.89 ஞாயிறு பரிசுத்த ஆராதனையில் ''புதிய எருசலேம் சபை'' என்னும் பெயர் பலகை பொறிக்கப்பட்டு பரிசுத்த ஆராதனை திருவிருந்துடன் ஆரம்பமானது. ஏராளமான மக்கள் கலந்து கொண்டார்கள். ''ஞானஸ்நானம் பெற்று பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்றுள்ளவர்கள், குற்றமற்ற மனச்சாட்சியுடன் இருக்கிறேன் என்று சாட்சி கூற தகுதியுடையவர்கள் ஆபரணங்களைக் கழற்றிவிட்டவர்கள் மட்டுமே, ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவிக் கொண்டு வந்து இந்தப்பந்தியில் பங்கு பெறலாம்'' என்று அறிவிக்கப்பட்டது. இந்தத் தகுதியுடைய மக்கள் கர்த்தருடைய பந்தியில் பங்கு பெற்று கர்த்தரை மகிமைப்படுத்தினார்கள். சகோதரர்களில், மரியநாயகம், அன்றோனி, ஜெபஸ்டியான் ஜீவரெத்தினம் ஆகியோர்கள் கர்த்தருடைய சேவைக்கு அழைப்புடையவர்களாகவும், சத்தியத்துக்கு சாட்சியுடையவர்களாயும் காணப்படுகிறார்கள். கர்த்தரின் வல்லமை அநேகரில் வெளிப்பட்டுக் கொண்டிருப்பதற்காக கர்த்தரை துதிக்கிறேன்.

அடுத்து கைத்தடி என்ற இடத்துக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். கலவரம் நடக்குபொழுது இந்த இடங்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தது. இங்கே ஒரு தேவனுடைய பிள்ளை தான் கட்டிய ஒரு அழகான கட்டிடத்தை கர்த்தருடைய ஊழியத்துக்காக கொடுத்துவிட்டு அயல்நாட்டுக்குச் சென்றுவிட்டார். இந்த ஸ்தலத்திலேயும் ''புதிய எருசலேம் சபையின்'' ஆராதனை நடத்த ஏற்பாடுகள் நடக்கிறது.

மூன்றாவதாக மீசாலை என்ற இடம், இங்கே ஒரு குடும்பம் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள். குடும்பமாய் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஆராதித்து வருகிறார்கள். இவர் பெயர் கணபதி என்ற மத்தேயு இவர்களுடைய வீட்டிலும் இடைநாள் கூட்டம் ஒன்று நடக்கிறது. இவர் கர்த்தருக்கு ஆலயம் கட்டுவதற்காக அழகான பிளாட் ஒன்றை நன்கொடையாககொடுத்துள்ளார். அந்த இடத்தில் புதிய எருசலேம் சபையின் ஆலயம், கர்த்தர் காண்பித்த மாதிரியின்படி கட்டுவதற்காக வரைபடம் வரைந்து கொடுத்துள்ளோம்.

நான்காவதாக, கிளிநொச்சி என்ற இடம். இங்கே ஒரு கிளைசபை உள்ளது. இதுவும் பாஸ்டர். ஜான்பிள்ளை மூலம் உருவாக்கப்பட்ட சபையாகும். இங்கும் ஒரு கூட்டம் மக்கள் ஆராதிக்கிறார்கள். இங்குள்ள மக்கள் பாவ அறிக்கை செய்தார்கள். அநேகர் பரிசுத்த ஆவி பெற்றுக்கொண்டார்கள்.

பில்லிசூனியங்களிலும், கொடிய பாவத்திலும் சிக்கித் தவித்தவர்கள்

கர்த்தருடைய வல்லமையால் விடுவிக்கப்பட்டு கர்த்தரை மகிமைப்படுத்துகிறார்கள். இங்கே பரிசுத்த ஆராதனை நடைபெறுகிறது. இந்த கிளை சபையும் புதிய எருசலேம் சபையாக இணைக்கப்பட்டுள்ளது. அதற்காக கர்த்தரை மகிமைப்படுத்துகிறேன்.

இங்கே நாங்கள் கூட்டம் முடிந்து இரவு நீண்ட நேரத்துக்குப்பிறகு ஓய்வு எடுக்க சென்றோம். அங்கேயும் சிலர் எங்களிடம் வந்து ''இரவு முழுவதும் எங்களோடு விழித்திருந்து இன்னும் மேலானவைகளைப் போதியுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்கள். இவ்விதமாய் மக்கள் உள்ளத்தில் தேவன் தாகத்தை உருவாக்கியுள்ளார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

ஐந்தாவதாக, வவுனியாவுக்கு வந்து சேர்ந்தோம். அங்கே பாஸ்டர் கிதியோன், பாஸ்டர் தாமஸ், பாஸ்டர் மணியம் தேவதாசன் ஆகியோர்களைக் கண்டோம். மாலை 6 மணிக்கு மேல் மக்கள் யாரும் வெளியே நடக்கக்கூடாது. அந்த அளவுக்கு அரசாங்கத்தால் உத்தரவிடப்பட்டுள்ளது. ஆகையால் 17.3.89 வியாழக்கிழமை பகலில் கூட்டம் நடத்த ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். வெகுதூரத்திலிருந்து மக்கள் ஆவலுடன் வந்திருந்தார்கள். புதிய எருசலேம் சபையின் சிறப்புகள் பற்றியும் சபையைக் குறித்த தேவனுடைய திட்டம் பற்றியும் வேதவாக்கியங்கள் மூலம் மக்களுக்கு விளக்கிகூறினோம். ஆராதனை முடிவில் பாஸ்டர். கிதியோன், பாஸ்டர் தாமஸ், பாஸ்டர். மணியம் தேவதாசன் ஆகியோர்கள் புதிய எருசலேம் சபையுடன் சேருவதற்கான உடன்படிக்கைபாரத்தை சபை நடுவே வாசித்துக் கையொப்பமிட்டார்கள்.

மேற்படி மூவரையும் புதிய எருசலேம் சபையின் ஊழியர்களாக சபை நடுவே அபிஷேகம் பண்ணினோம். இப்பொழுது பாஸ்டர். ஜான்பிள்ளை, Eld Bro. பீட்டர், பாஸ்டர் கிதியோன், பாஸ்டர். தாமஸ், பாஸ்டர். மணியம் தேவதாசன் ஆகியோர்கள் இலங்கையின் வடகிழக்கு மாகாணங்களில் ஊழியம் செய்ய ஊழியர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

18.3.89 வெள்ளிக்கிழமை வவுனியாவிலிருந்து புறப்பட்டு கொழும்புக்கு மாலையில் வந்து சேர்ந்தோம். பாஸ்டர். ஜான்பிள்ளை அவர்களுடைய சகோதரியின் வீட்டில் நாங்கள் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். அந்த சகோதரியும் அவர் கணவரும் எங்களுக்குப் பாராட்டின அன்பு மிகவும் பெரியது.

அங்கும் சில வாலிபர்கள், எங்களிடம் வந்து சத்தியங்களைக் கேட்டார்கள். கொழும்பு பட்டணத்திலும் ''புதிய எருசலேம் சபை'' எழும்ப

வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். ‘‘கர்த்தருக்குச் சித்தமானால் சீக்கிரமாய் வந்து கொழும்பிலும் சபையை எழுப்புவோம்’’ என்று பதில் கூறினோம். 20.3.89 மாலை 7.40க்கு விமானம் மூலம் மீண்டும் சென்னை வந்து சேர தேவனாகிய கர்த்தர் கிருபை செய்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக! கலவரத்தின் மத்தியிலும் ‘‘புதிய எருசலேம்’’ இலங்கையில் இறங்கிற்று. அல்லேலூயா!!

## மீண்டும் மலேசியா பயணம்

1982ம் வருடம் கர்த்தருடைய உத்தரவின்படியும் தலைமை மேய்ப்பரின் ஆலோசனையின்படியும் நாங்கள் மலேஷியா தீவுக்கு சென்று மிஸ்டர் மாணிக்கம் என்பவரை தெலுக் அன்சன் என்ற இடத்தில் சந்தித்து, அவர் மூலமாய் சில மக்களை சந்தித்து தேவனுடைய ராஜ்யத்தின் சுவிசேஷத்தை அறிவிக்க தேவன் கிருபை செய்தார். மலேஷியாவில் கோலாலம்பூர் என்ற இடத்திற்குச் சென்று மிஸ்டர். சந்தோஷம் என்பவர் வீட்டில் சில நாட்கள் தங்கி அவர்கள் மூலமாய் அநேக இடங்களுக்கு கடந்து போய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் உண்டாகும் மீட்பின் செய்திகளை அறிவிக்கத் தேவன் உதவி செய்தார். பின்னர் சிங்கப்பூர் வந்து திருமதி. ரூபி சுந்தரம் என்பவர்களுடைய வீட்டில் ஒருநாள் தங்கி கூட்டம் நடத்தி விட்டு மீண்டும் தமிழ் நாட்டுக்கு வந்து சேர்ந்தோம்.

மேற்படி மிஸ்டர் மாணிக்கம் என்பவருக்கு கர்த்தருடைய அழைப்பு கிடைக்கவே அவர் 1985ல் இந்தியாவுக்கு வந்து தன்னைக் கர்த்தருக்காக ஒப்புக் கொடுத்து முறையாக பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுப் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்று கர்த்தருடைய ஊழியக்காரராகப் புதிய எருசலேம் சபையின் தலைமை மேய்ப்பர் மூலம்அதிகாரப்படுத்தப்பட்டு மீண்டும் மலேஷியா சென்று ஆத்துமாக்களுக்கு கர்த்தருடைய செய்திகளைக் கூறி வந்தார்கள்.

கடந்த 27-4-89ல் நாங்கள் வள்ளியூரில் ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது, ‘‘மீண்டும் சீக்கிரமாய் மலேஷியாவுக்குச் சென்று அங்கே சபையைக் கட்ட வேண்டும். ஆத்துமாக்களைக் கூட்டிச் சேர்ப்பேன்,’’ என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இச்செய்தியை மலேஷியாவில் ஊழியம் செய்யும் Eld Bro மாணிக்கம் அவர்களுக்கு அறிவித்தோம். அவர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு எங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கர்த்தர் தம்முடைய வேலையை ஓர் இடத்தில் ஆரம்பிக்க வேண்டுமென்று விரும்பும் பொழுது கர்த்தருக்கும், நமக்கும் எதிராளியான பிசாசானவன் அவ்வேலையை எவ்வாறு தடை செய்யலாம் என்று அதற்கு

விரோதமாய் போராடுவான் என்பது ஏதேன் முதல் இதுவரையும் நடந்து வரும் சம்பவங்களின் மூலம் நாம் அறிவோம். ஆனாலும், முடிவில் ஜெயம் நமக்கே. நமக்கு ஜெயம் கொடுக்கிற தேவனால் நாமும் ஜெயிக்கிறோம். (1கொரி 15:57)

நாங்கள் மலேஷியாவுக்குச் செல்வதற்கு முன்னால் பம்பாய் சென்று Chief Pastor அவர்களிடம் ஆலோசனைப் பெற்றுச் செல்லவேண்டும் என்று ஆண்டவர் பேசினார். அப்படியே நாங்கள் பம்பாய் செல்வதற்காக சென்னை சென்றோம். ''வட இந்தியாவில் பேய்மழை பெய்து, புயல்காற்று வீசி பம்பாய்க்குச் செல்லும் வழியில், பூனா அருகில் பாலம் உடைந்துவிட்டது. எனவே பம்பாய் செல்லும் ரயில் வண்டிகள் ஓடவில்லை'' என்று மறுநாள் பத்திரிக்கைகளில் செய்திகளைப் பார்த்தோம். சில நாட்கள் சென்னையில் தங்கியிருந்து ஜெபித்துக் கொண்டிருந்தோம்.

பின்னர் 'தாதர் எக்ஸ்பிரஸ்' என்று ஒரு இரயில் மட்டும் ஓடுகிறது. அதுவும் சுமார் 24 மணி நேரம் காலதாமதமாகிப் பல இடங்களுக்கும் சுற்றி போகிறது என்று அறிந்தோம். ''சீக்கிரமாய் பம்பாய் போய் திரும்ப வேண்டும்'' என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். அதன்படி நாங்கள் பம்பாய் செல்வதற்கான டிக்கட் வாங்கி கர்த்தர் குறித்திருந்த நாளில் நாங்கள் தாதர் எக்ஸ்பிரஸில் சென்று கொண்டிருந்தோம். பூனா வந்ததும் பிரயாணிகளெல்லாரும் இறங்கி கேன்டீன்களில் போய் அவசர அவசரமாக உணவருந்தினார்கள். இனி எப்பொழுது ஆகாரம் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. குடிக்கிறதற்கு தண்ணீர் கூட கிடைப்பது அரிது இங்கிருந்து இரயில் இனி காட்டுப்பாதையில் செல்லவிருக்கிறது. எப்போ பம்பாய் போய்ச் சேருமோ என்று பிரயாணிகள் பேசிக் கொண்டும் புசித்துக் கொண்டும் இருக்கிறார்கள். நாங்கள் கர்த்தரிடம் ஜெபித்துக் கொண்டியிருந்தோம்.

திடீரென ரெயில் நிலையத்திலுள்ள ஒலிபெருக்கிகள் முழங்கின. ''பயணிகள் கவனிக்கவும், உடைந்து போன பாலம் சரிசெய்யப்பட்டு முடிந்தது. அநேக நாட்களுக்குப் பிறகு, இன்று இந்த இரயில் முதலாவது நேர்வழியாகச் செல்லவிருக்கிறது. பயணிகள் மகிழ்ச்சியுடன் பயணம் செய்வீர்களாக'' என்று அறிவிக்கப்பட்டது. நாங்கள் அதிகமாய் கர்த்தரை துதித்தோம். தேவன் அருளிய சொல்லி முடியாத ஈவுகளுக்காக கர்த்தரை அதிகமாய் ஸ்துதிக்கிறோம்.

குறித்த நேரத்தில் பம்பாய் போய் சேர்ந்தோம். Chief Pastor அவர்களுக்கும், உடன் ஊழியர்களும், சபைமக்களும் அன்புடன் எங்களை இரயில் நிலையத்திற்கு வந்து அழைத்துச் சென்றார்கள். 8.8.1989 புதிய

எருசலேம் சபையின் தோற்றத்தின் நாளை தலைமை சபையில் கர்த்தருக்கு விமர்சையாய் கொண்டாடி விட்டு, மீண்டும் அவசரமாய் நாங்கள் தமிழ்நாட்டுக்கு வந்து சேர்ந்தோம். கர்த்தருடைய பிள்ளைகளுடைய தியாகத்தினால் நானும் உடன் ஊழியருமாக மலேஷியா சென்று திரும்புவதற்கான ரிட்டர்ன் டிக்கட்டுகளை, மற்ற வசதிகளைத் தேவன் செய்து கொடுத்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

அடுத்து மலேஷியா செல்வதற்கான விசா வாங்கச் சென்ற பொழுது நாங்கள் கைச்செலவுக்காக அமெரிக்கன் டாலர் எத்தனை மாதங்கள் தங்குகிறோமோ அதன் தேவைக்கு வைத்துக் கொள்ளவேண்டும். ஆனால் நாங்கள் இவ்வாண்டு மார்ச் மாதம் இலங்கைக்கு அந்நியச் செலவாணியுடன் போய் வந்தபடியால் இன்னும் இரண்டு ஆண்டுகளுக்கு எங்களுக்கு அந்நியச் செலவாணி கிடையாது. எனவே உங்களை மலேஷியாவுக்கு அழைப்பவர் மலேஷியாவிலுள்ள இந்திய தூதுவர் நிலையத்துக்குப் போய் Sponsorship Declaration பாரம் நபர் ஒன்றுக்கு ஒன்று வீதம் வாங்கி அதில் இந்திய தூதுவரின் முத்திரைபதித்து அனுப்பினால் அந்நியச் செலவாணியில்லாமலே நீங்கள் மலேஷியா செல்லலாம் என்று கூறினார்கள். அப்படியே Eld Bro மாணிக்கம் அவர்களுக்கும் விபரங்களை எழுதிவிட்டு, நாங்கள் மீண்டும் வள்ளியூர் வந்தோம். Eld Bro மாணிக்கம் அவர்களுக்கு 70 வயது ஆகப்போகிறது. தன்னுடைய காரை எடுத்துக்கொண்டு சுமார் 300 கி.மீட்டர் தொலைவிலுள்ள கோலாலம்பூருக்குச் சென்று இரண்டு நாட்கள் தங்கியிருந்து எங்களுக்கு Sponsorship Declaration பாரத்தை வாங்கி சென்னைக்கு அனுப்பினார்கள். சென்னையிலிருந்து எங்களுக்கு கடிதம் வந்தது. நீங்கள் உடனே வரவேண்டும் என்று நாங்கள் மலேஷியா செல்வதற்கு முன்னால் தூத்துக்குடி சபையில் சிலர் ஞானஸ்நானம் பெற வாஞ்சையாய் இருக்கிறார்கள். போகுமுன் வந்து ஞானஸ்நானம் கொடுத்து விட்டுப்போக வேண்டும் என்று கேட்டிருந்தார்கள். நாங்களும் அடுத்தவாரம் வருகிறோம் என்பதாக வாக்குக் கொடுத்திருந்தோம்.

### “தூத்துகுடி ஊழியம்”

இப்பொழுது சென்னையிலிருந்து உடனே வரவேண்டுமென்று செய்தி வந்ததால் நாங்கள் தூத்துக்குடி சபைக்கு இரவில் போன் பண்ணினோம். நாளைக்கு நாங்கள் தூத்துக்குடி வருகிறோம். நாளை மறுநாள் காலையில் ஞானஸ்நான கூட்டத்தை முடித்து விட்டு, நாளை மறுநாள் காலை தூத்துக்குடி முத்துநகர் எக்ஸ்பிரஸில் நாங்கள் சென்னை செல்ல வேண்டும். அதற்கான டிக்கெட் ஆயத்தமாக்கி வையுங்கள் என்று தெரிவித்துவிட்டு, மறுநாள் நாங்கள் தூத்துக்குடியிலிருந்து செல்வதற்காக ஆயத்தமானோம்.

கிடைத்த செய்தியாவது நெல்லை மாவட்டத்தில் பஸ்கள் ஓடவில்லை. பாபநாசம் அருகே பஸ் தொழிலாளர்களுக்கும், மில் தொழிலாளர்களுக்கும் தகராறு உண்டாகி பலத்த சேதம். எனவே பஸ்கள் ஒன்றும் ஓடவில்லையென்று அறிந்தோம். எங்களுடைய பிரயாணங்களைத் தடை செய்வதற்காக சாத்தான் இவ்வாறு போராடுகிறபடியால் எங்களைக் கொண்டு தேவன் பெரிய காரியங்களை செய்யப்போகிறார் என்பதை அறிந்து கொண்டோம்.

பின்னர் நாங்கள் தூத்துக்குடி பாஸ்டருக்கும் செய்தி அறிவித்தோம். அவர்கள் அங்கிருந்து டாக்சி அனுப்பி எங்களை அழைத்துச் சென்றார்கள். எங்களுடைய வழியில் தடைகள் பல சாத்தானால் உண்டாயிற்று. நாங்கள் தூத்துக்குடி சென்ற மறுநாள் காலையில் ஞானஸ்நானம் பெறுவதற்கு தங்களை ஒப்புக்கொடுத்திருந்த மக்கள் பாவங்களை அறிக்கை செய்வதற்காக (மாற்.1:4,5) வந்து கொண்டிருந்தார்கள்.

அதில் ஒருவர் தாடிமுடிளெல்லாம் வளரவிட்டு கையில் ஓர் வளையமும் அணிந்து அவரும் வந்து முழங்காலில் நின்றார். அவர் பாவஅறிக்கை செய்வதற்காக அல்ல. பரிசுத்தாவியானவர் வல்லமையுள்ளவர் என்று சொல்கிறார்களே, நம்மிடத்தில் இருக்கும் வல்லமைக்கு அது நிகராகுமா? என்று பரிசோதிப்பதற்காக வந்திருந்தார்.

இவர் ஒரு கத்தோலிக்க குருவாயிருந்தார். பெயர் Fr. George இவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விட்டு விட்டு அந்நிய ஆவிகளை வணங்கவும் அவைகளால் நடத்தப்படவும் தன்னை ஒப்புக் கொடுத்து விட்டார். எல்லோரும் பாவ அறிக்கை செய்கிறார்களே நாமும் செய்யலாம் என்று பாவ அறிக்கை வேடிக்கைக்காக செய்தார். ஆனால், என்ன நடந்தது தெரியுமா? கர்த்தருடைய ஆவியானவர் இவரை சந்தித்தார். இவருடைய வல்லமை குன்றினது. நடுக்கம் இவரை ஆட்கொண்டது. அவரையே அறியாமல் அந்நிய பாஷையில் பேசினார். கண்கள் நீரைச் சொரிந்தது. எழுந்து கையிலுள்ள வளையத்தை, கழற்றி ஏறிந்தார். ‘‘நான் ஞானஸ்நானம் பெறுவதற்கு என்ன தடை?’’ என்று கேட்டார். நீர் முழு இருதயத்தோடு விசுவாசித்தால் தடையில்லை என்று கூறப்பட்டது. அவரும் ஞானஸ்நானம் பெற்று தேவனுடைய மந்தையோடு சேர்ந்து கொண்டார்.

பாவ அறிக்கை செய்து வெளியே வந்ததும். விசுவாசிகளில் சிலர், ‘‘பாதர், என்ன நடந்தது? கண்ணீரோடு வருகிறீர்களே!’’ என்று கேட்டதற்கு, ‘‘கர்த்தர் என்னை சாட்டையால் அடித்து என்னுடைய ஆணவத்தையெல்லாம் அடக்கிப் போட்டார். அவருடைய வல்லமைக்கு முன்பாக யார் நிற்க

முடியும்?'' என்று கூறினார். கர்த்தர் பெரியவர் அன்றைய ஞானஸ்நான ஆராதனையே மிகவும் மகிமையாயிருந்தது. தூத்துக்குடியிலுள்ள அந்தக் கடற்கரை கர்த்தருடைய மகிமையால் நிறைந்தது. வானந்திறக்கப்பட்டதை அநேகர் கண்டு சாட்சி பகர்ந்தார்கள். ஒரு பாவியின் மனந்திரும்புதலால் பரலோகமே மகிழும் பொழுது, அன்றைக்கு அநேக படுபாவிகள் மனந்திரும்பி கர்த்தருடைய மாசற்ற இரத்தம் கொண்டு கழுவப்பட்டார்கள். (அப். 22:16) அந்த மகிழ்ச்சி எங்களுக்கும் மூன்று தினங்களாக இருந்தது.

இதனால் தான் இந்த உலகத்தின் அதிபதி தன்னுடைய கோட்டை உடைகிறதே. தேவனுடைய நகரமாகிய புதிய எருசலேமின் கோட்டை உயர்கிறதே என்பதைக் கண்டு கோபாவேசமாய் இருக்கிறான். அவன் இருக்கட்டும் அசுத்தன், நமது வேலையை தொடருவோம், என்று நினைத்துக் கொண்டோம்.

மாலையில் எங்களுக்கு (Pearl city) முத்து நகர் எக்ஸ்பிரசில் சென்னைக்கு டிக்கெட் வாங்கி வைத்திருந்தார்கள். எங்களை வழியனுப்ப ஊழியர்களும் சபை மக்களும் ஏராளமாய் வந்து எங்களை வண்டியில் உட்கார வைத்து எல்லோரும் கை கொடுத்துச்சென்றார்கள்.

அறிமுகமான ஆனால் இனம்புரியாத ஒருவரும் சிரித்த முகத்துடன், ''என்னை மறந்து விடாதீர்கள்'' என்று சொல்லிக்கொண்டே கைகொடுத்தார். கூர்ந்து கவனித்த பிறகு அடையாளம் தெரிந்தது. அவர்தான் Fr. George இவர் வளர்த்த தலைமுடியுடன் வளர்க்கப்பட்ட தாடி மீசையுடனும் ஞானஸ்நானம் பெற்றார். இப்பொழுது முடி வெட்டி, தாடியை எடுத்து முகச்சுவரம் செய்து புது மனிதனாய் காணப்பட்டார். ரொம்ப ஆச்சரியமாய் இருந்தது. பிசாசனவன் அறிவுடைய மக்களையும் அழுக்கடைய வைத்து விடுகிறான். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தினால் உண்டாகும் மேன்மை ஒரு மனிதனை புதிய சிருஷ்டியாக்கி விடுகிறது. (2கொரி. 5:17) கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!. இப்பொழுது அவர் Bro. George ஆகப் புதிய எருசலேமில் இருக்கிறார்.

மறுநாள் காலை சென்னை வந்து இறங்கினோம். அவசர அவசரமாய் பொருட்களை செனாய் நகரில் போட்டுவிட்டு டிராவல் ஏஜன்டைப் போய்ப் பார்க்க சென்றோம். அங்கே அதிர்ச்சித் தரும் இன்னொரு செய்தி காத்திருந்தது. அதாவது வெறும் Sponsorship Declaration க்கு விசா தரமுடியாது. மலேஷியாவுக்கு இவர்களை அழைப்பவர், பாரத்தை வாங்கி அனுப்பினவர் மலேஷியன் வங்கியில் இவர்கள் பெயருக்கு 500 மலேஷியன் ரிங்கட்க்கான இரண்டு டி.டி.க்கள் (Demand Draft) அனுப்பினால் விசா தரலாம் என்று மலேஷியன் தூதுவரகத்தார் கூறுவதாக ஏஜென்ட் சொன்னார்.

இந்த விபரங்களை கடிதத்தில் எழுதி பதில் வரவேண்டுமானால் நாட்கள் பல ஆகும் என்று ஊழியர் மாணிக்கம் அவர்களுக்கு தந்தி கொடுத்தோம். விபரங்களை தெளிவாக அறிவித்தோம். கர்த்தருடைய வேலை மலேஷியாவில் வளரவேண்டும். புதிய எருசலேம் மலேஷியாவில் உருவாக வேண்டும் என்ற அயராத ஆவல் உடைய ஊழியர். மாணிக்கம் அவர்கள் தந்தி கிடைத்ததும் உடனே டி.டி. எடுத்து அனுப்பிவிட்டு எங்களுக்கு மறு தந்தியும் கொடுத்துவிட்டார்கள். டி.டி. வருகிறது. பெற்றுக்கொண்டு வெற்றியோடு வாருங்கள் என்று எழுதியிருந்தார்.

சில நாட்களுக்குள் டி.டி. வந்து சேர்ந்தது. எல்லா தேவபிள்ளைகளும் ஊழியர்களும் ஜெபித்தார்கள். கர்த்தர் அதியம் நடத்தினார். சென்னையிலுள்ள ஊழியர்களும் சபைமக்களும் எடுத்துக்கொண்ட பிரயாசம் மிகவும் பெரிது. தலைமை மேய்ப்பர் அவர்களும் அடிக்கடி கடிதம் எழுதி நான் ஜெபிக்கிறேன். கர்த்தர் காரியங்களை வாய்க்கப்பண்ணுவார். விசுவாசத்தோடு முன்னேறுங்கள் என்று எங்களை தேற்றுவார்கள்.

கர்த்தர் தடைகளை மாற்றி எங்களை 11-9-89 இரவு 12.30 மணிக்கு விமான மூலம் மலேஷியாவுக்கு அனுப்பினார். நாங்கள் மகிழ்ச்சியோடு பினாங்கில் வந்து சேர்ந்தோம். ஊழியர் மாணிக்கமும் நமது சகோதரர் லாரன்சும் கார் கொண்டு வந்து பட்டர் ஒர்த் என்ற இடத்திலுள்ள மாணிக்கம் ஐயாவுடைய வீட்டிற்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

நாங்கள் மலேஷியா போய் சேர்ந்ததும் ஊழியர் மாணிக்கம் அவர்கள் தங்கள் காரில் எங்களை அலக்ஸ்டார், சுங்கைப் பட்டாணி, பினாங்கு ஆகிய பல இடங்களுக்கு அழைத்துச் சென்றார்கள். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு பள்ளிப்படிப்புக்காக மதுரை வந்திருந்த சகோதரர் லாரன்ஸ் என்பவர் அந்நாட்களில் புதிய எருசலேம் சபைக்கு வந்து சத்தியத்தை ஏற்றுக்கொண்டு பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றிருந்தார். இவருடைய பெற்றோர்கள் மலேஷியாவிலுள்ள பேரா மாகாணத்தில் சங்கட் சலாக் எஸ்டேட்டில் இருக்கிறார்கள். லாரன்சு தன்னுடைய பள்ளிப்படிப்பை முடித்து மலேஷியா வந்துவிட்டார். இந்நாட்களில் அவரும் எங்களுக்கு ரொம்ப உதவியாய் இருந்தார். ஊழியர் மாணிக்கம் அவர்களுடைய காரை லாரன்ஸ் ஓட்டிக் கொண்டு வந்தார்.

சங்கட் சாலாக் எஸ்டேட்டுக்கு சகோ. லாரன்சுடைய வீட்டுக்குச் சென்றோம். சகோதரருடைய அப்பா தீவிரமான Roman Catholic வழிபாட்டையுடையவர். ஆண்டவர் சொன்னார். ‘‘லாரன்சுடைய தகப்பனாரின்

தலையில் கை வைத்து ஜெபித்துவிட்டு போங்கள் அவனுடைய வாழ்க்கையில் மாற்றத்தை நான் உண்டாக்குவேன்.'' என்று. அப்படியே நாங்கள் சென்றோம். எங்களை மிகவும் அன்புடன் ஏற்று எங்களுக்கு உணவு பரிமாறினார்கள்.

இரு தினங்களாவது எங்கள் வீட்டில் தங்கிச் செல்ல வேண்டும் என்று கேட்டார்கள். இல்லை நாங்கள் பல இடங்களுக்கும் செல்லவேண்டியிருப்பதால் திரும்பி வரும் வழியில் கர்த்தருக்குச் சித்தமானால் வருகிறோம் என்று கூறி வீட்டிலுள்ள யாவருக்கும் ஜெபித்துவிட்டு நாங்கள் அங்கிருந்து ஈப்போ என்ற பட்டணத்திற்கு சென்று அங்கும் பல குடும்பங்களைக் கண்டு ஜெபித்துவிட்டு அங்கிருந்து இரவு பத்து மணியளவில் ஊழியர் மாணிக்கம் அவர்களுடைய மூத்தமகள் வீட்டிற்கு தெலுக்கன்சன் என்ற இடத்துக்குப் போய் சேர்ந்தோம். சகோதரி ஹெலனும் கணவர் டாக்டர் விக்டரும் எங்களை மிகவும் அன்புடன் ஏற்று உபசரித்தார்கள்.

நாங்கள் 1982ல் மலேஷியா வந்திருந்த பொழுது சகோதரி ஹெலன் தம்பதிகளுக்கு விவாகம் ஆகி ஆறு ஆண்டுகள் ஆகியும் குழந்தைச் செல்வம் கிடைக்கவில்லை. எங்களை அழைத்துப் போய் அதற்காக ஜெபம் பண்ண வைத்தார்கள். நாங்கள் ஜெபிக்கும்போது சீக்கிரமாய் குழந்தை பாக்கியத்தைக் கொடுப்பேன் என்று கர்த்தர் சொன்னார். சில தடைகள் காணப்பட்டது. அவைகளை ஜெபித்து இயேசுவின் நாமத்தில் அப்புறப்படுத்தி விட்டு வந்தோம்.

கர்த்தர் இந்நாட்களில் அழகான இரண்டு ஆண் மக்களைக் கொடுத்திருக்கிறார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக! தாங்கள் பெற்ற இந்த ஆசீர்வாதங்களை மற்றவர்களும் பெற வேண்டும் என்று வாஞ்சித்து மறுநாளில் தங்கள் வீட்டில் ஒரு ஜெபக்கூட்டம் நடத்த ஏற்பாடு செய்து அநேக மக்களை அழைத்துக் கொண்டு வந்தார்கள். கர்த்தருடைய வார்த்தைகளைப் பிரசங்கித்து அவர்களுக்காக ஜெபித்தோம். ''இந்த கூட்டத்திற்கு வந்திருந்த ஓரிரு பெரியவர்கள் இந்த தெலுக்கன்சனிலுள்ள தமிழ் கிறிஸ்தவர்களுக்கெல்லாம் இவர்களுடைய செய்தி கிடைக்கும்படியாகச் செய்ய வேண்டும் என்று ஆலோசித்து மறுநாளில் ஆங்கிலிக்கன் சபையைச் சேர்ந்த திரு. ராசையா என்பவருடைய வீட்டில் ஏராளமான மக்கள் கூடிவர ஏற்பாடு செய்தார்கள். உங்கள் தகப்பனாகிய ஆபிரகாமையும், உங்களைப் பெற்ற சாராளையும் நோக்கிப் பாருங்கள்'' (ஏசா. 51:2) என்ற வார்த்தையைக் கொண்டு கர்த்தர் பேசினார். மிகுந்த ஆசீர்வாதமாய் இருந்தது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

பின்னர் இங்கிருந்து சலங்கோ மாகாணத்திலுள்ள கோலாலம்பூருக்கு கடந்து சென்றோம். அங்கே முன்பு 1982ல் சந்தித்த திரு. சந்தோஷம் குடும்பத்தினர் எங்களை மிகவும் அன்புடன் வரவேற்றனர். அவர்களுடைய வீட்டில் செவ்வாய் கிழமைதோறும் நடைபெறும் கூட்டங்களில் நாங்கள் தேவ செய்திகளைக் கொடுத்தோம்.

இவருடைய சகோதரர் திரு. தேவஅன்பு கர்த்தருடைய ஊழியம் செய்வதில் மிகவும் வாஞ்சையுள்ளவர். இவருடைய வீட்டிலும் இடை நாள் கூட்டங்கள் நடக்கிறது. இவர்கள் இருவரும் எங்களைப் பல இடங்களுக்கு அழைத்துப் போய் கர்த்தருடைய வார்த்தைகளைப் பிரசங்கிக்க ஏற்பாடுகள் செய்தார்கள்.

இந்த இரு குடும்பத்தினரும் எங்களிடம் பாராட்டின அன்புக்கு வார்த்தையில்லை. மக்களெல்லாரும் மிகுந்த மகிழ்ச்சியோடு கர்த்தருடைய வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு கர்த்தருக்கென்று காணிக்கைகளைக் கொடுத்து எங்களை உபசரித்தார்கள். கர்த்தர் இவர்களெல்லாரையும் ஆசீர்வதிப்பாராக!

இங்கிருந்து ஜோகூர் மாநிலத்துக்குச் சென்றோம். இந்த இடம் சிங்கப்பூருக்கு அருகாமையில் உள்ளது. சிங்கப்பூருக்கும் இந்த ஜோகூருக்கும் இடையில் ஒரு பாலம் மட்டுமே உள்ளது. 20 நிமிடங்களில் கடந்து போய் விடலாம். ஜோகூரில் பாஸ்டர் ராஜன் என்பவருடைய வீட்டில் இரு தினங்கள் தங்கி இருந்தோம். இவர் "Calvary Charismatic Center" என்ற ஸ்பதானத்தில் ஊழியம் செய்கிறார். மிகவும் அன்புள்ளவர். இவரும் துணைவியாரும் எங்களிடம் பாராட்டிய அன்பு மறக்க முடியாததே. கர்த்தர் இவர்களையும் ஆசீர்வதிப்பாராக. நாங்கள் செல்வதற்கு முந்தினநாள் இரவில் எங்களைத் தரிசனத்தில் பார்த்ததாக பாஸ்டர். ராஜன் கூறினார். உபதேசங்களை ஏற்றுக்கொண்டார்.

பின்னர் அங்கிருந்து சிங்கப்பூர் சென்றோம். 1982ல் நாங்கள் தங்கி வந்த திருமதி. ரூபி சுந்தரம் என்பவர்களுடைய வீட்டிற்குப் போய் அங்கே இரு தினங்கள் தங்கியிருந்தோம். அங்குள்ள ஆங்கிலிக்கன் சர்ச்சில் எங்களை ஓர் நாள் கர்த்தருடைய வார்த்தையைக் கூறும்படி கேட்டுக் கொண்டார்கள். அதன்படி தேவ செய்தியை கொடுத்தோம்.

அநேகருடைய உள்ளங்களைக் கர்த்தர் தொட்டார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக! திரு. சுந்தரம் அவர்களின் துணைவி பிள்ளைகள் எங்களிடம் அதிகமான அன்பு செலுத்தினார்கள். இரு தினங்களும் மாலையில் அவர்களுடைய வீடடில் ஜெபக்கூட்டம் நடத்தி ஆண்டவருடைய

வார்த்தைகளைக் கூறினோம். ஊழியர் மாணிக்கம் அவர்கள் மொழி பெயர்த்துச் சொன்னார்கள். கிறிஸ்துவினுடைய அன்பின் அகலமும், நீளமும், ஆழமும், உயரமும் இந்ததென்று அறிந்து அதற்காக கர்த்தரை ஸ்துதித்தார்கள். அவர்களும் குடும்பமாய் கர்த்தருடைய சேவைக்கு தங்களை ஒப்புக் கொடுத்திருக்கிறார்கள். கர்த்தர் இவர்களையும் ஆசீர்வதிப்பாராக.



### அத்தியாயம் 19

# பாலாசீர் லாறியுடன் ஒரு சந்திப்பு

1986ம் வருடம் ஓர் நாள் தினமணி பத்திரிகையில் ஒரு பக்கம் நிறைந்த விளம்பரத்தில் ''முக்கூடல் அருகேயுள்ள மனுஜோதி ஆசிரமத்தில் மனுஷகுமாரன் (இயேசுகிறிஸ்து) வந்திருக்கிறார். மணவாட்டிகளாக அழைக்கப்பட்ட யாவரும் அவரிடம் கூட்டி சேர்க்கப்படுகிறார்கள். மனுஷகுமாரனுக்கு மணவாட்டிகளாக விரும்புகிற யாவரும் வந்துசேருங்கள்.

இப்படிக்கு

மனுஷகுமாரன். பாலாசீர் லாறி
மனுஜோதி ஆசிரம்
திருநெல்வேலி மாவட்டம்

என்று ஓர் விளம்பரம் வந்த அந்நாட்களில் புதிய எருசலேம் சபையின் தலைமை மேய்ப்பர் தமிழ்நாட்டுக்கு (வள்ளியூர்) சபைகளை சந்திக்க வந்திருந்தார்கள். இந்த விளம்பரத்தைப் பார்த்ததும் திரு. பாலாசீர் லாறிக்கு ஒரு கடிதம் எழுதினார்கள். சகோ. லாறி அவர்களுக்கு, உங்களுடைய விளம்பரம் ஒன்றை தினமணி பத்திரிக்கையில் பார்த்தேன். உடனே கர்த்தருடைய ஆவியானவர், இந்த செய்திக்கு ஒரு மறுப்பு கொடுத்து அவனை எச்சரிக்க வேண்டும் என்று கூறினார்.

நீர் மனுஷகுமாரன் (இயேசு கிறிஸ்து) அல்ல. உம்மோடு சேர்ந்த மக்கள் மணவாட்டிகளும் அல்ல. நீர் மாமிசமான -மனிதன் நீர் மரித்துப்போவீர்; இன்ன இடத்தில் விழுந்தீர் என்பதை அறிந்து மனந்திரும்பும். இல்லையேல் அவர் (தேவன்) தம்முடைய பட்டயத்தைக் கருக்காக்குவார்'' என்று எழுதி அனுப்பினார்.

சில மாதங்கள் கழித்து ஓர் நாள் நானும் சகோதரரும் (தீர்க்கத்தரிசி) ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது தேவன் பேசிச் சொன்னது : ''பாலாசீர் லாறியை சந்திக்க வேண்டும். தவறான ஆவி ஒன்று அவனை நடத்துகிறது. இவன் ஏராளமான மக்களை அழிவின் பாதையில் நடத்திவிட்டான். இந்த மந்திரவாதியின் பெயர் வீரபுதிரன்; இந்த மந்திரவாதி ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்தவன்; இந்த மந்திரவாதி லாறியோடு இருக்கும் பொழுது உங்களை அனுப்புவேன். மந்திரவாதியினுடைய ஆவியை கட்ட வேண்டும்; லாறி மனந்திரும்பி தவறை ஒத்துக் கொண்டால் அவனை விடுவிப்பேன். இல்லையேல் தண்டிப்பேன்'' என்று ஆவியானவர் பேசினார்.

மீண்டும் சில வாரங்கள் கழித்து ஓர் நாள் ஜெபத்தில் ஆவியானவர்

பேசினார். ‘‘நாளை பிற்பகல் நீங்கள் மனுஜோதி ஆசிரமத்திற்குப் போக வேண்டும்; அங்கே அந்த மந்திரவாதி வீரபுத்திரன் வந்திருக்கிறான். அவனுடைய ஆவியைக் கட்டி லாறியோடு பேச வேண்டும். நான் உங்களோடிருந்து கிரியை நடப்பிப்பேன் தைரியமாய் போங்கள்’’ என்று ஆவியானவர் பேசினார்.

தலைமை மேய்ப்பருக்கு விபரங்களை அறிவித்துவிட்டு, மறுநாள் காலையில் திருநெல்வேலிக்குப் போய் அங்கிருந்து முக்கூடல் ரூட்டில் மாறாந்தை என்னும் ஊர் வரை பஸ்ஸில் போய் அங்கிருந்து காட்டுக்குள் ஓர் ஒற்றையடிப் பாதை வழியாக நடந்து மனுஜோதி ஆசிரமம் போய் சேர்ந்தோம். தூரத்திலே பார்க்கும் பொழுது அநேக சிறிய வீடுகள் பனை ஓலையால் கூரை போட்டு கட்டடங்கள் காணப்பட்டது. எல்லைக்குள் நுழைந்ததும் ஒரு சிறு வீட்டில் இரண்டு பேர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

எங்களைக் கண்டதும் எங்களைப் பெந்தேகோஸ்து பாஸ்டர்கள் என்று தெரிந்ததும், இருவரும் ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். ஒருவர் கேட்டார் பிரதர் நீங்கள் பெந்தேகோஸ்து பாஸ்டர்களா? இங்கே பெந்தேகோஸ்து காரர்கள் யாரும் வரமாட்டார்கள். நீங்கள்?... என்று ஆச்சரியத்தோடு கேட்டார்கள. நாங்கள் லாறி ஐயாவை பார்க்க வந்தோம். ஆண்டவர் அவரைப் பற்றி சில காரியங்கள் வெளிப்படுத்தி இருக்கிறார்’’ என்று கூறினதும் இருவருக்கும் குஷி உண்டாகி விட்டது.

‘‘பிரதர் இங்கு வந்திருக்கிற எல்லாருமே வெளிப்படுத்தல் பெற்று தான் வந்திருக்கிறார்கள். இருவரில் ஒருவர் ; நான் கன்னியாகுமரி மாவட்டத்தில் கொட்டாரம் என்ற ஊர் சி.எஸ்.ஐ. சர்ச்சில் நாட்டையராக (குருவானவராக) பணியாற்றினேன். எனக்கும் லாறி ஐயா தான் மனுஷகுமாரனாகிய மணவாளன். அவரோடு சேருகிறவர்கள் தான் மணவாட்டிகள் என்று ஆண்டவர் வெளிப்படுத்தினார். என்னுடைய பெயர் ஜோதி பாக்கியம்’’ என்று கூறினார். கூட இருந்த மற்றவரைப் பற்றியும் அவர் கூறும் பொழுது: ‘‘இவர் பெயர் வீரபுத்திரன். இவர் ஒரு பிரபலமான மந்திரவாதி. இருவரும் லாறி ஐயாவைப் பற்றி தரிசனம் கண்டு ஐயாவுடன் வந்து சேர்ந்து கொண்டார்கள். மீதி காரியங்களை இவர் கூறுவார்’’, என்று கூறினார்;

உடனே மந்திரவாதி தன்னுடைய மந்திரவித்தைகளைப் பற்றி கொஞ்சம் கூறினார். எனக்கு இந்தியாவிலுள்ள ஏராளமான பாஷைகளில் பேசத் தெரியும். விவேகானந்தரைப் போல வளர வேண்டும் என்ற வாஞ்சையில் வளர்ந்து வந்தேன். எனக்கு ஏராளமான சிஷியர்கள் உண்டு. தினமும் ஒருவேளை மத்தியானந்தான் சாப்பிடுவேன். மத்தியானம் என்ன சாப்பாடு வேண்டும்

என்று சிஷியர்கள் கேட்பார்கள். எனக்கு சாப்பாடு யாராவது கொண்டு வருவார்கள்.

நான் நிஷ்டையில் இருக்கும்பொழுது சாப்பாடு கொண்டு வருபவர் ஆணா? அல்லது பெண்ணா? அவர்கள் என்ன உடை அணிந்திருப்பார்கள்? என்பது போன்ற விபரங்களைக் கூறுவேன். அப்படியே தான் இருக்கும். ஓர் நாள் சென்னை மெரீனா பீச்சில் லாறி ஐயா மீட்டிங் (Meeting) நடத்தினார்கள். இந்தியாவிலுள்ள எந்த தலைவர்களுடைய கூட்டத்திலும் கலந்து கொள்ளாத பெருங்கூட்டத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். அப்படியானால் அங்கு வந்திருப்பவர் யார் என்று பார்க்கவேண்டும் என்று கூட்டத்தின் மேடை அருகே கடந்து போனேன். எனக்கு ரொம்ப ஆச்சரியமாயிருந்தது. இயேசு

கிறிஸ்துவை படங்களில் சிலைகளில் பார்த்திருக்கிறேன். நேரில் நான் பார்த்ததில்லை, லாறி ஐயாவை இயேசு கிறிஸ்துவாக பார்த்தேன். என்னால் அதை மறக்க முடியவில்லை. கூட்டம் முடிந்ததும் லாறி ஐயாவிடம் நான் கண்டதை கூறி அவர்களிடம் ஜெபித்து ஆசிபெற்றுக் கொண்டேன். அன்று முதல் அவர்களோடு சேர்ந்து கொண்டேன். அவர்களிடம் ஞானஸ்நானமும் பெற்றுக்கொண்டேன்'' என்று வீரபுத்திரன் கூறினார். ''இப்பொழுது ஐயா நெல்லைக்குப் போயிருக்கிறார் வந்ததும் நீங்கள் பார்க்கலாம்'' என்று கூறினார்கள்.

நாங்களும் இதுவரை பாலாசீர் லாறியைப் பார்த்ததில்லை. நாங்கள் சுமார் 5.30 மணிக்கு மாலையில் அங்கு சென்றோம். இப்பொழுது இரவு மணி 7 ஆகிவிட்டது. 7 மணி ஜெபத்திற்கு ஆயத்தமானார்கள். ஒரு சிறிய ஆலயம் ஒன்று இருக்கிறது. சுமார் 200 பேர்கள் கூடி ஆராதிக்கலாம். கொஞ்சம் மக்கள் கூடி வந்தார்கள். ஆல்ட்டரில் யாரும் நின்று ஆராதனை நடத்தக் கூடாதாம். அது மனுஷகுமாரனுடைய இடம். ஆலய கூடாரம் வலது இடது பக்கங்கள் திறந்தே இருக்கிறது. வலது பக்கம் ஒரு பெஞ்ச் போட்டு அதில் உட்கார்ந்து குருவானவர் ஜோதி பாக்யம் ஆராதனையை ஆரம்பித்து நடத்தினார்கள். பாடல்கள் யாவும் புதிய நாமத்தில் வந்த மனுஷகுமாரனைப் பற்றியே பாடினார்கள்.

மந்திரவாதியும் மக்களோடு உட்கார்ந்து பாட்டு பாடிக்கொண்டிருந்தான். நாங்கள் ஆவியில் நிரம்பி என்ன நடக்கிறதென்று பார்த்துக் கொண்டிருந்தோம். ஒரு காளி சக்தி ஒன்று அந்த ஆராதனை ஸ்தலத்திற்குள் பிரவேசித்து வந்திருக்கிற யாவருக்குள்ளும் புகுந்து யாவரையும் துள்ளிக் குதிக்க வைத்தது. நல்ல எழுப்புதலோடு அவர்கள் துள்ளிக்குதிக்கும் பொழுது நாங்கள் இருவரும் ஆவியில் நிரம்பி ஒரே நேரத்தில் அங்கு கிரியை செய்த

காளி ஆவியை கட்டினோம். ஆராதனையில் நிசப்தம் உண்டானது.

சிறிது நேரத்தில் பாலசீர் லாறி ஆராதனை ஸ்தலத்துக்குள் புகுந்தார். ஆல்ட்டரில் மேசை முன் நின்று எல்லோரையும் பார்த்தார். ஆள் கறுப்பு பேன்றும் (Pant) சிவப்பு அரைக்கை சட்டையும் போட்டிருந்தார். தோற்றத்தில் ஒரு ஆவிக்குரிய மனிதன் என்று சொல்வதற்குரிய எந்த தகுதியும் இல்லை. ஆண்டவரை துதிக்கவில்லை. ஜெபம் பண்ணவில்லை. ஜெபம் பண்ணுகிறவர்கள் மணவாளனாகிய மனுஷகுமாரனை நோக்கி ஜெபம் பண்ணி முடித்த பின் உங்களை நான் ஆசீர்வதிக்கிறேன் என்று கூறி ஆராதனையை முடித்தார். வலது பக்கம் உட்கார்ந்திருக்கிற எங்களை பார்த்தார்.

குருவானவர் ஜோதி பாக்கியத்திடம் எங்களைப் பற்றி கேட்டுத் தெரிந்து கொண்டு எங்களிடம் வந்து கை கொடுத்தார். பின்னர் அவருடைய வீட்டுக்கு முன் சிமெண்டினால் செய்த பல பெஞ்சுக்கள் போடப்பட்டிருந்தது. அதில் உட்கார்ந்து பேச ஆரம்பித்தோம். எங்களுக்குள் ஆவியானவர் குமுறிக் கொண்டே இருந்தார்.

அவரே பேச்சை ஆரம்பித்தார். ‘‘எங்களைப் பார்க்க பெந்தேகோஸ்துக் காரர்கள் வரமாட்டார்கள் என்னை விழுந்து போனான் என்று கூறுகிறார்கள். நான் என்னைப் பனை மரத்திலிருந்தா விழுந்தேன்? நான் எப்போதும் போல தான் இருக்கிறேன். நான் பிரசங்கம் பண்ணுவதை வெள்ளைக்காரர்கள் மொழி பெயர்த்து புத்தகங்களாக எழுதுவார்கள். அவர்கள் சில காரியங்களைக் கூட்டிக் குறைத்து எழுதி இருக்கலாம்.

என்னைப் பார்க்கிற சிலர் உங்களில் இயேசுவைக் காண்கிறோம் என்று கூறுவார்கள். சிலர் உங்களில் அல்லாவைக் காணுகிறோம் என்றும், சிலர் உங்களில் கிருஷ்ணாவைக் காணுகிறோம் என்றெல்லாம் கூறுவார்கள். நானாக அப்படிக் கூறவில்லை. இப்படித்தான் ஒவ்வொருவருக்கும் தரிசனம் கிடைத்து என்னிடம் வந்து சேர்ந்தார்கள்’’ என்று கூறினார்.

‘‘நீங்கள் ஒரு அப்போஸ்தலனாக இருக்கலாம். அல்லது ஒரு கடைசி கால தீர்க்கதரிசியாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் நீங்கள் மனுஷகுமாரனாக, இயேசு கிறிஸ்துவாக இருக்க முடியாது. உலகமனைத்திலும் ஆயிரமாயிரம் மக்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையை எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் தம்முடைய வருகையை குறித்து சொல்லும் பொழுது, ‘‘இதோ கிறிஸ்து இங்கே இருக்கிறார். அதோ அங்கே இருக்கிறார் என்று எவனாகிலும் சொன்னால் நம்பாதேயுங்கள். ஏனெனில் கள்ளக் கிறிஸ்துக்களும், கள்ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி கூடுமானால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களையும்

வஞ்சிக்கத்தக்கதாகப் பெரிய அடையாளங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள். இதோ முன்னதாக உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். ஆகையால், இதோ வனாந்திரத்தில் இருக்கிறார் என்று சொல்வார்களானால் புறப்படாதிருங்கள். இதோ அறைவீட்டிற்குள் இருக்கிறார் என்று சொல்வார்களானால் புறப்படாதிருங்கள்'' என்று இயேசு கிறிஸ்து சொல்லியிருக்க இந்த மனுஜோதி ஆசிரமத்தில் மனுஷகுமாரன் இருக்கிறார் என்றால், எப்படி நம்ப முடியும்.

நாங்களும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையை எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்கிறோமே,'' என்று நாங்கள் கூறினதும் லாறி ஐயா திரும்ப பேசுவதற்கு யோசித்தார். இப்பொழுது மந்திரவாதி வீரபுத்திரன் சுமார் 15 அடி தூரத்தில் ஏதோ ஓதிக்கொண்டிருந்தான். அவனுடைய காளி சக்தி ஏற்கனவே கட்டப்பட்டு விட்டதை அவன் அறியவில்லை. நாங்கள் பாலாசீர் லாறியுடன் பேசும் பொழுது கொட்டாரத்திலிருந்து வந்திருக்கும் சி.எஸ்.ஐ. பாஸ்டர் ஜோதி பாக்கியமும் கூட இருந்தார். அவர் குறுக்கிட்டு, ''பிரதர் மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்கே போய் பிரகாசிப்பது போல மனுஷகுமாரனுடைய வருகையும் இருக்கும் என்று வேதத்தில் எழுதி இருக்கிறதல்லவா. அது போல லாறி ஐயாவும் கிழக்கே (இந்தியாவில்) தோன்றி மேற்கே (அமெரிக்கா) போய் பிரகாசித்திருக்கார். இந்த வசனம் தான் இவருக்கு ஆதாரம்'' என்றார். ''இல்லை பாஸ்டர்! நீங்கள் வசனத்தை தவறாக கூறுகிறீர்கள். ''மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்கு வரைக்கும் பிரகாசிப்பது போல மனுஷகுமாரனுடைய வருகையும் இருக்கும்'' என்று இயேசு கிறிஸ்து கூறி இருக்கிறார் என்று நாங்கள் கூறினதும், இல்லை பிரதர் ஆங்கில வேதத்தில் அப்படித்தான் எழுதி இருக்கிறது என்று ஜோதி பாக்யம் கூறினார்.

''மின்னல் என்றால் தோன்றுகிற இடத்திலிருந்து மறைகின்ற இடம் வரைக்கும் மிகவேகமாக பிரகாசித்து மறைந்து விடும். நீங்கள் சொல்லுகிறபடி தோன்றுகிற இடத்தில் பிரகாசிக்காமல் மறைகின்ற இடத்தில் பிரகாசித்து வெடிப்பதை ராக்கெட் என்று கூறுவார்கள்'' என்று கூறினதும் லாறி குறுக்கிட்டு திரு. ஜோதி அவர்களிடம், ''சகோதரர்கள் பேசுவதை தடுக்க வேண்டாம் அவர்களிடமிருந்து ஞானம் வெளிப்படலாமே'' என்று கூறினார்.

''சரி ஐயா, நீங்கள் மனுஷகுமாரன் என்பதற்கு வேத ஆதாரம் வேண்டும். உங்களுக்கு தேவன் வெளிப்படுத்துகிற செய்தியை வெள்ளைக்காரர்கள் புத்தகமாக எழுதுவார்கள் என்று கூறினீர்கள். தேவன் உங்களுக்கு எப்படி வெளிப்படுத்துதல் தருவார்?'' என்று கேட்டோம். நான் தியானத்தில்

இருப்பேன் அப்பொழுது என்னுடைய ஒரு கண்ணுக்கு நேராக உருண்டையாக ஒரு ஒளி தோன்றும். அந்த ஒளிக்கூடாக சில வசனங்கள் வெளிப்படும். நான் அந்த வசனங்களை வாசித்துச் சொல்வேன். அவைகளை கூட இந்தவர்கள் எழுதி புத்தகமாக வெளியிடுவார்கள். அவர்கள் தங்கள் கருத்துக்களை கூட்டியும் குறைத்தும் அதிலே எழுதி இருக்கலாம் என்று கூறினார்.

அப்போஸ்தலனாகிய பவுல் கூறும் பொழுது : அன்றியும் சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையையும், நாம் அவரிடத்தில் சேர்க்கப்படுவதையும் குறித்து நாங்கள் உங்களை வேண்டிக் கொள்கிறது என்னவென்றால், ஒரு ஆவியினாலாவது, வார்த்தையினாலாவது, எங்களிடத்திலிருந்து வந்ததாய் தோன்றுகிற ஒரு நிரூபத்தினாலாவது, கிறிஸ்துவினுடைய நாள் சமீபமாயிருக்கிறதாகச் சொல்லப்பட்டால், உடனே சஞ்சலப்படாமலும் கலங்காமலும் இருங்கள்.

எவ்விதத்தினாலும் ஒருவனும் உங்களை மோசம் போக்காதபடிக்கு எச்சரிக்கையாய் இருங்கள். ஏனெனில் விசுவாச துரோகம் முந்தி நேரிட்டு, கேட்டின் மகனாகிய பாவ மனுஷன் வெளிப்பட்டலொழிய அந்த நாள் வராதென்று (2தெச 2:1-3) பவுல் கூறியிருக்கிறாரே. விசுவாசத் துரோகம் ஏற்பட்டுவிட்டதா? பாவ மனுஷன் (அந்திக்கிறிஸ்து) வெளிப்பட்டுவிட்டானா? அவன் எங்கே இருக்கிறான்?'' என்று நாங்கள் கேட்ட பொழுது, ''பிரதர் இந்த அளவுக்கு எனக்கு பைபிள் தெரியாது'' என்று மனுஷகுமாரன் என்று அழைக்கப்பட்ட லாறி கூறினார்.

இது வரையிலும் கொஞ்சம் தூரமாய் இருந்து ஏதோ பண்ணிக் கொண்டிருந்த மந்திரவாதி வீரபுத்திரன் : எனக்கு பைபிள் தெரியாது என்று லாறி சொன்னதைக் கேட்டதும் வேகமாய் பாய்ந்து வந்து ''ஐயா! பேச்சை நிறுத்துங்கள். பிரதர் நீங்கள் பிரயாணமாய் வந்திருக்கிறீர்கள். சாப்பிட்டு விட்டு ரெஸ்ட் எடுங்கள் நாளைக்கு பேசிக்கொள்ளலாம்'' என்று கூறினான். ''நாங்கள் ரெஸ்ட் எடுக்க இங்கே வரவில்லை. ஐயாவிடம் பேசுவதற்காகத் தான் வந்திருக்கிறோம்'' என்று கூறினதும் லாறி ஐயாவை மந்திரவாதி எழுந்திருக்க வைத்துவிட்டான்.

இரவு சுமாராக 11 மணி ஆகிவிட்டது. லாறியின் மனைவியும் சிறிது தூரத்தில் அவர்களின் வீட்டுக்கு முன் இருந்து சகல உரையாடல்களையும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ''பிரதர் நாம் சாப்பிடலாம்'' என்று லாறி கூறினார். நாங்கள் இன்று சாப்பிடவில்லை என்று கூறிவிட்டோம். ''அப்படியானால் இவர்களை அழைத்துக் கொண்டு போய் ஒரு ரூமில் தங்க

வையுங்கள்'' என்று நாட்டையர் ஜோதி பாக்கியத்திடம் லாறி கூறினார்.

நாங்கள் அந்த இடத்தை விட்டு புறப்படுமுன் வேட்டை நாய்கள் அவிழ்த்து விடப்பட்டது. நாய்கள் குரைக்கிற சத்தம் கேட்டதும், ''பிரதர் சீக்கிரம் வாருங்கள். வேற்று ஆட்களைக் கண்டால் நாய்கள் கடித்து விடும்'' என்று கூறி எங்களை இரண்டு கட்டில்கள் உள்ள ஒரு அறையில் எங்களை தங்க வைத்து விட்டு ஜோதி பாக்யம் போய்விட்டார். அந்த ரூமுக்கு மின் இணைப்பு கிடையாது. சிறிது நேரத்தில் மந்திரவாதியும், அங்கே தங்க வந்தான். அது மந்திரவாதியின் அறை என்பதை பின்பு தெரிந்து கொண்டோம். நானும் சகோதரரும் ஆளுக்கொரு கட்டிலில் அமர்ந்தோம். இரண்டு கட்டிலுக்கும் இடையுள்ள இடத்தில் ஒரு பனை ஓலைபாயை விரித்து மந்திரவாதி படுத்துக்கொண்டான்.

நாங்கள் இருவரும் இரண்டு கட்டிலும் ஜெபித்துக் கொண்டே இருந்தோம். மந்திரவாதி அடிக்கடி வெளியே போவான் வருவான். அவன் வெளியிலிருந்து வரும்பொழுதெல்லாம் எங்களை பார்ப்பான். ''என்ன பிரதர்! நீங்கள் தூங்காமலேயே இருக்கிறீர்களே?'' என்று கேட்டான். புதிய இடங்களுக்கு போனால் எங்களுக்கு தூக்கம் வருவதில்லை என்று கூறி ஜெபித்துக் கொண்டே இருந்தோம். ''மந்திரவாதி வெளியே போய் தான் இதுவரையும் பயன்படுத்தி வந்த ஆவியைக் கூப்பிட்டுப் பார்க்கிறான். அது கட்டப்பட்டு விட்டது. செயல் இழந்து விட்டது என்பதை அவன் அறிந்து கொண்டான்'' என்று ஆவியானவர் பேசினார். பொழுது விடிந்தது. மந்திரவாதியையும் காணவில்லை.

இன்று இரவில் எனக்குதேவன் வெளிப்படுத்துவதை உங்களுக்கு சொல்லுவேன் என்று லாறி சொல்லி இருந்தார். அவரையும் காணோம். மந்திரவாதி போய், ''வந்திருப்பவர்கள் இருவரும் சீக்கிரெட்டான ஆட்கள்! நீங்கள் வந்து அவர்களோடு பேச வேண்டாம்'' என்று லாறியிடம் கூறிவிட்டு மந்திரவாதி எங்கள் ரூமுக்கு வந்தான்.

''நீங்கள் லாறி ஐயாவுடைய உபதேசங்களை ஏற்றுக் கொண்டால் தான் லாறி ஐயாவைப் பற்றி உங்களுக்கு சரியாகத் தெரியும்'' என்று கூறினான். ''லாறி ஐயாவுடைய உபதேசம் என்று ஒரு உபதேசம் வேதபுத்தகத்தில் கிடையாது. அப்போஸ்தலருடைய உபதேசம் என்று தான் வேதத்தில் கூறி இருக்கிறது. அந்த உபதேசத்தை இந்த கடைசிக் காலத்தில் புதிய எருசலேம் சபையின் தலைமை மேய்ப்பருக்கு தேவன் வெளிப்படுத்தி அவர்கள் மூலமாக நாங்களும் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும் அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலிலும், ஜெபம் பண்ணுதலிலும்

உறுதியாய் தரித்திருந்தார்கள். (அப். 2:42) என்று எழுதி இருப்பது போல நாங்களும் உறுதியாய் இருக்கிறோம்'' என்று கூறினதும், ''பெந்தேகோஸ்துக் காரர்களுக்கு வேதம் தெரியாது. ஆதியிலே ஏவாளை சர்ப்பம் கற்பழித்தது : ஆகையால் தான் பொல்லாங்களால் உண்டாயிருந்தது தன் சகோதரனைக் கொலை செய்த காயீனைப் போலிருக்க வேண்டாம் என்று (1 யோவா. 3:12ல்) எழுதி இருக்கிறது'' என்று மந்திரவாதி கூறினான். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அப்போஸ்தலனாகிய பேதுருவைப் பார்த்து, இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை (மத். 16:18) என்று கூறினார். பின்னர் அதே அதிகாரத்தில் : ''எனக்குப் பின்னாகப் போ சாத்தானே'' என்று கூறினார். (மத். 16:23) இப்படிக் கூறினதினாலே பேதுரு சாத்தானுக்கு பிறக்கவில்லை. தேவனுக்கேற்றவைகளை சிந்தியாமல் மனுஷருக்கேற்றவைகளை சிந்திக்கிறாய் என்று இயேசுகூறினார். அது போல், ''தன் கிரியைகள் பொல்லாதவைகளும், தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாய் இருந்ததினிமித்தம் தானே'' (1யோ. 3:12) என்று தான் வேதம் கூறுகிறது.

ஆபேலையும் அவன் காணிக்கையையும் கர்த்தர் அங்கீகரித்தார். காயீனையும் அவன் காணிக்கையையும் அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது காயீனுக்கு எரிச்சலுண்டாகி அவன் முகநாடி வேறுபட்டது (ஆதி. 4:3-5) என்றுதான் வேதம் கூறுகிறது. அதோடு ஆதாம் தன் மனைவியாகிய ஏவாளை அறிந்தான், அவள் கர்ப்பவதியாகி காயினைப் பெற்று கர்த்தரால் ஒரு மனுஷனைப் பெற்றேன் என்றாள். (ஆதி. 4:1) என்று எழுதி இருக்க சர்ப்பம் ஏவாளை கற்பழித்தாக எப்படி கூறலாம்?'' என்று கூறினதும் மந்திரவாதி வாயடைத்துப்போனான்.

இவ்விதமாய் கர்த்தருடைய நாமத்தினால் கடந்து போய் முக்கூடல் என்ற இடத்தில் செயல்பட்டு வந்த அந்தி கிறிஸ்துவின் ஆவிகளை கட்டவும், அந்த ஊழியங்கள் நிறுத்தப்படவும் தேவன் உதவி செய்தார். தேவனுக்கு மகிமை உண்டாகட்டும்.

என்னுடைய ஆவியினாலே எல்லாம் ஆகும் என்று ஜீவனுள்ள தேவன் கூறி இருக்கிறார்.

### அத்தியாயம் 20

# கர்த்தர் எருசலேமை கட்டுகிறார்

கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம், பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு மலைகளுக்கு மேலாக உயர்த்தப்படும், எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடி வருவார்கள். திரளாக ஜனங்கள் புறப்பட்டு வந்து நாம் கர்த்தரின் பர்வதத்திற்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள் அவர் தம்முடைய வழிகளை நமக்கு போதிப்பார். நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள். ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும்''. (ஏசாயா 2:2-3) என்று ஏசாயா கூறுகிறார்.

ஏசாயா சொன்ன கடைசி காலம் இதுவாக இருக்கிறபடியால் தேவனாகிய கர்த்தர் நாம் தெரிந்து கொண்ட தலைமை மேய்ப்பர் என் லாசர் அவர்களைக் கொண்டு தேவனுடைய சரீரமான சபையாகிய ''புதிய எருசலேம்'' சபை 8-8-1968ல் கட்டி எழுப்பட்டு, இந்தியாவிலுள்ள எல்லா மாநிலங்களிலும், வெளிநாடுகளிலும் பரவி வருகிறது. ''அவர் தமது வழிகளை நமக்கு போதிப்பார்'' நாம் அவர் பாதையில் நடப்போம் என்பார்கள், என்று ஏசா 2:3ல் கூறுகிறார்.

இன்றைக்கு பிரசங்கிக்கிறவர்கள் இயேசுவின் நாமத்தினால் கிடைக்கும் தெய்வீக சுகத்தையும் உலக ஆசீர்வாதங்களையுமே போதிக்கிறார்கள். இயேசுவின் நாமத்தினாலே மனுமக்கள் பெற்றுக் கொள்ளும் பாவமன்னிப்பையும் பரிசுத்தமாக்கப்பட்டவர்களின் சுதந்திரத்தையும் பெற்றுக் கொள்ளும் வழியை போதிக்கவில்லை.

எனவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்களும் பாவிகளாகவே வாழ்கின்றார்கள்! ''என் ஜனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னை மோசம்போக்கி நீ நடக்க வேண்டிய வழியை அழித்துப் போடுகிறார்கள்'' (ஏசா 3:12) என்று ஏசாயா கூறுகிறார். ''நீங்கள் வலது புறமாய் சாயும்போது, இடது புறமாய் சாயும்போதும் வழி இதுவே, இதிலே நடவுங்கள் என்று உங்களுக்கு பின்னாலே சொல்லும் வார்த்தையை உங்கள் காதுகள் கேட்கும்'' (ஏசா. 30;20,21) என்றும் ஏசாயா கூறுகிறார்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை உலக இரட்சகராக சர்வ லோகத்தின் பாவத்தையும் சுமந்து தீர்க்கிற தேவாட்டு குட்டியாகப் பிதாவாகிய தேவன் இந்த உலகத்துக்கு அனுப்புமுன், அவரிடத்தில் மக்கள் வந்து பாவமன்னிப்பை பெற்றுக் கொள்ளும் படியாக அவருக்கு வழியை

ஆயத்தப்படுத்தும்படி முன்தூதனாக யோவான் ஸ்நானகளைத் தேவன் அனுப்பினார்.

வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தத்தைக் கேட்டு அவரிடம் போய் பாவ அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்று இரட்சிக்கப்பட்டார்கள் (மாற்கு 1:4-5, மாற். 16:16).

''பின்னும் கூப்பிட்டுச் சொல் என்று ஒரு சத்தம் உண்டாயிற்று'' (ஏசா. 40:6-8) என்று ஏசாயா சொல்லுகிறார் அந்த சத்தம் 8-8-1968ல் இந்தியாவில் பம்பாய் பட்டணத்தில் தொனிக்க ஆரம்பித்து உலக நாடுகளுக்கெல்லாம் சென்று கொண்டிருக்கிறது. ''கேட்கிறதற்கு காதுள்ளவன் கேட்கக்கடவன்'' என்று கூறுகிறது.

''கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார். துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்'' (சங். 147:2) நீங்களும் வந்து சேர்ந்து கொள்ளுங்கள்.

கர்த்தருக்குள்,
**பாஸ்டர் எஸ். சுந்தர்ராஜ்**
**பாஸ்டர் எஸ். ஏசுதாஸன்**

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :
**புதிய எருசலேம் சபை**
3-248A, தெற்கு சானல் கரை,
அனந்தன் நகர், சாலேம் நகர்,
ஆசாரிப்பள்ளம் போஸ்ட்,
நாகர்கோவில் - 629 201
கன்னியாகுமாரி மாவட்டம்
தொலைபேசி : 04652 222536